MADRAS GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS SERIES No:-14.




# நன்னூல் மூலமும்
# காண்டிகையுரையும்

Edited
by

T. CHANDRASEKHARAN, M.A., L.T.,
Curator, Government Oriental Manuscripts Library, Madras.

*and*

THE STAFF OF THE LIBRARY

*Under the Orders of the Government of Madras*

**1952**

Price Rs 2-8-0

## PREFACE.

Nannul Kandikai, which is now printed and pnblished, is a commentary on the Tamil Grammar "Nannul" in a very simple and lucid verse form. It is based upon a single palm leaf manuscript of this Library bearing R. No. 1239. The hand writing is fair and readable. The work is incomplete. The commentary on the first canto, Eluttadikaram and thirteen stanzas in Colladikaram alone are available in this Library.

A number of works have been written by many eminent scholars on Tamil Grammar, such as Tolkappiyam, Agattiyam, Viracoliyam and others. The present work is based on the above mentioned works. The author of Nannul Kandikai Urai has brought out a simple commentary elucidating all the grammatical technicalities in easy form and illustrating his remarks with a large number of examples.

## AUTHOR AND DATE.

From the brief introduction available, it is to be concluded that this work belongs to the twelfth century. The author has not mentioned his name anywhere in the work. Amarabharanan, surnamed Siyagangan, a king and a great exponent of Tamil literature, who lived in the twelfth century, wanted to bring out a simple treatise embodying the contents of Tolkappiyam and other original works. In accordance with his request the poet Pavanandi wrote Nannul in the form of verses. A number of commentators have commented on this Nannul; the shorter of the commentaries are known as Kandikai Urai and the larger ones are known as Virutti Urai. The first and the foremost commentary came from Mayilai Nathar, which is no way simple and easy to understand. The next commentary by Sri Siva Jnana Yogigal of Thiruvavaduturai Mutt gives a comparative study of the Sanskrit and Tamil Grammars.

The present commentary gives word-for-word meaning of the verses. Other intricate points are explained in a very clear manner with a large number of examples and quotations from Tolkappiyam etc. The language used by the author is very chaste, simple and easily understandable. On the whole this small work can be regarded as the most and lucid brief commentary on Nannul published so far. It is hoped this will be found highly useful to the reader and students of Tamil Literature.

My thanks are due to Sri M. Pasupathi and Sri V. S. Krishnan, Pandits of this Library for preparing the Press Copy and correcting the Proofs.

Govt. Oriental Mss. Library,
Madras.
28—1—1952.

T. CHANDRASEKHARAN.
CURATOR.

# முகவுரை

இமிழ் கடல் வரைப்பில் இனிமை சான்ற தமிழ்மொழி யில் இலக்கண நூல்களாகத் தொல்காப்பியம், அகத்தியம், வீரசோழியம், இலக்கணக் கொத்து, இலக்கணச் சூரூவளி, இலக்கண விளக்கம் முதலாய பலவகை நூல்கள் பண்டு தொட்டு நிலவுகின்றன. இவைகளெல்லாம் நுண்மாண் நுழை புல மிக்கார்க்கே யன்றி, ஏனையோர்க்கு எளிதில் படித் துணர வல்லதன்று. பன்னிரண்டாம் நூற்றூண்டினவராகக் கருதப்படும் **அமராபரண** னென்ற சிறப்புப்பெயர் வாய்ந்த **சீயகங்கன்** என்னுமரசன் தமிழிலக்கியங்களின் ஆராய்ச் சிக்கு இன்றியமையாததும், பரந்து கிடப்பதுமான தொல் காப்பியத்தைக் கற்று விதிவிலக்குகளை அறிந்து கொள்வது, சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினராகிய மனிதர்க்கு அரிதென்பதை யறிந்து, அந்நூலாற் கூறப்படும் எழுத்து முதலாய ஐந்திலக்கணங்களையும் யாவரும் இடுக்கணின்றி எளிதில் அறிந்துகொள்ள, ஒவ்வொரு பகுதியையும் சுருங்கச் சொல்லி, தொகை வகை விரியால் விளக்கி, ஓர் இலக்கண நூலைச் செய்தருளுமாறு வேண்டிக்கொள்ள, வேண்டுகோட் கிணங்கி,

> "முன்னே ரொழியப் பின்னேர் பலரினுள்
> நன்னு லார்தமக் கெந்நூ லாரும்
> இணையோ வென்னுந் துணிவே மன்னுக",

எனப் பாராட்டப் பெற்றவராகிய **பவணந்தி** முனிவர் என்பவர் இந் நன்னூலை இயற்றி வெளிப்படுத்தினர். நூல் யாப்போர் தந்தை, மகன், மருமான் என்ற முறையில் முதல், வழி, சார்பு என்ற பெயரில் நூல் செய்வோர் உண்டு. அதனை நோக்கு மிடத்து தொல்காப்பியச் சூத்திரங்களும் அகஸ்தியச் சூத்திரங் களும் பெரும்பாலன அப்படியே இவர் பலவிடங்களில் எடுத்துப் புனைந்திருக்கிறார்; ஆதலின், வழி நூலாகவும், சார்பு நூலாகவும் இந்நூல் கருதப்படுகிறது. இதனை இரண்டு அதி காரங்களை மட்டுமே யுடைத்தாகத் திகழ்வதால் "சிற்றதி காரம்", எனப் பின்னேர் வழங்கலாயினர்.

இந்நூலுக்கு உரை விசேடங்கள் பலரால் இயற்றப் பட்டிருப்பினும், இப் புதிய எளியவுரை யாரால் எழுதப்பட்ட தென அறிதற் கியலவில்லை. ஆனல், இந்நூலுக்கு முதன் முதலாக **மயிலைநாதர்** என்பவர் ஓர் உரை வகுத்துள்ளார்.

அவர், சூத்திரங்களுள் பொருள் விளங்குவனவற்றிற்குச் சுருக்கமாகவும், ஏனையவற்றிற்கு விரிவாகவும், சிலவற்றிற்கு வினு விடையாகவும், சிலவற்றிற்கு எதுகை மோனை முதலிய தொடை நயம்படவும் பொருளெழுதிச் செல்லுகின்றார். இவ்வுரை நல்லுரையாகத் திகழினும், இலக்கணங் கற்க, காண்டிகை பயில முற்படுவோருக்கு எளிதில் தெளிவதொன் றன்று. மற்று, **சங்கரநமச்சிவாயர்** விருத்தியுரை என்ப தாக ஒன்றுண்டு. இவ்வுரை அரிய வடமொழி தென்மொழி விதிகளை உரிய இடங்களில் சேர்த்து, திருவாவடுதுறை ஆதினத்து ஸ்ரீ சிவஞான யோகிகள் எளிதில்விளங்கா மேற் கோள், அரும்பதங்கள் ஆனவற்றால் புனைந்து விரிவுபட இயற்றியிருக்கிறார். இஃது இலக்கணச்சூறாவளி, இலக்கணக் கொத்து, தொல்காப்பியச் சூத்திரவிருத்தி முதலிய நூல்கள் படித்த பின்னரே தெளியவல்லது. ஆதலால் இதுவும் எளிய வுரை யொன்றன்று. இன்னும் பல வுரைகள், கல்லூரிக் கெனவும், உயர்நிலைப் பள்ளிக்கெனவும் எழுந்துள. இருப் பினும் எல்லாம் கடினமாகவும், விரிவாகவும் எளிதில் உளங் கொளற்கரிதாகவும் காணப்படுகின்றன.

ஆகவே, இவ்வுரை, சூத்திரத்திற்கு ஏற்ற முறையில், சொல்லுக்குச் சொல் உரை எழுதி, சூத்திரத்திற்குப் பின்னே மிகைபடச் சொன்னதாக அதிகம் காட்டாமல், சுருங்கிய முறையில் தெளிவாக எழுதப்பட்டிருக்கிறது. மற்றும், இவ்வுரையில் எடுத்தாண்ட வுவமைகளும் முன் னோர் தம்மின பெரும்பாலுமுள, சிறுபாலன தம்மறிவின் திறத்தாலும் ஏற்ற உவமைகள் ஆண்டுள்ளார். மற்ற காண்டிகைவுரைகளினும் வேறாயது. உரைசெய்யுமாறு நன்றாக வுள்ளது. நன்னூலினது ஆதி தொடங்கி முதலாவ தான எழுத்ததிகாரம், சொல்லதிகாரத்தில் 13–ஆம் சூத்திரம் வரையிலுமே உள்ளது.

ஆகவே இவ்வுரை பொதுமக்கட்கு மிக்க பயன்படு மென்று கருதி அரசியலார் கீழ் நாட்டுக்கலை நூல் நிலையத்தி லிருக்கும் மூவருடக் காட்லாக்கு 1239-ஆம் எண்ணின் பிரதியிலிருந்து எடுத்தெழுதிப் பதிப்பிக்கப் பெற்றதாகும்.

அவ்வாறு மூலப் பிரதியிலிருந்து பெயர்த்து எழுதி அச் சிடுவதற்குரிய வகையில் அமைத்துக் கொடுத்த இந்நூல் நிலைய பண்டிதர்கள்; ஸ்ரீ M. பசுபதி, ஸ்ரீ V. S. கிருஷ்ணன் ஆகியோர்க்கு எனது நன்றி உரியதாம்.

**தி. சந்திர சேகரன்.**

உ
சிவமயம்

# நன்னூல்
# காண்டிகையுரை



## சிறப்புப்பாயிரம்

மலர்தலை யுலகின் மல்கிரு ளகல
இலகொளி பரப்பி யாவையும் விளக்கும்
பரிதியி னொருதா னாகி முதலீ
றொப்பள வாசை முனிவிகந் துயர்ந்த
வற்புத மூர்த்திதன் னலர்தரு தன்மையின்
மனவிரு ளிரிய மாண்பொருண் முழுவது
முனிவற வருளிய மூவறு மொழியுளுங்
குணகடல் குமரி குடகம் வேங்கட
மெனுநான் கெல்லையி னிருந்தமிழ்க் கடலு
ளரும்பொரு ளைந்தையும் யாவரு முணரத்
தொகைவகை விரியிற் றருகெனத் துன்னா
ரிகலற நூறி யிருநில முழுவதுந்
தனதெனக் கோலித் தன்மத வாரணந்
திசைதொறு நிறுவிய திறலுறு தொல்சீர்க்
கருங்கழல் வெண்குடைக் கார்நிகர் வண்கைத்
திருந்திய செங்கோற் சீய கங்க
னருங்கலை விநோத னமரா பரணன்
மொழிந்தன னாக முன்னோர் நூலின்
வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்
பொன்மதிற் சனகைச் சன்மதி முனியருள்
பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி
யென்னு நாமத் திருந்தவத் தோனே.

**இது, நூல் செய்தவன் பெயர் முதலாகிய பதினொன்றையுஞ் சொல்லுகின்றது.**

இதனது பதப் பொருள் :—மலர்தலை யுலகின்—பரந்த விடத்தை யுடைய வுலகத்தில், மல்கிரு ளகல—நிறைந்தவிருள் கெட, இலகொளி பரப்பி—விளங்குங் கிரணத்தை விரித்து

யாவையும் விளக்கும்—கண்களுக்குத் தெரியத் தக்க உருவங் களை யெல்லாங் காட்டுகின்ற, பரிதியின்—சூரியனைப் போல, ஒருதானாகி—உலகங்களுக் கெல்லாம் தானொரு முதலாகி, முதலீறொப்பளவாசை முனிவிகந் துயர்ந்த—பிறப்பும், இறப் பும், மானமும், அளவும், விருப்பமும், வெறுப்பும் ஆகிய விவை களிற் சுபாவமாக நீங்கி நிற்கையினாலே தலைவனாகிய, அற்புத மூர்த்தி—ஞானமே திருமேனியாக வுடையவன், தன் னலர் தரு தன்மையின்—தனது மலர்ந்த குணமாகிய வருளினாலே, மனவிருளிரிய—உயிர்களின் மனத்திருளாகிய அஞ்ஞானங் கெட, மாண் பொருண் முழுவதும்—சிறந்த அறம், பொருள், இன்பம், வீடு என்கிற நான்கு பொருளையும், முனிவற வருளிய—ஆசையுட னருளிச் செய்த, மூவறு மொழியுளும்—பதி னெட்டு நிலத்து மொழிகளுள்ளும், குணகடல் குமரி குடகம் வேங்கடமெனு நான் கெல்லையின்—கிழக்கே கடலும், தெற்கே குமரி யாறும், மேற்கே குடக நாடும், வடக்கே திரு வேங்கடமும் ஆகிய நான் கெல்லையினை யுடைய நிலத்து மொழியாகிய, இருந்தமிழ்க் கடவுள்—இயல், இசை, நாடகம் எனப் பெயர் பெற்ற பெரிய தமிழென்னுங் கடவுள், அரும் பொருளைந்தையும்—அவ் வறமுதலாகிய நான்கு பொருளையும் அறிதற்குக் காரணமாகி அருமையாகிய இயற்றமிழென்னு மிலக்கணத்தின் கூறான, எழுத்துச் சொற் பொருள் யாப் பணி என்னு மைந்து பொருளையும், யாவரு முணர—இலக்கி யப் பழக்கத்தில் வல்லவர் மாத்திர மல்லாமல் எளியவரு மறிய, தொகை வகை விரியிற் றருகென—தொகுத்தும் வகுத்தும் விரித்துஞ் செய்யப்படும் யாப்பினாலே பாடித் தருக வென, துன்னாரிகலற நூறி—பகைவரது பகைமை கெட அவரையழித்து, இருநில முழுவதுந் தனதெனக் கோலி— பெரிய பூமி முழுவதையுந் தன்னுடைய தாகப் பற்றிக் கொண்டு, தன் மத வாரணந் திசை தொறு நிறுவிய—தன் மதயானைகளை எட்டுத் திக்கிலுந் திக்கியானைகளைப் போல் நிறுத்திய, திறலுறு தொல்சீர்—தன்னைப்பற்றி மாத்திரமல்லா மல், தன்னுடைய தகப்பன், பாட்டன் முதலானவரைப் பற்றி வரும் வெற்றி மிகுந்த கீர்த்தியையும், கருங் கழல்—பெருமை பொருந்திய வீரக் கழலையும், வெண் குடை—வெள்ளைக்குடை யையும், கார்நிகர் வண்கை—மேகம் போலப் பிரதியுப காரத் தை நினையாது கொடுக்குங் கையினையும், திருந்திய செங்கோல் —கோணாத செங்கோலையும் உடைய, சீயகங்கன்—சிங்கம் போன்ற கங்கன், அருங்கலை விநோதன்—அரிய நூல்களை யாராய்தலே பொழுது போக்கும் விளையாட்டாக வுடைய

வன், அமராபரணன்—தன் மேலே பெரிய காயம்படப் போர் செய்தலையே ஆபரணமாக வுடையவன், மொழிந்தனனாகை—சொன்னனாகை, முன்னோர் நூலின் வழியே—முன்னோரிலக்கண நூலின் வழியே, நன்னூற் பெயரின் வகுத்தனன்—நன்னூலென்னும் பெயரினாற் செய்தனன், பொன் மதிற் சனகை — பொன் மதில் சூழ்ந்த சனகாபுரத்தி லிருக்கும், சன்மதி முனியருள்—சன்மதி முனிவன் பெற்ற, பன்னருஞ் சிறப்பிற் பவணந்தி யென்னு நாமத்து—சொல்லுதற் கரிய ஞான வொழுக்கத்துச் சிறப்பினையும், பவணந்தி யென்னும் பெயரினையு முடைய, இருந்தவத்தோன்—பெரிய தவத்தினை யுடையோன் என்ற வாறு.

பவணந்தியெனவே—நூல் செய்தோன் பெயரும், முன்னோர் நூலின் வழியெனவே—நூல் வந்தவழியும், நான்கெல்லையெனவே—நூல் வழங்கு நிலமும், நன்னூலெனவே—நூலினது பெயரும், அரும் பொருளைந்தெனவே—நூலிற் சொல்லப்பட்ட பொருளும், யாவருமுணரவெனவே—நிகண்டு கற்று இலக்கியவாராய்ச்சி செய்த பின்பு இந்த நூல் கேட்கத் தகுமென்னுமியையும், அவையாராய்ந்தோர் இந்நூல் கேட்டற் குரியாரென்றும் அதிகாரிகளும், அவர் அப்பொருளைந்தையும் அறிந்து சொல்லுதலின் முட்டுப்பாட்டை நீக்குதலாலே மொழித் திறத்தின் முட்டறுத்தலென்னும் பிரயோசனமும், சீரியகங்கன் மொழிந்தனனாகை நன்னூற் பெயரின் வகுத்தனனெனவே—அவன் காலத்திலே பாடப்பட்டு அவனது சபையிலே அரங்கேற்றியதெனச் செய்த காலமும், அரங்கேற்றிய விடமும், சீயகங்கன் சொன்னதினாலும் யாவரிடத்து முண்டாகிய விரக்கத்தினாலும் வகுத்தமையால் காரணமும் பெறப்பட்டன.

**சிறப்புப்பாயிரம் முற்றிற்று.**

---

## பொதுப்பாயிரம்

### [பாயிரத்தின் பெயர்கள்]

முகவுரை பதிக மணிந்துரை நூன்முகம்
புறவுரை தந்துரை புனைந்துரை பாயிரம்.

**இது பாயிரத்திற்கு வருங் காரணப்பெயர்களைச் சொல்லுகின்றது.**

**(இ-ள்)** முகவுரை—பாயிரத்தினிலக்கணங்களை முன்னேயறிய வேண்டி நூலிற்கு முன் சொல்லப்படுதலினாலே முக

வுரை யென்றும், பதிகம்—ஐந்து பொதுவும், பதினேரு சிறப்புமாகிய பலவகைப் பொருள்களையுந் தொகுத்துச் சொல்லுதலினாலே பதிகமென்றும், அணிந்துரை — நூலினது பெருமை முதலானவைகள் விளங்க அலங்கரித்துச் சொல்லுகையினாலே* அணிந்துரையென்றும், நூன்முகம் — முகவுரை யென்றது போல நூன்முகமென்றும், புறவுரை—நூல் சொல்லிய பொருளல்லாதவைகளைச் சொல்லுதலினாலே புறவுரை யென்றும், தந்துரை—நூலிலே சொல்லப்பட்ட பொருளல்லாதவைகளை அதற்குத்தந்து சொல்லுகையினாலே தந்துரையென்றும், புனைந்துரை — அணிந்துரை யென்றது போலப் புனைந்துரையென்றும், பாயிரம்—பாயிரத்திற்குப் பெயர்களாம். (எ—று.)

### [பாயிரவகை]

2. பாயிரம் பொதுச் சிறப்பென விருபாற்றே.

**இது முன் பாயிரமென்றதை வகுத்துச் சொல்லுகின்றது.**

(இ-ள்) பாயிரம்—பாயிரமானது, பொது—பொதுப்பாயிரமும், சிறப்பு — சிறப்புப் பாயிரமும், என விரு பாற்று — என விரண்டு பிரிவை யுடைத்தாகும். (எ—று.) ஏகாரம் ஈற்றசை.

### [பொதுப் பாயிரம் இன்னதென்பது]

3. நூலே நுவல்வோ நுவலுந் திறனே
கொள்வோன் கோடற் கூற்றா மைந்து
மெல்லா நூற்கு மிவைபொதுப் பாயிரம்.

**இது, பொதுப் பாயிரத்தை விரித்துச் சொல்லுகின்றது.**

(இ—ள்) நூற்றிறன் — நூலினது வரலாறும், நுவல்வோன்(றிறன்)—பாடஞ் சொல்லும் ஆசிரியனது வரலாறும், நுவலுந்திறன்—பாடஞ் சொல்லுதலினது வரலாறும், கொள்வோன் (றிறன்)—பாடங் கேட்கு மாணாக்கனது வரலாறும், கோடற் கூற்று—பாடங் கேட்கையினது வரலாறும், எல்லா நூற்கும் — எல்லா நூலுக்கும், ஆம்—ஆகும். ஆதலால், இவை—இவ்வைந்து வரலாற்றையும் விளங்கக் காட்டுவது, பொதுப் பாயிரம்—பொதுப்பாயிரமாகும். (எ—று.)

## க. நூலினது வரலாறு

### [நூல் இன்னதென்பது]

4. நூலி னியல்பே நுவலி னோரிரு
பாயிரந் தோற்றி மும்மையி னொன்றாய்
நாற்பொருட் பயத்தோ டெழுமதந் தழுவி
யையிரு குற்றமு மகற்றியம் மாட்சியோடு
எண்ணான் குத்தியி னோத்துப் படல
மென்னு முறுப்பினிற் சூத்திரங் காண்டிகை
விருத்தி யாகும் விகற்பநடை பெறுமே.

**இது, முன்சொல்லிய பொதுப்பாயிர மைந்தனுள் நூலினது வரலாற்றைச் சொல்லுகின்றது.**

(இ-ள்) நூலினியல்பு—நூலினது வரலாற்றை, நுவலின்—சொன்னால், ஓரிரு பாயிருந்தோற்றி—பொதுவுஞ் சிறப்புமாகிய விருவகைப் பாயிரத்தையு முன்னுடைத்தாகி, மும்மையி னொன்றாய்—முதநூன் முதலாகிய மூன்றினுள் ஒன்றாகி, நாற் பொருட் பயத்தோடு—அறமுதலாகிய நான்கு பொருட் பிரயோசனத்துடனே, எழு மதந் தழுவி—உடன்படன் முதலாகிய ஏழு வகை மதத்தையுந் தழுவி, ஐயிரு குற்றமு மகற்றி—குன்றக்கூறன் முதலாகிய பத்துக் குற்றத்தையு மொழித்து, அம்மாட்சியோடு—சுருங்கச் சொல்லல் முதலாகிய பத்தழகுடனே, எண்ணான்குத்தியின்—நுதலிப்புகுதல் முதலாகிய முப்பத்திரண்டு உத்தியைக் கொண்டு, ஓத்துப் படலமென்னு முறுப்பினில்—இயல், அதிகாரம் என்னும் அவயவங்களுடனே, சூத்திரம்—சூத்திரமும், காண்டிகை—காண்டிகையுரையும்,—விருத்தி—விருத்தியுரையும், ஆகும்—ஆகின்ற, விகற்பநடை—பதின்மூன்று வேறுபாட்டுநடையையும், பெறும்—பெற்றுவரும். (எ-று.)

### [மூவகை நூல்]

5. முதல்வழி சார்பென நூன்மூன் றாகும்.

**இது, முன் மூன்று நூலென்றதை வகுத்துச் சொல்லுகின்றது.**

(இ-ள்) முதல்—முதநூல், வழி — வழி நூல், சார்பு—சார்புநூல், என—என்று, நூல்—நூலானது, மூன்றாகும்—மூன்று பிரிவை யுடைத்தாகும். (எ-று.)

[முதனூல் இன்னதென்பது]

6. அவற்றுள்:—
வினையி னீங்கி விளங்கிய வறிவின்
முனைவன் கண்டது முதனூ லாகும்.

**இது, முதநூலாமாறு சொல்லுகின்றது.**

(இ-ள்) வினையினீங்கி — வினையினின்றுநீங்கி, விளங்கிய—பிரகாசிக்கின்ற, அறிவின்—அறிவினையுடைய, முனைவன்—கடவுள், கண்டது—உயிர்களுக்கு ஆதிகாலத்தில் கண்டது, முதநூலாகும்—முன்னூலாகும். (எ-று.)

[வழிநூல் இன்னதென்பது]

7. முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
யழியா மரபினது வழிநூ லாகும்.

**இது, வழிநூலாமாறு சொல்லுகின்றது.**

(இ-ள்) முன்னோர்—கடவுளும், அவனருள் வழிபட்டோருஞ் செய்த, நூலின்—நூல்களினுடைய, முடிபு—பொருண் முடிபுகள், ஒருங்கு—முழுவதையும், ஒத்து — நிகர்த்து, பின்னோன்—வழிநூலி யற்றுவோன், வேண்டும்—முதலிருக்கவுந் தான் வழிநூல் வேறே செய்தற்குக் காரணமாக வேண்டுகிற, விகற்பம்—வேறுபாடுகளையும், கூறி — உடன் சொல்லி, அழியா—அழியாமலுலகத்திலே நிலையானதாக விளங்கா நின்ற, மரபினது—குணத்தை யுடையது, வழிநூலாகும்—வழிநூலாகும். (எ-று.)

[சார்புநூல் இன்னதென்பது]

8. இருவர் நூற்கு மொருசிறை தொடங்கித்
திரிபுவே றுடையது புடைநூ லாகும்.

**இது, சார்பு நூலாமாறு சொல்லுகின்றது.**

(இ-ள்) இருவர் நூற்கும்—முதனூல், வழிநூல் என்னு மிருவகை நூல்களுக்கும், ஒருபுடை (சிறை) தொடங்கி—பொருண்முடிபு ஒத்து, வேறு—மற்றவைகளெல்லாம், திரிபு—ஒவ்வாமையுடையது, உடைத்தாகியது, புடைநூலாகும்—சார்பு நூலாகும். (எ-று.) புடை—பக்ஷம்.

[வழிநூலுக்குஞ் சார்புநூலுக்கும் எய்தியதன்மேற் சிறப்பு விதி]

9. முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும்
பொன்னேபோற் போற்றுவ மென்பதற்கும்—முன்னோரின்
வேறுநூல் செய்துமெனு மேற்கோளி லென்பதற்குங்
கூறுபழஞ் சூத்திரத்தின் கோள்.

**இது, வழி நூற்கும் சார்பு நூற்கும் முன்சொன்னதற்கு மேலே சிறப்பு விதி சொல்லுகின்றது.**

(இ-ள்) முன்னோர்—முதனூலோர், மொழி—சொன்ன, பொருளேயன்றி—பொருளைமாத்திரமல்லாமல், அவர்—அவரது, மொழியும்—சொல்லையும், பொன்னேபோல்—பொன்னைப்போலவே, போற்றுவ மென்பதற்கும்—காப்பாற்றிக் கொள்வோமென்பதற்கு அடையாளமாகவும், முன்னோரின்—முன்னோர் நூலையே சொல்லாமல் அந்நூலினின்றும், வேறு நூல்—வழி நூல் சார்பு நூல்களை, செய்து மெனும்—செய்தோமாயினும், மேற்கோள் — ஆசிரிய வசனமானது இல்லென்பதற்கும்—இந்த நூலினிடத்தில்லை யென்று சொல்லுங் குற்றம் ஒழிதற்காகவும், பழஞ் சூத்திரத்தின் கோள்—முன்னோர் சொல்லிய பொருளை யல்லாமலும், அவர் சூத்திரத்தையும், கூறு—ஒரே விடத்திலே சொல்லு. (எ-று)

எனினுமென்பது எனுமென விகாரமாயிற்று.

[நூற்பொருட் பயன்]

10. அறம்பொரு ளின்பம் வீடடைதல் நூற்பயனே.

**இது, முன்னே நூற்பொருட் பயனென்றதை வகுத்துச் சொல்லுகின்றது.**

(இ-ள்) அறம்—தருமமும், பொருள்—அர்த்தமும், இன்பம்—காமமும், வீடடைதல்—மோக்ஷமடைதலும், நூல்—நூலிற் சொல்லப்படும், பயன்—பிரயோசனமாம். (எ-று)

[ஏழு மதம்]

11. எழுவகை மதமே உடன்படல் மறுத்தல்
பிறர்தம் மதமேற் கொண்டு களைவே
தாஅ னாட்டித் தனாது நிறுப்பே
இருவர் மாறுகோ ளொருதலை துணிவே
பிறர்நூற் குற்றங் காட்டல் ஏனைப்
பிறிதொரு படாஅன் றன்மதங் கொளலே.

**இது, முன் எழுவகை மதமென்றதை வகுத்துச் சொல்லுகின்றது.**

(இ-ள்) எழுவகை மதம்—எழுவகை மதமாவன, உடன் படல்—பிறர் மதத்திற்கு உடன்படலும், மறுத்தல்—பிறர் மதத்தை மறுத்தலும், பிறர்தம் மதமேற்கொண்டு களைவு—பிறர் மதத்திற்கு உடன்பட்டுப் பின்பு மறுத்தலும், தாஅனுட்டித் தனதுநிறுப்பு—தானொரு பொருளை யெடுத்து நாட்டி அதனை வருமிடந்தோறும் நிறுத்தலும், இருவர் மாறுகோள் ஒருதலை துணிவு—இருவர் ஒன்றற்கொன்று விரோதமாகக் கொண்ட விரண்டனுள் ஒன்றனிடத்துத் துணிதலும், பிறர் நூற்குற்றங் காட்டல்—பிறர் நூல்களிலிருக்கின்ற குற்றத்தைக் காட்டலும், பிறிதொரு படாஅன்றன் மதங்கொளல்—பிறர் மதத்திற்கு உடன்படானாகித் தன் மதத்தையே கொள்ளுதலுமாம். (எ-று.)

[பத்துக் குற்றம்]

12 குன்றக் கூறன் மிகைபடக் கூறல்
கூறியது கூறன் மாறுகொளக் கூறல்
வழூஉச்சொற் புணர்த்தன் மயங்க வைத்தல்
வெற்றெனத் தொடுத்தன் மற்றொன்று விரித்தல்
சென்றுதேய்ந் திறுத னின்றுபய னின்மை
யென்றிவை யீரைங் குற்றம் நூற்கே.

**இது, முன் பத்துக் குற்றமென்றதை வகுத்துச் சொல்லுகின்றது.**

(இ-ள்) குன்றக் கூறல்—குறித்த பொருளைக் காட்டுதற்குரிய சொற்களிற் குறைவுபடச் சொல்லுதலும், மிகைபடக் கூறல்—அதிகப்படச் சொல்லுதலும், கூறியதுகூறல்—முன் சொன்ன வொருபொருளையே பின்னுஞ் சொல்லுதலும், மாறு கொளக்கூறல்—முன் சொன்ன பொருளோடு பின் சொல்லும் பொருள் விரோதங் கொள்ளச் சொல்லுதலும், வழூஉச் சொற்புணர்த்தல்—குற்றமான சொற்களைச் சேர்த்தலும், மயங்கவைத்தல்—ஒன்றை மற்றொன்றாக மயங்கவைத்தலும், வெற்றெனத் தொடுத்தல்—பொருள் வெளிப்படையாகத் தோன்றச் சித்திரித்தலும், மற்றொன்று விரித்தல்—சொல்லத் தொடங்கியதை விட்டு மற்றொரு பொருளை விரித்தலும், சென்று தேய்ந்திறுதல்—சொல்லின் முடிபும், பொருளின் முடிபும் முன் சிறப்பாக நடந்து அந்நடை பின்னே தேய்ந்து முடிதலும்—நின்று பயனின்மை—சொற்களிருந்தும் ஒரு பிரயோசனமுமில்லாமற் போதலும், என்றிவை—என்று சொல்லப்பட்ட இவை, நூற்கு—நூலுக்கு, ஈறைங் குற்றம்—பத்துக் குற்றங்களாகும். (எ-று.)

## [பத்தழகு]

13. சுருங்கச் சொல்லல் விளங்க வைத்தல்
நவின்றோர்க் கினிமை நன்மொழிப் புணர்த்தல்
ஓசை யுடைமை யாழமுடைத் தாதல்
முறையின் வைப்பே யுலக மலையாமை
விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த
தாகுத நூலிற் கழகெனும் பத்தே.

**இது, முன் பத்தழகென்றதனை வகுத்துச் சொல்லுகின்றது.**

(இ-ள்) சுருங்கச் சொல்லல்—சொற்கள் வீணாக விரியாமற் சுருங்கி நிற்கச் சொல்லுதலும், விளங்க வைத்தல்—பொருளைச் சந்தேகத்துக் கிடமாகாமல் விளங்கவைத்தலும், நவின்றோர்க்கினிமை—வாசித்தவருக்கு இன்பத்தைத் தருதலும், நன் மொழிப் புணர்த்தல்—நல்ல சொற்களைச் சேர்த்தலும், ஓசையுடைமை—சந்த வின்ப முடைத்தாதலும், ஆழமுடைத்தாதல்—ஆழ்ந்த கருத்தை யுடைத்தாதலும், முறையின் வைப்பு—அதிகார முதலானவைகளைக் காரண காரிய முறையாக வைத்தலும், உலக மலையாமை—உயர்ந்தோர் வழக்கத்தோடு மாறு கொள்ளாமையும், விழுமியது பயத்தல்—சிறப்பாகிய பொருளைத் தருதலும், விளங்கு உதாரணத்தது ஆகுதல்—விளங்கிய உதாரணத்தை யுடையதாதலும், நூலிற்கு—நூலினுக்கு, பத்து—பத்தும், அழகெனும்—அழகென்று சொல்லப்படும். (எ—று.)

## [முப்பத்திரண்டுத்தி]

14. நுதலிப் புகுத லோத்துமுறை வைப்பே
தொகுத்துச் சுட்டல் வகுத்துக் காட்டல்
முடித்துக் காட்டல் முடிவிடங் கூறல்
தானெடுத்து மொழிதல் பிறன்கோட் கூறல்
சொற்பொருள் விரித்த றொடர்ச்சொற் புணர்த்தல்
இரட்டுற மொழிதல் ஏதுவின் முடித்த
லொப்பின் முடித்தன் மாட்டெறிந் தொழுகல்
இறந்தது விலக்கல் எதிரது போற்றன்
முன்மொழிந்து கோடல் பின்னது நிறுத்தல்
விகற்பத்தின் முடித்தல் முடிந்தது முடித்தல்
உரைத்து மென்ற லுரைத்தா மென்ற
லொருதலை துணித லெடுத்துக் காட்ட
லெடுத்த மொழியி னெய்த வைத்தல்
இன்ன தல்ல திதுவென மொழித
லெஞ்சிய சொல்லி னெய்தக் கூறல்

பிறநூன் முடிந்தது தானுடன் படுதல்
தன்குறி வழக்க மிகவெடுத் துரைத்தல்
சொல்லின் முடிவி னப்பொருள் முடித்த
லொன்றின முடித்த றன்னின முடித்த
லுய்த்துணர வைப்பென வுத்தியெண் ணன்கே.

**இது முன் முப்பத்திரண்டு உத்தி யென்றதனை வகுத்துச் சொல்லு கின்றது.**

(இ-ள்) நுதலிப்புகுதல்—இதனைச் சொல்லுவேனென்று சொல்லிப் புகுதலும், ஒத்து முறை வைப்பு—இயல்களைக் காரண காரிய முறையால் வைத்தலும், தொகுத்துச் சுட்டல்—பலவுந் தொகுத்துக் காட்டலும், வகுத்துக் காட்டல்—அப்படித் தொகுத்துக் காட்டியவைகளை வேறு வேறு விரித்துக் காட்டுதலும், முடிவிடங்கூறல்—தான் சொல்லு மிலக்கணத்திற்கு இலக்கியந் தோன்று மிடத்தைச் சொல்லுதலும், தானெடுத்து மொழிதல்—தான் பழைய சூத்திரத்தை யெடுத்துச் சொல்லுதலும், பிறன் கோட்கூறல்—தன்னூலிற் பிறனது கோட்பாட்டைச் சொல்லுதலும், சொற் பொருள் விரித்தல்—சொல்லினது பொருள் விளங்குதற்கு உருபு முதலானவைகளை விரித்துச் சொல்லுதலும், தொடர்ச் சொற் புணர்த்தல்—ஒன்றற் கொன்று சம்பந்த முடைய சொற்களைச் சேர்த்து வைத்தலும், இரட்டுற மொழிதல்—ஒரு வாக்கியத்தில் இரண்டு பொருள்படச் சொல்லுதலும், ஏதுவின் முடித்தல்—முன் காரணம் விளங்காததாகச் சொல்லப்பட்ட ஒன்றற்குப் பின், காரணம் விளங்கக் காட்டி முடிவு செய்தலும், ஒப்பின் முடித்தல்—ஒன்றற்குச் சொல்லப்பட்ட விலக்கணம் வேறொன்றற்கும் ஒத்துவருமாயின் அதற்கும் அதுவே இலக்கணமாக முடிவு செய்தலும், மாட்டெறிந் தொழுகல்—ஒன்றற்குச் சொல்லப்பட்ட விலக்கணத்தை அதனைப் பெறுதற்குரிய மற்றொன்றற்கு மாட்டிச் சொல்லி நடத்தலும், இறந்தது விலக்கல்—முற்காலத்து வழங்கிய இலக்கணங்களுள்ளே பிற்காலத்து வழங்காமற் போனதை நீக்கலும், எதிரது போற்றல்—முற்காலத்து வழங்காமல் பிற்காலத்து வழங்கி வருகின்ற இலக்கணத்தைத் தழுவிக்கொள்ளுதலும், முன்மொழிந்து கோடல்—முன்னே யொன்றனைச் சொல்லிப் பின்பு அதனை வேண்டு மிடந்தோறும் எடுத்துக் கொள்ளுதலும், பின்னது நிறுத்தல்—ஒரு பொருளுக்குக் கருவியாக முன் வைத்ததற்குரியது, அங்கே வைத்ததற்கு இடம் பெறாதாயின் அப்பொருளின் பின்னே யதனை வைத்தலும், விகற்பத்தின் முடித்தல்—விளங்குதற் பொருட்டுப் பல வேறுபாடுகளின் சிறப்பு வாய்பாட்டான் முடித்தலும், முடிந்தது முடித்தல்—

சிறப்பு வாய்பாட்டான் முடிந்ததைப் பொது வாய்பாட்டான் முடித்தலும், உரைத்து மென்றல்—பின்னே சொல்லப்படுவதை முன்னே ஒரு நிமித்தத்தினுலே சொல்ல வேண்டின் இதனைப் பின்னே சொல்லுவோமென்பது தோன்ற அங்கே சுருக்கிச் சொல்லுதலும், உரைத்தா மென்றல்—முன்னே ஒரு நிமித்தத்தினுலே சொல்லப்பட்டதைப் பின்னே சொல்ல வேண்டியவிடத்து இதனை முன்னேதானே சொல்லினே மென்பது தோன்றச் சொல்லி விடுத்தலும், ஒருதலை துணிதல்—ஒன்றற் கொன்று மாறுபாடாகக் கொண்ட விரண்டு பக்ஷத்துள் ஒரு பக்ஷந் துணிதலும், எடுத்துக்காட்டல்—தான் சொல்லு மிலக்கணத்திற்குத் தானே விலக்கியத்தை எடுத்துக் காட்டுதலும், எடுத்த மொழியி னெய்தவைத்தல்—தான் சொல்லு மிலக்கணத்தைத் தான் எடுத்துக் காட்டிய இலக்கியத்தில் இருக்க வைத்தலும், இன்னதல்லது இதுவென மொழிதல்—சந்தேகிக்க நின்றவிடத்து இப்படிப்பட்டதல்லாதது இதுவெனச் சொல்லுதலும், எஞ்சிய சொல்லின் எய்தக்கூறல்—சொல்லாது விடப்பட்ட வற்றிற்குஞ் சொல்லப்பட்டதனுல் இலக்கணம் பொருந்தச் சொல்லுதலும், பிறநூன் முடிந்தது தானுடன் படல்—பிற நூலிலே முடிந்த முடிபைத் தான் அங்கீகரித்தலும், தன்குறி வழக்கமிக வெடுத்துரைத்தல்—நூதனமாகத் தான் குறித்து வழங்கும் வழக்கத்தையே பலவிடங்களிலும் எடுத்துச் செல்லுதலும், சொல்லின் முடிவினப் பொருள் முடித்தல்—சொல்லின் முடிவிலே அதன் பொருளையு முடித்தலும், ஒன்றின முடித்தல்—ஒன்றைச் சொல்லுமிடத்தில் அதற்கு இனமாகிய மற்றென்றையும் விரியாதிருக்க வேண்டி அதனுடன் முடித்தலும், தன்னின முடித்த லென்பதற்கும் பொருளதுவே, உய்த்துணர வைப்பு—சில சூத்திர விதிகளைக் கொண்டு ஆராய்ந்தறிய ஒரு பொருளை வைத்தலும், என வுத்தி—எனத் தந்திர வுத்திகள், எண்ணென்கு—முப்பத்திரண்டாம்.

ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல் இரண்டும் ஓருத்தி. முன் சொன்ன மதங்களுக்கும் இவ்வுத்திகளுக்கும் உதாரணம் இந்நூலுள்ளேபின்வரு மிடந்தோறும் காட்டப்படும்.

### [உத்தி இன்னதென்பது]

15. நூற்பொருள் வழக்கொடு வாய்ப்பக் காட்டி
யேற்புழி யறிந்திதற் கிவ்வகை யாமெனத்
தகும்வகை செலுத்துதல் தந்திர வுத்தி.

**இது உத்திக்கு இலக்கணஞ் சொல்லுகின்றது.**

(இ-ள்) நூல்—ஒரு இலக்கண நூலாலறிவிக்கப்படுகின்ற, பொருள்—பொருளை, வழக்கொடு—உலக வழக்கோ

டும், செய்யுள் வழக்கோடும், வாய்ப்ப பொருந்தக், காட்டிக்—காண்பித்து, ஏற்புழி—ஏற்குமிடத்தை, அறிந்து — முன்னே ரிலக்கிய நூலினு மறிந்து, இதற்கு—இவ்விடத்திற்கு, இவ் வகையாமென—இவ்வகையாகுமென்று நினைத்து, தரும் வகை—தக்க வகையாக, செலுத்துதல்—நடத்துவது, தந்திர வுத்தி—தந்திர உத்தியாம். (எ-று.)

தந்திர நூல்—உத்தியாயமைக்கப்படும் பொருளை உத்தி யென்ற தாகு பெயர்.

## [ஓத்து இன்னதென்பது]

16. நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு
ஓரினப் பொருளை யொருவழி வைப்பது
ஓத்தென மொழிப வுயர்மொழிப் புலவர்.

**இது, ஓத்துறுப் பாமாறு சொல்லுகின்றது.**

(இ-ள்) நேரின—ஒருசாதியாயுள்ள, மணியை—மணிகளை, நிரல்பட—வரிசையாக, வைத்தாங்கு—பதித்தது போல, ஓரினம்—ஒருசாதியாகவுள்ள, பொருளை—பொருள்களை, ஒரு வழி—ஒருவழிப்பட, வைப்பது—சொல்லுவது, ஓத்தென—இயலுறுப் பென்று, மொழிப—சொல்லுவார், உயர் மொழி—உயிர்க்குறுதியைத் தருகின்ற உண்மைச் சொற்களையுடைய, புலவர்—வித்துவான்கள். (எ-று.)

## [படலம் இன்னதென்பது]

17. ஒருநெறி யின்றி விரவிய பொருளாற்
பொதுமொழி தொடரினது படல மாகும்.

**இது, அதிகார வுறுப்பைச் சொல்லுகின்றது.**

(இ-ள்) ஒரு நெறி யின்றி—ஒருவழிப் படாமல், விரவிய பொருளால்—கலந்த பொருள்களோடு பொருந்தி, பொது மொழி—பல பொருள்களைத் தரும் பொதுச் சொற்கள், தொடரின்—ஒரே விடத்தன்றி தொடர்ந்து வந்தால், அது—அது, படலமாகும்—படல வுறுப்பாகும். (எ-று.)

## [சூத்திரம் இன்னதென்பது]

18. சில்வகை யெழுத்திற் பல்வகைப் பொருளைச்
செவ்வ னாடியிற் செறித்தினிது விளக்கித்
திட்ப நுட்பஞ் சிறந்தன சூத்திரம்.

**இது, சூத்திரமாமாறு சொல்லுகின்றது.**

(இ-ள்) ஆடியின்—பெரிய சரீர முதலானவைகளின் சாயையைத் தனக்குள்ளே செவ்வையாக வடக்கி இனிதாகக் காட்டுகின்ற கண்ணுடியைப் போல, சில் வகை யெழுத்தில்—சில வகை யெழுத்துக்களாகிய சொற்களில், பல் வகைப் பொருளை—பல வகைப் பட்ட பொருள்களை, செவ்வன்—செவ்வையாக, செறித்து—அடக்கி, இனிது—இனிதாக, விளக்கி—காட்டி, திட்பம்—பல பொருளினுடைய திண்மையும், நுட்பம்—அவற்றினுடைய நுண்மையும், சிறந்தன—சிறந்து வருவன, சூத்திரம்—சூத்திரங்களாகும். (எ-று).

[சூத்திர நிலை]

19. ஆற்றெழுக் கரிமா னோக்கந் தவளைப்
பாய்த்துப் பருந்தின் வீழ்வன்ன சூத்திரநிலை.

**இதுவுமது:—**

(இ-ள்) ஆற்றொழுக்கு—நடுவில் விடாது செல்லுகின்ற ஆற்று வெள்ளத்தினது செல்லுகையையும், அரிமா நோக்கம்—முன்னும் பின்னும் பார்க்கின்ற சிங்கத்தினது பார்வையையும், தவளைப் பாய்த்து—நடுவே விடம் விட்டுக் குதிக்கின்ற தவளையினது குதித்தலையும், பருந்தின் வீழ்வு—நெடுந் தூரத்திலிருந்து ஒன்றை வௌவிப் போதற்கு வீழ்கின்ற பருந்தினது வீழ்ச்சியையும், அன்ன—போலும், சூத்திரம்—முன் சொன்ன சூத்திரங்கள், நிலை—ஒன்றோடொன்று தொடர்ந்து நிற்கு நிலைகள். (எ-று.)

[சூத்திரங்களுக்குக் காரண வகையால் வரும் பெயர் வேறுபாடு]

20. பிண்டந் தொகைவகை குறியே செய்கை
கொண்டியல் புறனடைக் கூற்றன சூத்திரம்.

**இதுவுமது:—**

(இ-ள்) பிண்டம்—பலதிறப் பொருள்களுக்கும் பொதுவாகப் பிண்டமாக்கிச் சொல்லும் பிண்ட சூத்திரமும், தொகை—அப் பலதிறப் பொருள்களையும் வேறு வேறாகத் தொகுத்துச் சொல்லுந் தொகைச் சூத்திரமும், வகை—அத் தொகுத்துச் சொல்லப்பட்டவைகளை வகுத்துச் சொல்லும் வகைச் சூத்திரமும், குறி—இவையுயிர் இவைமெய்யென வறியவருங் குறிச்சூத்திரமும், செய்கை—புணர்ச்சி விதியறிந்து புணர்தலையும், முடிபு விதியறிந்து முடித்தலையுஞ் செய்யும் செய்கைச் சூத்திரமும், கொண்டியல் புறனடை—இவைகளை அலைவறக் கொண்டு இவைகளின் புறத்து அடை

யாக வருகின்ற புறனடைச் சூத்திரமுமாகிய, கூற்றன—ஆறு பிரிவை யுடையன, சூத்திரம்—சூத்திரங்கள். (எ-று).

விரிவகையிலே சேர்தலால் வேறு சொல்லவில்லை. ஆறு விதமாகச் சொன்னாலும், குறிச் சூத்திரம் செய்கைச் சூத்திரம் என்னுமிவ் விரண்டினுள்ளே மற்றைய நான்கும் அடங்கும்.

**[உரையினது பொது விலக்கணம்]**

21. பாடங் கருத்தே சொல்வகை சொற்பொருள்
தொகுத்துரை யுதாரணம் வினவிடை விசேடம்
விரிவதி காரந் துணிவு பயனொடு
ஆசிரிய வசனமென் றீரே ழுரையே.

**இது, முன் காண்டிகை, விருத்தி என்ற உரைகளைச் சொல்லத் தொடங்கி உரையினது பொது விலக்கணத்தைச் சொல்லுகின்றது.**

(இ-ள்) பாடம்—பாடமும், கருத்து—கருத்துரையும், சொல்வகை—சொல்லுக்குப் பொருளை வகுத்துரைத்தலும், சொற்பொருள்—பதப் பொருளும், தொகுத்துரை—தொகுத்துரைத்தலும், உதாரணம்—உதாரணமும், வினா—வினாவும், விடை—உத்தரமும், விசேடம்—வேண்டியவைகளை தந்துரைத்தலும், விரிவு—வேற்றுமைத் தொகை முதலானவைகளை விரித்துரைத்தலும், அதிகாரம்—அதிகாரத்தோடு பொருந்த வுரைத்தலும், துணிவு—இதற்கு இதுவே பொருளென வுரைத்தலும், பயன்—பயனையுரைத்தலும், ஆசிரிய வசனம்—ஆசிரிய வசனங் காட்டுதலும், என்று—என்று, உரை—நூலுக்கு உரை, ஈரேழ்—பதினன்கு வகையாலு முரைக்கப்படும். (எ-று.)

**[காண்டிகையுரை இன்னதென்பது]**

22. கருத்துப் பதப்பொருள் காட்டு மூன்றினும்
அவற்றொடு வினவிடை யாக்க லானும்
சூத்திரத் துட்பொருள் தோற்றுவ காண்டிகை.

**இது, காண்டிகை யுரையாமாறு சொல்லுகின்றது.**

(இ-ள்) கருத்து—கருத்துரையும், பதப்பொருள்—பதவுரையும், காட்டு—உதாரணமும், மூன்றினும்—ஆகிய மூன்றினையும் சொல்லுதலாலும், அவற்றொடு—அம் மூன்றனோடு, வினா—வினாவும், விடை—உத்தரமும், ஆக்கலானும்—ஆகிய விரண்டனையுங் கூட்டிச் சொல்லுதலாலும், சூத்திரத்துள்—சூத்திரத்துளிருக்கின்ற, பொருள்—பொருளினை, தோற்றுவ—காட்டுவன, காண்டிகை—காண்டிகையுரைகளாம். (எ-று)

[விருத்தியுரை இன்னதென்பது]

23. சூத்திரத் துட்பொரு ளன்றியு மாண்டைக்கு
இன்றி யமையா தியாவையும் விளங்கத்
தன்னுரை யானும் பிறநூ லானும்
ஐய மகலவைங் காண்டிகை யுறுப்பொடு
மெய்யினை யெஞ்சா திசைப்பது விருத்தி.

இது, விருத்தியுரை யாமாறு சொல்லுகின்றது.

(இ-ள்) சூத்திரத்துள்—சூத்திரத்தினுள்ள, பொருளன்றியும்—பொருளையல்லாமலும், ஆண்டைக்கு—அவ்விடங்களுக்கு, இன்றியமையாதியாவையும்—இல்லாது நிறையாத வெல்லாப் பொருள்களும், விளங்க—விளங்கும் படியாக, தன்னுரையானும்—தானுரைக்கு முரையானும், பிறநூலானும்—ஆசிரிய வசனங்களானும், ஐங்காண்டிகையுறுப்பொடு—முன் சொன்ன காண்டிகை யுரையின் அவயவமாகிய ஐந்தினுலும், ஐயமகல—சந்தேகந் தீர, மெய்யினை—மெய்ம்மைப் பொருளை, எஞ்சாது—குறையாமல், இசைப்பது—விரித்துரைப்பது, விருத்தி—விருத்தியுரையாகும். (எ-று).

"சூத்திரத்துட் பொருளன்றியும்" என்றதால், முன் சொன்ன பதினன்கு உறுப்புக்களையுங் கொண்டு வருவது விருத்தியுரை யென்றதாயிற்று.

[நூலென்னும் பெயர்க்காரணம்]

24. பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச்
செஞ்சொற் புலவனே சேயிழையா—வெஞ்சாத
கையேவா யாகக் கதிரே மதியாக
மையிலா நான்முடியு மாறு

இது, நூலென்னும் பெயர் வருமாறு சொல்லுகின்றது.

(இ-ள்) இதன் சொல்—இதனது சொல், பஞ்சா—பஞ்சாகவும், பனுவல்—செய்யுள், இழையா—இழையாகவும், செஞ்சொற் புலவன்—செவ்வையாகிய சொற்களை யறிந்த புலவன், சேயிழையா—நூற்கின்ற பெண்ணாகவும், எஞ்சாத—குறையாத, வாய்—வாய், கையாக—கையாகவும், மதி—அறிவு, கதிராக—கதிராகவும், மையிலா—குற்றமில்லாத, நூல்—இந்நூலானது, முடியுமாறு—முடியும் வழி, இதுவாகும். (எ-று.)

நூலென்றது உவமவாகு பெயராகும்.

25. உரத்தின் வளம்பெருக்கி யுள்ளிய தீமைப்
புரத்தின் வளமுருக்கிப் பொல்லா—மரத்தின்

கனக்கோட்டந் தீர்க்குநூ லஃதேபோன் மாந்தர்
மனக்கோட்டந் தீர்க்குநூன் மாண்பு.

**இதுவுமது:—**

(இ-ள்) புரத்தின்—உடம்பினுளிருக்கின்ற, உரத்தின் வளம்—அறிவின் வளத்தை, பெருக்கி—வளர்வித்து, உள்ளிய—நினைக்கப்பட்ட, தீமைவளம்—அறியாமையின் வளத்தை, முருக்கி—கெடுத்து, பொல்லா மரத்தின்—பொல்லாத மரத்தினது, கனக்கோட்டம்—கனம்பொருந்திய கோணலை, நூல்—நூலானது, தீர்க்கும்—நீக்கும், அஃதேபோல்—அதுபோலவே, நூல்—கல்வி நூலானது, மாந்தர்—மனிதரது, மனக்கோட்டம்—மனத்தினது கோணலை, தீர்க்கும்—நீக்கும், மாண்பு—அந் நூல் போலச் செப்பஞ் செய்யுமிம்மாட்சிமையாலும். (எ-று.)

நூலென்றது உவமவாகு பெயராகும்.

## 2. ஆசிரியனது வரலாறு

### [நல்லாசிரியரிலக்கணம்]

26. குலனரு டெய்வங் கொள்கை மேன்மை
கலைபயி றெளிவு கட்டுரை வன்மை
நிலமலை நிறைகோன் மலர்நிகர் மாட்சியு
முலகிய லறிவோ டுயர்குண மினையவும்
அமைபவ நூலுரை யாசிரி யன்னே.

**இது, நிறுத்த முறையாலே ஆசிரியனது வரலாற்றைச் சொல்லுகின்றது.**

(இ-ள்) குலன்—நல்ல சாதியும், அருள்—கருணையும், தெய்வங் கொள்கை—கடவுள் வழிபாடும், மேன்மை—மேம்பாடும், கலைபயில் தெளிவு—நூல்களிலே பழகிய தெளிவும், கட்டுரை வன்மை—தொடுத்துச் சொல்லுகின்ற உரைவலிமையும், நிலமலை நிறைகோன் மலர் நிகர்—நிலத்தையும், மலையையும், துலாக் கோலையும், மலரையும் நிகர்க்கின்ற, மாட்சியும்—குணங்களும், உலகியல்—உலக நடையை, அறிவு—அறியுமறிவும், உயர்குணம்—உயர்வாகிய குணங்கள், இனையவும்—இவை போல்வன பிறவும், அமைபவன்—நிறைந்திருப்பவன், நூலுரையாசிரியன்—நூல் கற்பிக்கும் ஆசிரியனவான். (எ-று.)

27. தெரிவரும் பெருமையுந் திண்மையும் பொறையும்
பருவ முயற்சி யளவிற் பயத்தலும்
மருவிய நன்னில மாண்பா கும்மே.

**இது முன் சொன்ன உபமானத்தின் குணத்தை விரித்துச்சொல்லு கின்றது.**

(இ-ள்) தெரிவரும் பெருமையும்—பிறராலறியப்படாத உருவத்தின் பெருமையும், திண்மையும்—பெரிய பாரஞ்செய்து தன் மேலே நெருங்கினவைகளாற் கலங்காத வலிமையும், பொறையும்—தன்னையடுத்த மனிதர் தோண்டுதலாதியாகிய குற்றங்களைச் செய்யினும் பொறுக்கின்ற பொறையும், பருவ முயற்சியளவிற் பயத்தலும்—பருவத்திலே உழவர் செய்கிற முயற்சி யளவிற்குத் தக அவர்க்குப் பயனைத் தருதலும், நன்னிலம்—நல்ல நிலத்தினிடத்து, மருவிய—பொருந்திய, மாண்பாகும்—குணங்களாகும். (எ-று)

பிறராலறியப்படாத கல்வியறிவின் பெருமையும், பெரிய வாதஞ் செய்து தன் மேலே நெருங்கினவராற் கலங்காத வலிமையும், தன்னையடுத்த மாணுக்கர் இகழ்தலாதியாகிய குற்றங்களைச் செய்யினும் பொறுக்கின்ற பொறுமையும், பருவத்திலே மாணுக்கர் செய்கிற முயற்சி யளவிற்குத் தக அவர்க்குப் பயனைத் தருதலும், ஆகியவை ஆசிரியனிடத்துப் பொருந்திய குணங்கள்; ஆதலால் நிலம் அவனுக்கு உபமான மாயிற்று.

28. அளக்க லாகா வளவும் பொருளும்
துளக்க லாகா நிலையுந் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே.

**இதுவுமது:—**

(இ-ள்) அளக்கலாகாவளவும்—அளவு செய்யப்படாத தன் வடிவத்தினளவும், (அளக்கலாகாப்) பொருளும்—அளவு செய்யப்படாத பலவகைப் பொருளும், துளக்க லாகா நிலையும்—எப்படிப்பட்ட வலிமையுடையவராலும் அசைக்கப்படாத உருவத்தினிலையும், தோற்றமும்—நெடுந்தூரத்திலுள்ளவராலுங் காணப்படும் உயர்ச்சியும், வறப்பினும் வளந்தரும் வண்மையும்—மழை பெய்யாமல் வறண்ட காலத்திலுந் தன்னைச் சேர்ந்த உயிர்களுக்குக் குளிர்ச்சியைக் கொடுக்கிற கொடையும், மலைக்கு—மலைக்குள்ள குணங்களாகும். (எ-று.)

அளவு செய்யப்படாத தன் கல்வியினளவும், அளவு செய்யப்படாத பல்வகை நூற்பொருளும், எப்படிப்பட்ட புலமையை யுடையோராலும் அசைக்கப்படாத கல்வியறிவினிலையும், நெடுந்தூரத்திலுள்ளவராலும் அறியப்படுகிற உயர்ச்சி

யும், பொருள் வருவழி வறண்டகாலத்திலும் தன்னைச் சேர்ந்த மாணுக்கருக்குக் கல்விப் பொருளைக் கொடுக்கின்ற கொடையும், ஆசிரியனுக்குள்ள குணங்களாதலால் மலை அவனுக்கு உபமானமாயிற்று.

29. ஐயந் தீரப் பொருளை யுணர்த்தலும்
மெய்ந்நடு நிலையு மிகுநிறை கோற்கே.

**இதுவுமது.**

(இ-ள்) ஐயந்தீரப் பொருளை யுணர்த்தலும்—சந்தேகந் தீர நிறுக்கப்பட்ட பண்டத்தினளவைக் காட்டலும், மெய்ந்நடு நிலையும்—உண்மை பெறத் தான் இரண்டு தட்டுகளுக்கும் நடுவே நிற்கையும், நிறை கோற்கு— தராசுக் கோலின் கண், மிகும்—குணங்களாக மிகும். (எ-று.)

சந்தேகந்தீர வினவப்பட்ட சொற்பொருளினியல்பைக் காட்டலும், புலவரிருவர் மாறுபட்டாராயின் உண்மை பெறத் தான் அவ்விருவருக்கும் நடுவாக நிற்கையும், ஆசிரியனின் குணங்களாக மிகும். ஆதலால் நிறைகோல் அவனுக்கு உபமானமாயிற்று. (எ-று.)

30. மங்கல மாகி யின்றி யமையாது
யாவரு மகிழ்ந்து மேற்கொள மெல்கிப்
பொழுதின் முகமலர் உடையது பூவே.

**இதுவுமது:—**

(இ-ள்) மங்கலமாகி—சுபச்செய்கைக்குரியதாகி, இன்றி யமையாது—யாதொரு செயலும் அலங்கரிக்குந் தானில்லாது முடியாதாக—யாவருமகிழ்ந்துமேற்கொள—கண்டோர் யாவருங் களித்து மேலாகத் தன்னைச் சூடிக் கொள்ள, மெல்கி—மெல்லிய குணமுடையதாகி, பொழுதின் முகமலர் உடையது—மலர்தர்க்குறிய காலத்திலே முக விரிதலை யுடையது, பூ—பூவாகும். (எ-று.)

சுபச் செய்கைக்குரியனுகி, யாதொரு செயலும், சிறப்பிக்குந்தானில்லாது முடியாதாகக் கண்டோர் யாவருங் களித்து மேலாகத் தன்னை வைத்துக் கொள்ள மெல்லிய குணமுடையவனுகிப் பாடஞ் சொல்லுதற்குரிய காலத்திலே முகமலர்தலை யுடையவன் ஆசிரியனுதலால் பூ அவனுக்கு உபமானமாயிற்று.

[ஆசிரியராகாதவரிலக்கணம்]

31. மொழிகுண மின்மையு மிழிகுண வியல்பும்
அழுக்கா றவாவஞ்ச மச்ச மாடலுங்
கழற்குட மடற்பனை பருத்திக் குண்டிகை
முடத்தெங் கொப்பென முரண்கொள் சிந்தையு
முடையோ ரிலரா சிரியரா குதலே.

**இது, ஆசிரியராகாதவரிவரென்று சொல்லுகின்றது.**

(இ-ள்) மொழிகுண மின்மையும்—பாடஞ் சொல்லுங் குணமில்லாமையையும், இழிகுண வியல்பும்—இழிகுணமாகிய சுபாவத்தையும், அழுக்காறு—பிறருக்கு வருங் கல்வியைக் குறித்துக் கொள்ளும் பொறாமையையும், அவா—பொருளின் மேல் அதிகமாக வைக்குமாசையையும், வஞ்சம்—மெய்ப் பொருளை மறைத்துப் பொய்ப்பொருளைக் காட்டிவஞ்சித்தலை யும், அச்சமாடலும்—கேட்போர்க்கு அச்சமுண்டாகப் பேசுத லையும், கழற்குட மடற்பனை பருத்திக் குண்டிகை முடத் தெங்கு—கழற்குடமும், மடற்பனையும், பருத்திக் குண்டிகை யும், முடத்தெங்கும் ஆகிய நான்கையும், ஒப்பென—ஒப் பென்று சொல்ல, முரண் கொள் சிந்தையும்—மாறுபாடு கொண்ட கருத்தையும், உடையோர்—தம்மிடத்திலுடையவர், ஆசிரியராகுதல்—கற்பிக்கும் ஆசிரியராகுதல், இலர்—இல ராவர். (எ–று.)

32. பெய்தமுறை யன்றிப் பிறழ வுடன்றருஞ்
செய்தி கழற்பெய் குடத்தின் சீரே.

**இது, முன் சொன்ன உபமானத்தின் குற்றத்தை விரித்துச் சொல்லு கின்றது.**

(இ–ள்) பெய்த முறையன்றி—தன்னுள்ளே போட்ட முறையினலல்லாமல், பிறழ—முன் போடப் பட்டவையும் பின் போடப் பட்டவையும் அம் முறை பிறழ்ந்து போக, உடன் றரும்—விரைவிலே தன்னுள்ளே கொண்ட கழற்காய்களைக் கொடுக்கின்ற, செய்தி—செய்கையானது, கழற் பெய் குடத் தின் சீர்—கழற்காய் போடப்பட்ட குடத்தினது குற்றமாம். (எ–று.)

தமக்குக் கற்பித்த முறையினல் அல்லாமல் முன் கற்பிக் கப் பட்டவையும், பின் கற்பிக்கப் பட்டவையும், அம் முறை பிறழ்ந்து போக, விரைவிலே தம்முள்ளே கொண்ட நூற்

பொருள்களைத் தருகின்ற செய்கையானது ஆசிரியராகாதவரது குற்றமாதலால் கழற்குடம் அவருக்கு உபமானமாயிற்று.

33. தானே தரக்கொளி னன்றித் தன்பால்
மேவிக் கொளக்கொடா விடத்தது மடற்பனை.

**இதுவுமது:—**

(இ-ள்) தானே தர—தானே தன்னிடத்திலுள்ள பழங்களைத் தர, கொளினன்றி—கொண்டாற் கொள்ளலாமே யல்லாமல், தன்பால் மேவிக் கொள—ஒருவர் தன்னிடத்து நெருங்கி வந்து பறித்துக் கொள்ள, கோடாவிடத்தது—அப் பழங்களைக் கொடாத விடத்தையுடையது, மடற்பனை—தன் வடிவமுழுது மடல் விரிந்த பனை. (எ-று.)

தாமே, தம்மிடத்திலுள்ள நூற் பொருளைச் சொல்ல அறிந்து கொண்டாற் கொள்ளலாமே யல்லாமல், ஒருவர் தம்மிடத்து நெருங்கி வந்து வினவி அறிந்துகொள்ள அந்நூற் பொருள்களைச் சொல்லாத விடத்தையுடையவர் ஆசிரியராகாதவராதலால் மடற்பனை அவருக்குஉபமானமாயிற்று.

34. அரிதின் பெயக்கொண் டப்பொரு டான்பிறர்க்கு
எளிதீ வில்லது பருத்திக் குண்டிகை.

**இதுவுமது:—**

(இ-ள்) அரிதிற் பெயக் கொண்டு—பஞ்சினைக் கொண்டபோதும் வருத்தத்தோடு சிறிது சிறிதாக அடைப்பத் தன்னுள்ளே கொண்டு, அப் பொருடான் பிறர்க் கொளித் வில்லது—கொடுக்கும் போதும் அப் பஞ்சை தான் பிறர்க்கு எளிதிற் கொடாத குற்றமுடையது, பருத்திக் குண்டிகை—பஞ்சுபோட்ட குடுக்கையாகும். (எ-று.)

கல்வியைக் கற்ற போதும், வருத்தத்தோடு சிறிது சிறிதாகக் கற்பிக்கத் தம்முள்ளே கொண்டு பாடஞ் சொல்லும் போதும், அக் கல்வியைத் தாம் பிறர்க்கு எளிதிற் கொடாத குற்றமுடையவர் ஆசிரியராகாதவராதலால் பருத்திக் குண்டிகை அவர்க்கு உபமானமாயிற்று.

35. பல்வகை யுதவி வழிபடு பண்பின்
அல்லோர்க் களிக்கு மதுமுடத் தெங்கே.

**இதுவுமது:—**

(இ-ள்) பல்வகையுதவி—நீர்விடுகை முதலாகிய பலவகை யுபகாரங்களையுஞ் செய்து, வழிபடுபண்பின்—தனக்கு வழி பாடு செய்யுங்குணத்தினின்றும், அல்லோர்க்கு—அல்லாத பிறருக்கு, அளிக்கும்—தன்னிடத்துள்ள காய்களைத் தருங் குற்றமுடையது, முடத்தெங்கு — வேலிக்கப்புறம் வளைந்த தென்னைமரமாம். (எ-று.)

பொருள் கொடுத்தல் முதலாகிய பலவகை யுபகாரங் களையுஞ் செய்து தமக்கு வழிபாடு செய்யுங்குணத்தினின்றும் அல்லாத மாணாக்கருக்குத் தம்மிடத்துள்ள கல்விப் பொருளைத் தருங்குற்றமுடையவராசிரிய ராகாதவராதலால் முடத்தெங்கு அவருக்கு உபமானமாயிற்று.

## 3. பாடஞ்சொல்லுதலின் வரலாறு

36. ஈத லியல்பே யியம்புங் காலைக்
காலமு மிடனும் வாலிதி னோக்கிச்
சிறந்துழி யிருந்துதன் தெய்வம் வாழ்த்தி
உரைக்கப் படும்பொருள் உள்ளத் தமைத்து
விரையான் வெகுளான் விரும்பிமுக மலர்ந்து
கொள்வோன் கொள்வகை யறிந்தவ னுளங்கொளக்
கோட்டமில் மனத்தினூல் கொடுத்த லென்ப.

**இது, நிறுத்த முறையாற் பாடஞ்சொல்லுதலின் வரலாற்றைச் சொல்லுகின்றது.**

(இ-ள்) ஈதல்—பாடஞ் சொல்லுதலின், இயல்பு—வர லாற்றை, இயம்புங்காலை—சொல்லும்போது, காலமும்— உரியகாலத்தையும், இடனும்—உரியவிடத்தையும், வாலிதின்— தூயனவாக, நோக்கி—பார்த்து, சிறந்துழியிருந்து—சிறந்த விடத்திருந்து, தன் தெய்வம்—தான் வழிபடு கடவுளை, வாழ்த்தி—வாழ்த்துதல் செய்து, உரைக்கப்படும் பொருள்— பாடஞ்சொல்லப்படும் பொருளை, உள்ளத்து—தன் கருத்தின் கண், அமைத்து—நிறைத்து, விரையான்—விரையானாகியும், வெகுளான்—கோபஞ்செய்யானாகியும், விரும்பி—இச்சித்து, முகமலர்ந்து—முகமலர்ச்சியை யடைந்து, கொள்வோன்— கேட்பவனது, கொள்வகை கேட்குமறிவின் வகையை, அறிந்து—உணர்ந்து, அவனுளம்—அவனதுமனம், கொள— ஏற்றுக்கொள்ள, கோட்டமில்—மாறுபாடில்லாத, மனத்தின்— மனத்துடனே, நூல்—நூலை, கொடுத்தல்—கொடுத்தலாகும், என்ப—என்று சொல்லுவர் புலவர். (எ-று).

## 4. மாணாக்கனது வரலாறு

[மாணாக்கரிலக்கணம்]

37. தன்மக னாசான் மகனே மன்மகன்
பொருணனி கொடுப்போன் வழிபடு வோனே
உரைகோ ளாளற் குரைப்பது நூலே.

**இது, நிறுத்த முறையாற் பாடங்கேட்கு மாணாக்கனது வரலாற்றைச் சொல்லுகின்றது.**

(இ-ள்) தன் மகன்—தன் புதல்வனுக்கும், ஆசான் மகன்—தன்னாசிரியன் புதல்வனுக்கும், மன்மகன்—அரசன் புதல்வனுக்கும், பொருணனி கொடுப்போன்—பொருளை, மிகுதியாகக் கொடுப்போனுக்கும், வழிபடுவோன்—வழிபாடு செய்வோனுக்கும், உரைகோளாளற்கு—தன்னாற் சொல்லப் பட்ட வுரையை விரைவிலே கற்கும் அறிவுடையோனுக்கும், உரைப்பது—சொல்லப்படுவது, நூல்—நூலாகும். (எ—று.)

38. அன்ன மாவே மண்ணொடு கிளியே
இல்லிக் குடமா டெருமை நெய்யரி
அன்னர் தலையிடை கடைமா ணாக்கர்.

**இதுவுமது:—**

(இ-ள்) அன்னம்—அன்னத்தையும், ஆ—பசுவையும் (அன்னர்) போல்வார், தலை (மாணாக்கர்)—முதன் மாணாக்கர், மண்—மண்ணையும், கிளி—கிளியையும், (அன்னர்) போல்வார்—இடை (மாணாக்கர்) நடுமாணாக்கர், இல்லிக்குடம்—பொள்ளற்குடத்தையும், ஆடு—ஆட்டையும், எருமை—எருமையையும், நெய்யரி—பன்னாடையையும், அன்னர்—போல்வார், கடைமாணாக்கர். (எ—று.)

அன்னம் பாலையும் நீரையும் வேறு பிரித்துப் பாலைமாத்திரங்குடித்தல் போல முதன் மாணாக்கர் குணத்தையும் குற்றத்தையும் வேறு பிரித்துக் குணத்தை மாத்திரங் கொள்ளுதலாலும், பசு மிகுந்த புல்லையுடைய விடத்தைக்கண்டால் அப்புல்லை வயிறுநிறைய மேய்ந்து பின்போரிடத்திற்போய் இருந்து சிறிது சிறிதாக வாயில் வருவித்துக்கொண்டு மென்று தின்றல்போல, முதன் மாணாக்கர் மிகுந்த கல்வியையுடைய ஆசிரியனைக்கண்டால் அக் கல்வியைத் தன்னுள்ளே நிறையக் கேட்டுக்கொண்டு பின்போரிடத்துப் போயிருந்து சிறிது சிறிதாக நினைவிற்கொண்டுவந்து சிந்தித்தலாலும் அவருக்கு அவ்விரண்டும் உபமான மாதல் அறிக.

மண் உழவர் வருந்திப்பயிர் செய்யும் முயற்சியளவு விளைவைத் தன்கட் காட்டல்போல இடைமாணாக்கர் ஆசிரியன் வருந்திக்கற்பிக்கு முயற்சியளவு கல்வியறிவைத் தன்கட் காட்டலாலும், கிளி தனக்குக்கற்பித்த சொற்களேயல்லாமல், வேறானவைகளைச் சொல்லமாட்டாமைபோல், இடை மாணாக்கர் தமக்குக் கற்பித்த நூற்பொருளையல்லாமல் வேறொரு நூற்பொருளையுஞ் சொல்லமாட்டாமையாலும் அவருக்கு அவ்விரண்டும் உபமான மாதலறிக.

பொள்ளற் குடம் நீரை வார்க்குந் தோறும் ஒழுக விடுதல் போலக் கடைமாணாக்கர் நூற் பொருளைக் கற்பிக்குந் தோறும் மறந்து விடுதலாலும், ஆடு ஒரு செடியிலே தழை நிறைந்திருந்தாலும் வயிறு நிறைய மேயாமல் செடிதோறும் மேய்தல் போலக் கடைமாணாக்கர் ஓராசிரியனிடத்து மிகுந்த கல்வி யிருந்தாலும் புலமை நிறையக் கற்றுக் கொள்ளாமல் பலரிடத்திலும் போய்ப் பாடங் கேட்பதாலும், எருமை குளத்து நீரைக் கலக்கிக் குடித்தல்போலக் கடைமாணாக்கர் ஆசிரியனை வருந்திப் பாடங் கேட்டலாலும், பன்னாடை தேன் முதலியவற்றைக் கீழே விட்டு அவற்றிலுள்ள குற்றங்களைப் பற்றிக்கொள்ளுதல் போலக் கடைமாணாக்கர் நல்ல பொருளை மறந்து விட்டுத் தீய பொருளைச் சிந்தித்துப் பற்றிக் கொள்ளுதலாலும் அவருக்கு இந் நான்கும் உபமானமாதலறிக.

**[மாணாக்கராகாதவரிலக்கணம்]**

39. களிமடி மானி காமி கள்வன்
பிணிய னேழை பிணக்கன் சினத்தன்
துயில்வோன் மந்தன் தொன்னூற் கஞ்சித்
தடுமா றுளத்தன் தறுகணன் பாவி
படிறனின் னோர்க்குப் பகரார் நூலே.

**இது, மாணாக்கராகாரிவரென்று சொல்லுகின்றது.**

(இ-ள்) களி—கட்குடியனும், மடி—சோம்பேறியும், மானி—அபிமானமுடையவனும், காமி—காமமுடையவனும், கள்வன்—திருடனும், பிணியன்—நோயாளியும், ஏழை—ஏழ்மையுடையவனும், பிணக்கன்—பிணக்குடையவனும், சினத்தன்—கோபமுடையவனும், துயில்வோன்—மிகத் தூங்குவோனும், மந்தன்—புத்தி நுட்பமில்லாதவனும், தொன்னூற்கஞ்சித் தடுமாறுளத்தன்—பழைய நூல்களைக் கண்டு அஞ்சித் தடுமாறு முள்ளத்தையுடையவனும், தறுகணன்—

அஞ்சத் தக்கனவைகளை அஞ்சாதவனும், பாவி—பாவஞ் செய்வோனும், படிறன்—பொய் பேசுகிறவனும், இன்னோர்க்கு—ஆகிய இப்படிப்பட்ட குற்றத்தை யுடையவர்க்கு, நூல்—நூலை பகரார்—சொல்லார். (எ-று.)

## 5. பாடங் கேட்டலின் வரலாறு

40. கோடன் மரபே கூறுங் காலை
பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
குணத்தொடு பழகி அவன்குறிப் பிற்சார்ந்து
இருவென விருந்து சொல்லெனச் சொல்லிப்
பருகுவ னன்ன வார்வத்த னாகிச்
சித்திரப் பாவையி னத்தக வடங்கிச்
செவிவா யாக நெஞ்சுகள னாகக்
கேட்டவை கேட்டவை விடாதுளத் தமைத்துப்
போவெனப் போத லென்மனார் புலவர்.

**இது, நிறுத்த முறையானே பாடங் கேட்பதின் வரலாற்றைச் சொல்லுகின்றது.**

(இ-ள்) கோடன் மரபு—பாடங் கேட்டலின் வரலாற்றை, கூறுங்காலை—சொல்லும் பொழுது, பொழுதொடு—தருங் காலத்தில், சென்று—போய், வழிபடல்—வழிபாடு செய்தலில், முனியான்—வெறுப்பில்லாதவனாகி, குணத்தொடு—ஆசிரியன் குணத்தோடு பொருந்த, பழகி—பயின்று, அவன் குறிப்பின்—அவன் குறிப்பின் வழியிலே, சார்ந்து—சேர்ந்து, இருவென—இரு வென்று சொன்ன பின், இருந்து—இருந்து, சொல்லென—படியென்று சொன்ன பின், சொல்லி—படித்து, பருகுவனன்ன—பசித்துண்பவனைப் போல, ஆர்வத்தனாகி—மிக்க விருப்பத்தையுடையவனாகி, சித்திரப் பாவையின்—சித்திரப் பதுமையைப்போல, அத்தக வடங்கி—அவ்வசைவறு குணத்தினோடடங்கி, செவி—காதானது, வாயாக—வாயாகவும், நெஞ்சு—மனமானது, களனாக—கொள்ளுமிடமாகவும், கேட்டவை—முன் கேட்கப் பட்டவற்றை, கேட்டு—திரும்பிக் கேட்டு, அவை—அப்பொருள்களை, விடாது—மறந்து விடாமல், உள்ளத்து—மனத்தின்கண், அமைத்து—நிறைத்து வைத்துக் கொண்டு, போவென—போவென்ற பின், போதல்—போதலாகும், என்மனார்—என்று சொன்னார், புலவர்—புலவரானவர். (எ-று.)

41. நால்பயி லியல்பே நுவலின்வழக் கறிதல்
பாடம் போற்றல் கேட்டவை நினைத்தல்
ஆசாற் சார்ந்தவை யமைவரக் கேட்டல்
அம்மாண் புடையோர் தம்மொடு பயிறல்
வினுதல் வினயவை விடுத்த லென்றிவை
கடனுக் கொளினே மடநனி யிகக்கும்.

**இதுவுமது:—**

(இ-ள்) நால்பயிலியல்பு—நூலைக் கற்றலினியல்பை, நுவலின்—கூறுமிடத்து, வழக்கு—உலக வழக்கும், செய்யுள் வழக்குமாகிய விருவகை நடையையும், அறிதல்—ஆராய்ந்தறிதலும், பாடம்—கேட்டபாடத்தை, போற்றல்—பலகாற் சிந்தித்தலும், கேட்டவை—தான் கேட்ட பொருள்களை, நினைத்தல்—எண்ணுதலும், ஆசான்—ஆசிரியனை, சார்ந்து—அடுத்து, அவை—அவற்றை, அமைவர—குறைவு தீர, கேட்டல்—கேட்டலும், அம்மாண்பு—அக்கல்விமாட்சிமையை உடையோர், தம்மொடு—உடையவரோடு, பயிறல்—பழகுதலும், வினுதல்—தான்ஐயுற்ற பொருளை வினவுதலும், வினயவை விடுத்தல்—அவர் வினயவைகளுக்கு உத்தரங் கொடுத்தலும், என்று—என்று சொல்லப் பட்ட, இவை—இச்செயல்களை, கடனு—முறையாக, கொளின்—மாணுக்கன் கொண்டால், மடம்—அறியாமையானது, நனி—மிகவும், இகக்கும்—தன்னை விட்டு நீங்கும். (எ-று.)

42. ஒருகுறி கேட்போ னிருகாற் கேட்பின்
பெருக நூலிற் பிழைபா டிலனே.

**இதுவுமது:—**

(இ-ள்) ஒருகுறி—ஒருதரம்—கேட்போன்—ஒரு நூலைப் பாடங்கேட்பவன், இருகால்—இரண்டுதரம், கேட்பின்—கேட்டானுயின், பிழைபாடு—அந்நூலிற் பிழைபடுதல், பெருக—மிகுதியும், இலன்—இலனுவன். (எ-று.)

43. முக்காற் கேட்பின் முறையறிந் துரைக்கும்.

**இதுவுமது:—**

(இ-ள்) முக்கால்—மூன்றுதரம், கேட்பின்—கேட்டானுயின், முறை—ஆசிரியன் கற்பித்த முறையை, அறிந்து—உணர்ந்து, உரைக்கும்—சொல்லுவான். (எ-று.)

44. ஆசா னுரைத்த தமைவரக் கொளினுங்
காற்கூ றல்லது பற்றல னுகும்.

**இதுவுமது:—**

(இ-ள்) ஆசான்—ஆசிரியன், உரைத்தது—கற்பித்த பொருளை, அமைவர—தன்னறிவினிடத்து நிறைய, கொளினும்—கற்றுணியினும், காற்கூறல்லது—புலமைத் திறத்திற் கால்பங்கு அல்லது, பற்றலனாகும்—அதற்கதிமாகப் பற்றாதவனாவன். (எ-று.)

45. அவ்வினை யாளரொடு பயில்வகை யொருகால்
செவ்வுதி னுரைப்ப வவ்விரு காலும்
மையறு புலமை மாண்புடைத் தாகும்.

**இதுவுமது:—**

(இ-ள்) அவ்வினையாளரொடு—தன்னைப் போல் இயல்புடையவரோடு, பயில்வகை—பழகும் வகையில், ஒருகால்—காற்கூறும், செவ்விதினுரைப்ப—தன் மாணாக்கருக்கும், சபையாருக்குமுணர்விதத் துரைத்தலால், அவ்விருகாலும்—அரைக் கூறுமாக, மையறு—குற்றமற்ற, புலமை—புலமையானது, மாண்புடைத்தாகும்—நிரம்புதலுடைத்தாகும். (எ-று.)

46. அழலி னீங்கா னணுகா னஞ்சி
நிழலி னீங்கா னிறைந்த நெஞ்சமோ
டெத்திறத் தாசா னுவக்கு மத்திறம்
அறத்திற் றிரியாப் படர்ச்சிவழி பாடே.

**இதுவுமது:—**

(இ-ள்) அழலின்—குளிர்காய்வோன் விட்டு நீங்காமலும் நெருங்காமலும் இருக்கின்ற நெருப்பைப் போல, ஆசிரியனை நினைத்து, அஞ்சி—அச்சமுற்று, நீங்கான்—விட்டு நீங்கானாகியும்—அணுகான் — நெருங்கானாகியுமிருந்து, நிழலின்—விடாது பின் செல்லு நிழலைப் போல, நீங்கான்—தொடர்ந்து சென்று, நிறைந்த நெஞ்சமோடு—நிறைந்தக் கருத்துடனே, எத்திறத்து—எத்தன்மையினாலே, ஆசான் — ஆசிரியனானவன், உவக்கும்—மகிழ்வான், அத்திறம்—அத்தன்மையோடு பொருந்தி, அறத்தின்—அறத்தினின்றும், திரியா—வேறுபடாத, படர்ச்சி—நடத்தலானது, வழிபாடு—மாணாக்கன் செய்யும் வழிபாடாகும்.

அழலின் என்பதற்கு ஆசிரியன் கோபித்தாலெனப் பொருள் கூறினும் பொருந்தும். (எ-று.)

பொதுப்பாயிரம் முற்றுப் பெற்றது.

# சிறப்புப்பாயிரத்து இலக்கணம்

[சிறப்புப் பாயிரத்திற்குப் பொதுவிதி]

47. ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை
நாற்பெயர் யாப்பே நுதலிய பொருளே
கேட்போர் பயனோ டாயெண் பொருளும்
வாய்ப்பக் காட்டல் பாயிரத் தியல்பே.

**இது, பாயிரம் பொதுசிறப்பென நிறுத்த முறையானே சிறப்புப்பாயி ரங்களது பொது விலக்கணத்தைச் சொல்லுகின்றது.**

(இ-ள்) ஆக்கியோன் பெயர்—நாற் செய்தோன் பெயரும், வழி—நூல் வந்த வழியும், எல்லை—நூல் வழங்கும் நிலமும், நாற் பெயர்—நூலினது பெயரும், யாப்பு—இந்நூல் முடிந்த பின்பு இந்நூல் கேட்கத் தகுமென்னுமியையும், நுதலிய பொருள்—இந்நூலிற் சொல்லப்பட்ட பொருளும், கேட்போர்—இந்நூல் கேட்டற்குரிய வதிகாரிகள் இவரென்பதும், பயன்—நூல் கேட்டலாற் பெறப்படும் பயனும், ஆயெண் பொருளும்—ஆகிய எட்டுப் பொருளையும், வாய்ப்பக் காட்டல்—விளங்கவுணர்த்துதல், பாயிரத்து—சிறப்புப்பாயிரத்தினது இயல்பு—இலக்கணமாம். (எ-று.)

ஆகியவென்பது ஆ யென்றாயிற்று.

48. காலங் களனே காரண மென்றிம்
மூவகை யேற்றி மொழிநரு முளரே.

**இதுவுமது:—**

(இ-ள்) காலம்—நூல் செய்தகாலமும், களன்—நூலரங் கேற்றியசபையும், காரணம்—நூல் செய்தற்குக் காரணமும் என்று—என்று, இம்மூவகை—இம்மூன்றனையும், ஏற்றி—அவ் வெட்டனோடு கூட்டி, மொழிநரும்—பதினொன்றாகச் சொல் வோரும், உளர்—சிலருளர். (எ-று.)

[நூற் பெயருக்குச் சிறப்புவிதி]

49. முதனூல் கருத்த னளவு மிகுதி
பொருள்செய் வித்தோன் றன்மைமுத னிமித்தினு
மிடுகுறி யானுநூற் கெய்தும் பெயரே.

**இது, முன் சொன்ன பதினொன்றனுள் நூற்பெயருக்குச் சிறப்புவிதி சொல்லுகின்றது.**

(இ-ள்) முதனூல்—முதனூலும், கருத்தன்—செய்தவனும், அளவு—அளவும், மிகுதி—மிகுதியும், பொருள்—பொருளும், செய்வித்தோன்—செய்வித்தவனும், தன்மை — குணமும், முதல்—முதலாகிய, நிமித்தினும்—காரணங்களாலும், இடுகுறியானும்—இடுகுறியாலும், நாற்கு—நாலுக்கு, பெயர்—பெயரானது, எய்தும்—வரும். (எ-று.)

முதனூலாற் பெயர் பெற்றவை பாரத முதலியன. செய்தவரால் பெயர் பெற்றவை தொல்காப்பியம் முதலியன. அளவினாற் பெயர் பெற்றவை நாலடி நானூறு முதலியன. மிகுதியாற் பெயர்பெற்றவை களவியல் முதலியன. பொருளாற் பெயர் பெற்றவை அகப்பொருள் முதலியன. செய்வித்தோனாற் பெயர் பெற்றவை சாதவாகன முதலியன. தன்மையாற் பெயர் பெற்றவை நன்னூல் முதலியன. இடுகுறியாற் பெயர் பெற்றவை கலைக்கோட்டுத்தண்டு முதலியன.

[வழியின் வகையாகிய நூல் யாப்புக்குச்சிறப்பு விதி]

50. தொகுத்தல் விரித்த றொகைவிரி மொழிபெயர்ப்
பெனத்தகு நூல்யாப் பீரிரண் டென்ப.

**இது, வழியின் வகையாகிய நூல்யாப்பினுக்குச் சிறப்புவிதி சொல்லுகின்றது.**

(இ-ள்) தொகுத்தல்—விரிந்து கிடக்கின்றவைகளைத் தொகுத்துச் சொல்லுதலும், விரித்தல்—சுருங்கிக்கிடக்கின்றவைகளை விரித்துச்சொல்லுதலும், தொகைவிரி—தொகுத்தும் வகுத்துஞ்சொல்லுதலும், மொழிபெயர்ப்பு—பதினெண் மொழியுளொன்றனுளிருக்கின்ற பொருளை மற்றொன்றுள்ளே திருப்பிச் சொல்லுதலும், எனத்தகும்—என்று சொல்லத் தகும், ஈரிரண்டு—நான்கு பிரிவையுடைத்தாகும், நூல் யாப்பு—நூல் யாப்பானது, என்ப—என்று சொல்லுவார்புலவர். (எ-று.)

"மலர்தலை" என்னுஞ் சூத்திரத்துள்ளே 'தொகைவகை விரியாப்பு' என்று சொல்லியது, இந்நான்கு பிரிவினுள் இல்லையே என்றால், நடுநின்றவகை பின்னின்ற விரியைக் குறிக்கும்போது தொகையாகவும், முன்னின்ற தொகையைக் குறிக்கும்போது விரியாகவும், நிற்கையால் தொகை விரியேயாம்.

[சிறப்புப்பாயிரஞ் செய்தற்குரியார் இவரென்பது]

51. தன்னா சிரியன் றன்னொடு கற்றோன்
றன்மா ணாக்கன் றகுமுறை காரனென்
றின்னோர் பாயிர மியம்புதல் கடனே.

**இது, முன் சொன்ன சிறப்பாயிரஞ் செய்தற்குரியா ரிவரென்று சொல்லுகின்றது.**

(இ-ள்) தன்னாசிரியன்—தன்னுடைய வாசிரியனும், தன்னொடு கற்றோன்—தன்னோடு பாடங் கேட்டவனும், தன் மாணாக்கன்—தன்னுடைய மாணாக்கனும், தகுமுறைகாரன்—தன் நூலுக்குத் தகுமுரையைச் செய்தவனும், என்று—என்று சொல்லப்பட்ட, இன்னோர்—இந்நால்வருளொருவர், பாயிரம்—சிறப்புப்பாயிரத்தை, இயம்புதல்—சொல்லுதல், கடன்—முறைமையாகும். (எ-று.)

**[சிறப்புப்பாயிரம் பிறர் செய்தற்குக் காரணம்]**

52. தோன்றா தோற்றித் துறைபல முடிப்பினுந்
தான்றற் புகழ்தல் தகுதி யன்றே.

**இது சிறப்புப் பாயிரம் பிறர் செய்தற்குக் காரணஞ் சொல்லுகின்றது.**

(இ-ள்) தோன்றா—தோன்றாத நுட்பங்களெல்லாம், தோற்றி—காட்டி, துறைபல—பல துறைப்பட்டு விரிந்த நூலை, முடிப்பினும்—செய்து முடித்தாலும், தான்—தானே, தற் புகழ்தல்—தன்னைப் புகழ்ந்து கொள்ளுதல், தகுதியன்று—தகுதியன்றாம். (எ-று.)

**[தற்புகழ்ச்சி குற்றமாகா இடங்கள்]**

53. மன்றுடை மன்றத் தோலைத் தூக்கினுந்
தன்னுடை யாற்ற லுணரா ரிடையினும்
மன்னிய வவையிடை வெல்லுறு பொழுதினும்
தன்னை மறுதலை பழித்த காலையுந்
தன்னைப் புகழ்தலுந் தகும்புல வோற்கே.

**இது தற்புகழ்ச்சியும் ஓரோவிடத்துக் குற்றமாகா தென்று சொல்லுகின்றது.**

(இ-ள்) மன்னுடை மன்றத்து—அரசனது சபைக்கெழுதும், ஓலைத்தூக்கினும்—சீட்டுக் கவியினும், தன்னுடை யாற்றல் உணரார் இடையினும்—தனது வலிமையை யறியாதாரிடத்திலும், மன்னிய வவையிடை வெல்லுறு பொழுதினும்—பெரிய சபையில் வாதஞ் செய்து வெல்லும் பொழுதும், தன்னை மறுதலை பழித்த காலையும்—தன்னை எதிரி பழித்த காலத்திலும், தன்னைப் புகழ்தலும்—தன்னைத்தான் புகழ்ந்து கொள்ளலும், புலவோற்கு—புலவருக்கு, தகும்—தகும். (எ-று.)

[பாயிரம் நூலுக்கு இன்றியமையாச் சிறப்பினதென்பது]

54. ஆயிர முகத்தா னகன்ற தாயினும்
பாயிர மில்லது பனுவ லின்றே.

**இது இருவகைப் பாயிரமும் நூலுக்கு இன்றியமையாச் சிறப்பின வென்பது சொல்லுகின்றது.**

(இ-ள்) *ஆயிரமுகத்தான்*—ஆயிரம் உறுப்புகளால், *அகன்றதாயினும்*—விரிந்ததாயினும், *பாயிரமில்லது*—பாயிர மில்லாதது, *பனுவலன்று*—நூலன்றாம். (எ-று.)

55. மாடக்குச் சித்திரமும் மாநகர்க்குக் கோபுரமும்
ஆடமைத்தோ ணல்லார்க் கணியும்போல்-நாடிமுன்
ஐதுரையா நின்ற வணிந்துரையை யெந்நூற்கும்
பெய்துரையா வைத்தார் பெரிது.

**இது முன்னே நூலன்றென்றதற்குக் காரணஞ் சொல்லுகின்றது.**

(இ-ள்) *மாடக்கு*—மாளிகைக்கு, *சித்திரமும்*—ஓவியமும், *மாநகர்க்கு*—பெரிய பட்டணத்திற்கு, *கோபுரம்*—சிகரியும், *ஆடு*—நாட்டியஞ் செய்கின்ற, *அமை*—மூங்கில் போன்ற, *தோள்*—தோள்களையுடைய, *நல்லார்க்கு*—மங்கையருக்கு, *அணியும்*—ஆபரணமும், *போல்*—போல, *நாடி*—நினைத்து *ஐது*—அழகிய பொருளை, *உரையா நின்ற*—சொல்லுகின்ற, *அணிந்துரையை*—இருவகைப் பாயிரங்களையும், *உரையா*—உரைத்து, *எந்நூற்கும்*—எவ்வகைப்பட்ட பெரிய நூலுக்கும், *முன்*—முன்னே, *பெய்து*—சேர்த்து, *வைத்தார்*—ஆசிரியர் வைத்தார், *பெரிது*—மிகவும். (எ-று.)

**சிறப்புப் பாயிரம் முற்றுப் பெற்றது.**

——x——

# முதலாவது எழுத்ததிகாரம்

## 1. எழுத்தியல்

### [கடவுள் வணக்கமும் அதிகாரமும்]

56. 'பூமலி யசோகின் புனைநிழ லமர்ந்த
நான்முகற் றொழுதுநன் கியம்புவ னெழுத்தே.

**இது கடவுள் வணக்கமும் அதிகாரமும் உணர்த்துகின்றது.**

(இ-ள்) பூ—பூக்களானவை, மலி—நிறைந்த, அசோகின்—அசோகமரத்தினது, புனை—அலங்கரிக்கும், நான்முகன்—நான்கு திருமுகங்களையுடையகடவுளை, தொழுது—வணங்கி, நன்கு—நன்றாக, இயம்புவன்—சொல்லுவன், எழுத்து—எழுத்திலக்கணத்தை. (எ-று.)

ஏகாரம் ஈற்றசை. எல்லாம் வல்ல கடவுளை வணங்கலால் இனிது முடியுமென்பது கருதி நன்கியம்புவனென்று புகுந்தமையின் இது நுதலிப்புகுதலென்னு முத்தி.

### [எழுத்திலக்கணத்தின் பகுதி]

57. எண்பெயர் முறைபிறப்பு உருவ மாத்திரை
முதலீ றிடைநிலை போலி யென்றா
பதம்புணர் பெனப்பன் னிருபாற் றதுவே.

**இது, அவ்வெழுத்திலக்கணம் இவ்வளவிற்றென்பதை யுணர்த்துகின்றது.**

(இ-ள்) எண்—எழுத்தினெண்ணும், பெயர்—பெயரும், முறை—முறையும், பிறப்பு—பிறப்பும், உருவம்—வடிவமும், மாத்திரை—அளவும், முத(னிலை)—முதனிலையும், ஈறு(நிலை) கடைநிலையும், இடைநிலை—இடைநிலையும், போலி—போலியும், பதம்—பதமும், புணர்பு—புணர்ச்சியும், என—என்று, பன்னிருபாற்று—பன்னிருபகுதியினையுடைத்தாகும், அது—அவ்வெழுத்திலக்கணம். (எ-று.)

என்றாவென்பது எண்ணிடைச்சொல். இச் சூத்திரம் தொகுத்துச் சுட்டலென்னுமுத்தி. மேல் வருவன எல்லாம் வகுத்துக் காட்டல்.

### [எழுத்து இன்னதென்பதும் அதன் வகையும்]

58. மொழிமுதற் காரண மாமணுத் திரளொலி
எழுத்தது முதல்சார் பெனவிரு வகைத்தே.

இது எழுத்தின் அகத்திலக்கணமாகிய எண்முதலிய பத்தையும் ஓரியலாகவும், புறத்திலக்கணமாகிய பதம் புணர்பு என்னுமிரண்டனுள் அவ்வெழுத்தாலாம்பத்தை ஓரியலாகாவும், அப்பதம் புணரும் புணர்ச்சியை மூன்றியலாகவும், ஒத்து முறைவைப்பு என்னு முத்தியால் வைக்கப் புகுந்து முதற்கண் வைத்த எழுத்தியலில் எழுத்தின் எண்ணினை அறிவிக்கும்படியாகத் தொடங்கி எழுத்து இப்படிப்பட்டதென்பதும் அதன் வகையும் உணர்த்துகின்றது.

*(இ-ள்) மொழி—சொல்லுக்கு, முதற்காரணமாம்—ஆதி காரணமாகிய, ஒலி—ஒலியாவது, எழுத்து—எழுத்தாகும், அது—அவ்வெழுத்து, முத (லென)—முதலெழுத்தென்றும், சார்பென—சார்பெழுத்தென்றும், இருவகைத்து—இரண்டு வகையினையுடைத்தாகும். (எ-று.)*

*அணுத்திரளென்றது ஒலி நுட்பத்தை. மொழிமுதற் காரணமாம் ஒலி எழுத்தென்றால் ஙா, ஙீ முதலியவை எழுத்தாகா வென்றும், அணுத்திரளொலியென்றால் ஏற்கு, இருமல் முதலியன எழுத்தாமென்றுங் கொள்ளவேண்டுமாதலால் மொழி முதற்காரணமா மணுத்திர ளொலி யெழுத்தென்றார்.*

[முதலெழுத்தின் விரி]

*59. உயிரு முடம்புமா முப்பது முதலே.*

இது முதலெழுத்தின் விரியை உணர்த்துகின்றது.

*(இ-ள்) உயிரும்—ஆவியும், உடம்பும்—மெய்யும், ஆம்—ஆகும், முப்பதும்—முப்பதெழுத்தும், முதல்—முதலெழுத்தாகும். (எ-று.)*

[சார்பெழுத்தின் வகை]

*60. உயிர்மெய் யாய்தம் உயிரள பொற்றளவு*
*அஃகிய இஉ ஐஔ மஃகான்*
*தனிநிலை பத்துஞ் சார்பெழுத் தாகும்.*

இது சார்பெழுத்தின் விரியை யுணர்த்துகின்றது.

*(இ-ள்) உயிர்மெய் — உயிர்மெய்யும், ஆய்தம் — ஆய்தமும், உயிரளபு—உயிரளபெடையும், ஒற்றளபு—ஒற்றளபெடையும், அஃகிய இ—குற்றியலுகரமும், (அஃகிய)உ—குற்றியலுகரமும், (அஃகிய) ஔ—ஔகாரக் குறுக்கமும், அஃகிய மஃகான்—மகரக் குறுக்கமும், (அஃகிய) தனிநிலை—ஆய்தக் குறுக்கமும், பத்தும்—ஆகிய பத்தும், சார்பெழுத்தாகும்—சார் பெழுத்தாகும். (எ-று.)*

*அஃகுதல்—சுருங்குதல்.*

[சார்பெழுத்தின் விரி]

61. உயிர்மெய் யிரட்டுநூற் றெட்டுய ராய்தம்
எட்டுயி ரளபெழு மூன்றொற் றளபெடை
ஆறே ழஃகு மிம்முப் பானேழ்
உகர மாறு றைகான் மூன்றே
ஒளகா னென்றே மஃகான் மூன்றே
ஆய்த மிரண்டொடு சார்பெழுத் துறுவிரி
ஒன்றொழி முந்நூற் றெழுபா னென்ப.

**இதுவுமது —**

(இ-ள்) உயிர்மெய்—உயிர்மெய், இரட்டு நூற்றெட்டு—இருநூற்றுப் பதினாறு, உயராய்தம்—குறுகாத வாய்தம், எட்டு—எட்டு, உயிரளபு—உயிரளபெடை, எழு மூன்று—இருபத்தொன்று, ஒற்றளபெடை—ஒற்றளபெடை, ஆறேழ்—நாற்பத்திரண்டு, அஃகும் இ—குற்றியலிகரம், முப்பானேழ்—முப்பத்தேழு, (அஃகு) முகரம்—குற்றியலுகரம், ஆறுறு—முப்பத்தாறு (அஃகு) மைகான்—ஐகாரக் குறுக்கம், மூன்று—மூன்று, (அஃகு) மௌகான்—ஒளகாரக் குறுக்கம், ஒன்று—ஒன்று, (அஃகு) மஃகான்—மகரக்குறுக்கம், மூன்று—மூன்று (அஃகு) மாய்தம்—ஆய்தக் குறுக்கம், இரண்டொடு—இரண்டுடனே, சார்பெழுத்து—சார்பெழுத்தினது, உறுவிரி—மிகுந்த விரி, ஒன்றொழி முந்நூற் றெழுபான்—முன்னூற்றறுபத்தொன்பதாம், என்ப—என்று சொல்லுவர் புலவர். (எ-று.)

இவை யித்தனையாதல் அவ்வவற்றின் பிறப்பிலக்கணத்திற் காண்க.

## 2. பெயர்

[பெயர்க் கெல்லாம் பொது விலக்கணம்]

62. இடுகுறி காரணப் பெயர்பொதுச் சிறப்பின.

**இது, நிறுத்த முறையானே எழுத்தின் பெயரை அறிவிக்கும் படியாகத் தொடங்கிப் பெயர்க்கெல்லாம் பொது விலக்கண முணர்த்துகின்றது.**

(இ-ள்) இடு குறி காரணப் பெயர்—இடு குறிப் பெயருங் காரணப் பெயருமாகிய விரண்டும், பொதுச் சிறப்பின—பல பொருளுக்குப் பொதுப் பெயராகியும் ஒரு பொருளுக்குச் சிறப்புப் பெயராகியும் வருவனவாம். (எ-று.)

(உதாரணம்) மரம்—இடுகுறிப் பொதுப் பெயர்
பனை—இடுகுறிச் சிறப்புப் பெயர்
அணி—காரணப் பொதுப் பெயர்
முடி—காரணச் சிறப்புப் பெயர்

இனி, இரட்டுற மொழிதலென்னு முத்தியால் இச்சூத்திரத்திற்கு, இடுகுறி காரணப் பெயர்—இடுகுறி யென்றும் காரண மென்றும் சொல்லப்படும் இலக்கணங்களையுடைய பெயர்கள், பொது—இடுகுறி காரண மென்னுமிரண்டற்கும் பொதுவாகியும், சிறப்பின—இடுகுறிக்கே சிறப்பாகியும் காரணத்திற்கே சிறப்பாகியும் வருவனவா மென்றும் பொருளுரைத்துக் கொள்க.

(உதாரணம்) பரம்—இடுகுறிப் பெயர்
பரமன்—காரணப் பெயர்
முக்கண்ணன், அந்தணன் — காரணவிடுகுறிப் பெயர்.

முக்கணனென்பது காரணங் கருதியவழி மூன்று கண்களையுடைய விநாயக மூர்த்தி முதலாகிய பலர்க்குஞ் செல்லுதலாலும், காரணங் கருதாதவழி இடுகுறியளவேயாய் பரமசிவனுக்குச் செல்லுதலாலுங் காரண விடுகுறியாயிற்று.

அந்தணனென்பதும் அப்படியே அழகிய தன்மையையுடைய பலர்க்கும், பார்ப்பாருக்குஞ் செல்லுதல் காண்க.

[எழுத்தின் பெயர்]

63. அம்முத லீரா றாவி கம்முதல்
மெய்ம்மூ வாறென விளம்பினர் புலவர்.

**இது, ஒரு சாரெழுத்தினது பெயராமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) அம்முதல்—அகர முதலாகிய, ஈராறு—பன்னிரண்டனையும், ஆவி (யென) - ஆவி யென்றும், கம்முதல்—ககர முதலாகிய, மூவாறு—பதினெட்டனையும், மெய்(யென)—மெய் யென்றும், விளம்பினர்—சொன்னர், புலவர்—அறிவுடையோர். (எ-று.)

(உதாரணம்) அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ—உயிர்.
க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன்—மெய்.

ஆவியு மெய்யும் போல் இருப்பதால் இவ் விருவகை யெழுத்திற்கும் ஆவி மெய்யென உவமவாகுபெயராய்க் காரணப்

பொதுப் பெயராயின. பிறவெழுத்துக்களு மிவ்வாறே வருதல் காண்க.

64. அவற்றுள்,—
அஇ உஎ ஒக்குறி லைந்தே.

**இதுவுமது:—**

(இ-ள்.) அவற்றுள்—ஆவிமெய் யென்றவற்றுள், அ இ உ எ ஒ—அ இ உ எ ஒ என்கிற, ஐந்தும்—ஐந்தும், குறில்—குற்றெழுத்தாம்.

65. ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ நெடில்,

**இதுவுமது:—**

(இ-ள்.) ஆ, ஈ, ஊ, ஏ, ஓ, ஔ—ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ, என்கிற வேழும் நெடில்—நெட்டெழுத்தாம். (எ-று.)

66. அஇ உம்முதற் றனிவரிற் சுட்டே.

**இதுவுமது:—**

(இ-ள்.) அ, இ, உ,—அ, இ, உ என்கிற மூன்றும், முதல்—சொல்லுக்கு முதலில், தனி—தனித்து, வரின்—சுட்டுப் பொருளைக் காட்ட வந்தால், சுட்டு-சுட்டெழுத்தாம். (எ-று)

முதலெனப் பொதுப்படச் சொன்னதனால் புறத்தும் அகத்தும் வருமெனக் கொள்க.

(**உதாரணம்**) அக்கொற்றன், இக்கொற்றன், உக்கொற்றன், என புறத்தும் வந்தன.
அவன், இவன், உவன் என அகத்தும் வந்தன.

அகரம் தூரத்திலிருக்கின்ற பொருளையும், இகரம் அண்மையிலிருக்கின்ற பொருளையும், சுட்டுதற்கு வரும்.

67. எயா முதலும் ஆ, ஓ வீற்றும்
ஏயிரு வழியும் வினவா கும்மே.

**இதுவுமது:—**

(இ-ள்) எயா—எகரமும் யாவும், முதலும்—சொல்லுக்கு முதலிலும், ஆ, ஓ—ஆகாரமும் ஓகாரமும், ஈற்றும்—சொல்லுக்கு ஈற்றிலும், ஏ—ஏகாரம், இருவழியும்—அவ்விரண்டிடத்திலும் (தனிவரின்)— தனித்து வினப் பொருளைக் காட்ட வந்தால், வினவாகும்—வினவெழுத்தாகும். (எ-று.)

முன் சூத்திரத்திலே தனிவரினென்றது இதற்குங் கூட்டப்பட்டது. ஒன்றின முடித்தல் தன்னின முடித்தல் என்னு முத்தியால் உயிர் மெய்யாகிய 'யா' வினு முன்கூறப்பட்டது. இவை புறத்தும் அகத்தும் வருதலேற்றபடி கொள்க.

(உதாரணம்) எக்கொற்றன், எவன், யாங்ஙனம், யாவன், என எகரமும் யாவும் முதலிலே புறத்தும் அகத்தும் வந்தன. கொற்றனோ, கொற்றனு, என ஆகாரம் ஓகாரம் ஈற்றிலே புறத்து வந்தன,

ஏவன், கொற்றனே, என ஏகாரம் முதலில் அகத்தும் ஈற்றிற் புறத்தும் வந்தது.

68. வல்லினங் கசடதபற வெனு வாறே.

**இதுவுமது:—**

(இ-ள்.) கசடதபறவெனு—கசடதபற வென்ற, ஆறு—ஆறும், வல்லினம்—வல்லினமாம். (எ-று.)

**இது வன்கணமெனவும் பெயர் பெறும்.**

69. மெல்லினம் ஙஞணநமன வெனு வாறே.

**இதுவுமது:—**

(இ-ள்.) ஙஞணநமன வெனு—ஙஞணநமன வென்ற ஆறு—ஆறும், மெல்லினம்—மெல்லினமாம். (எ-று.)

**இது மென்கணம் எனவும் பெயர் பெறும்**

70. இடையினம் யரலவழள வெனு வாறே.

**இதுவுமது:—**

(இ-ள்.) யரலவழள வெனு—யரலவழள வென்ற, (ஆறு—ஆறும், இடையினம்—இடையினமாம். (எ-று.)

**இது இடைக்கணம் எனவும் பெயர் பெறும்.**

[இனவெழுத்து]

71. ஐஔ இஉச் செறிய முதலெழுத்து
இவ்விரண் டோரின மாய்வரன் முறையே.

**இதுவுமது:—**

(இ-ள்) ஐ ஔ—இனமில்லாத ஐகார ஔகாரங்கள், இஉ— ஈகார, ஊகாரங்களுக்கு இனமாகிய இகர உகரங்களை, செறிய—தமக்கு இனமாகப் பொருந்த, முதலெழுத்து—முதலெழுத்துக்களானவை, இவ்விரண்டு—இரண்டிரண்டு, ஓரினமாய்—ஓரினமாகி, வரல்—வருதல், முறை—முறையாதலால், அவை இனவெழுத்தெனப் பெயர் பெறும். (எ—று.)

### [இனமென்றதற்குக் காரணம்]

72. தான முயற்சி யளவு பொருள்வடிவு
ஆனவொன் றுதியோர் புடையொப் பினமே.

**இது இனமென்றதற்குக் காரணம் உணர்த்துகின்றது.**

(இ-ள்) தானம்—பிறப்பிடமும், முயற்சி — தொழிலும், அளவு—மாத்திரையும், பொருள்—பொருளும், வடிவு—உருவமும், ஆன — ஆகியவிவற்றுள், ஒன்றுதி—ஒன்றுமுதலாக, ஓர்புடையொப்பு—ஒருபுடை யொத்தலால், இனம்—இனமாம். (எ—று.)

ஆய்தம் தனிநிலையாகலானும், மற்றைச்சார்பு எழுத்துக்களுக்கு அவ்வவற்றின் முதலெழுத்துக்களின் பெயர்களே பெயர்களாயடங்கலானும், சார்பெழுத்துக்களுக்குப் பெயர் சொல்லாது விட்டார்.

## 3. முறை

73. சிறப்பினு மினத்தினு செறிந்தீண் டம்முதல்
நடத்தல் தானே முறையா கும்மே.

**இது, நிறுத்தமுறையானே எழுத்துக்களின் முறையாமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்.) சிறப்பினும்—சிறப்பினாலும், இனத்தினும்—இனத்தினாலும், செறிந்து—பொருந்தி, ஈண்டு—இவ்வுலகத்தில், அம்முதல்—அகர முதலாக, நடத்தலே—வழங்குதலே, முறையாகும்—எழுத்துக்களது முறையாம். (எ—று.)

குறிலினது விகாரமே நெடிலாதலாற் குறில் முன்னிற்றல்பற்றிச் சிறப்பினும் என்றார். அம்முறையை நெடுங்கணக்கிலே காண்க.

## 4. பிறப்பு

### [பிறப்பின் பொதுவிதி]

74. *நிறையுயிர் முயற்சியி னுள்வளி துரப்ப*
*எழுமணுத் திரளுரங் கண்ட முச்சி*
*மூக்குற் றிதழ்நாப் பல்லணத் தொழிலின்*
*வெவ்வே றெழுத்தொலி யாய்வரல் பிறப்பே.*

**இது, நிறுத்தமுறையானே எழுத்துக்களின் பிறப்பாமாறு அறிவிக்கத் தொடங்கி அப்பிறப்பின் பொதுவிதி உணர்த்துகின்றது.**

(இ—ள்) *நிறை—ஒலியெழுத்திற்கு வேண்டிய காரணங்களிற் குறைவின்றி நிறைந்த, உயிர்—உயிரினது, முயற்சியின்—முயற்சியால், உள்—உள்ளே நின்ற, வளி—(உதானன் என்ற) காற்றினது, துரப்ப—எழுப்ப, எழும்—எழுகின்ற, அணுத்திரள்—செவிப்புலனுமணுக்கூட்டம், உரம்—மார்பும், கண்டம்—கழுத்தும், உச்சி—தலையும், மூக்கு—நாசியும், ஆகிய நான்கிடத்தையும், உற்று—பொருந்தி, இதழ்—உதடும், நா—நாக்கும், பல்—பல்லும், அணம்—மேல்வாயும், ஆகிய நான்கனுடைய, தொழிலின்—முயற்சிகளால், வெவ்வேறு—வேறுவேறு, எழுத்து—எழுத்தாகிய, ஒலியாய் — ஓசைகளாய், வரல்—தோன்றுதல், பிறப்பு—அவற்றின் பிறப்பாம்.* (எ-று.)

### [முதலெழுத்துக்களுக்கு இடப்பிறப்பு]

75. *அவ்வழி,*
*ஆவி யிடைமை யிடமிட றாகும்*
*மேவும் மென்மை மூக்குஉரம் பெறும்வன்மை.*

**இது முதலெழுத்துக்களுக்கு இடஞ் சொல்லுகின்றது.**

(இ—ள்.) *அவ்வழி—முன்சொன்ன வழியிற் பிறக்குமிடத்து, ஆவி—உயிரெழுத்துக்களுக்கும், இடைமை—இடையினத்திற்கும், இடம்—இடம், மிடறாகும் — கழுத்தாகும், மென்மை—மெல்லினம், மூக்கு—நாசியை, மேவும்—இடமாகப் பொருந்தும், வன்மை—வல்லினம், உரம்—மார்பை, பெறும்—இடமாகப் பெறும்.* (எ-று.)

### [முதலெழுத்துக்களுக்கு முயற்சிப் பிறப்பு]

76. *அவற்றுள்,*
*முயற்சியுள் அஆ அங்காப் புடைய*

**இது, முதலெழுத்தினுட் சிலவெழுத்திற்கு முயற்சி வகையாற் பிறப்பு உணர்த்துகின்றது.**

(இ-ள்) அவற்றுள்—மேலிடம் வகுத்த முதலெழுத்துக் களுள், அ ஆ—அ ஆ இரண்டும், அங்காப்புடைய—அண்ணத் தின் தொழிலாகிய அங்காத்தலை யுடையனவாய்ப் பிறக்கும். (எ-று.)

77. இஈ எஏ ஐஅங் காப்போடு
அண்பன் முதல்நா விளிம்புற வருமே.

**இதுவுமது:—**

(இ-ள்) இஈ எஏ ஐ—இஈ எஏ ஐ ஐந்தும், அங்காப் போடு—அங்காப்புடனே, அண்பல்—அண்பல்லை, நாமுதல்—நாக்கடியினது, விளிம்பு—ஓரமானது, உற—பொருந்த, வரும்—பிறக்கும். (எ-று.)

78. உஊ ஒஓ ஔஇதழ் குவிவே.

**இதுவுமது:—**

(இ-ள்) உஊ ஒஓ ஔ—உஊ ஒஓ ஔ என ஐந்தும் பிறத் தற்கேதுவாகிய முயற்சி, இதழ் குவிவு—உதடுகளின் குவி தலாம். (எ-று.)

79. கஙவுஞ் சஞவுஞ் டணவு முதலிடை
நுனிநா வண்ண முறமுறை வருமே.

**இதுவுமது:—**

(இ-ள்) க ங—கவ்வும் ஙவ்வும், (நா) முதல்—நாக்கினடி, (அண்ண முதல்)—மேல்வாயடியையும், சஞ—சவ்வும், ஞவ்வும், (நா) விடை—நாக்கினடு, (அண்ண விடை)—மேல்வாய் நடுவை யும், டண—டவ்வும் ணவ்வும், நா நுனி—நாக்கின் கடை, அண்ண (நுனி)—மேல்வாய்க்கடையையும், உற—பொருந்த, முறை—இம்முறையே, வரும்—பிறக்கும். (எ-று.)

80. அண்பல் லடிநா முடியுறத் தநவரும்.

**இதுவுமது:—**

(இ-ள்) அண்பல்—அண்பல்லினது, அடி—அடியை, நாமுடி—நாக்குநுனி, உற—பொருந்த, தந—தவ்வும் நவ்வும், வரும்—பிறக்கும். (எ-று.)

81. மீகீ ழிதழுறப் பம்மப் பிறக்கும்.

**இதுவுமது:—**

(இ-ள்) மீ(யிதழ்)—மேலுதடும், கீழிதழ்—கீழுதடும், உற—பொருந்த, பம்ம—பவ்வும் மவ்வும், பிறக்கும்—பிறக்கும். (எ-று.)

82 அடிநா வடியண முறயத் தோன்றும்.

**இதுவுமது:—**

(இ-ள்) நாவடி—நாக்கினடியானது, அணவடி—மேல்வாயடியை, உற—பொருந்த, ய—யகரமானது, தோன்றும்—பிறக்கும். (எ-று.)

83 அண்ண நுனிநா வருட ரழவரும்.

**இதுவுமது:—**

(இ-ள்) அண்ண (நுனி)—மேல் வாய்க்கடையை, நாநுனி—நாக்குநுனியானது, வருட—தடவ, ரழ—ரவ்வும், ழவ்வும், வரும்—பிறக்கும். (எ-று)

84. அண்பன் முதலு மண்ணமு முறையின்
நாவிளிம்பு வீங்கி யொற்றவும் வருடவும்
லகார ளகாரமா யிரண்டும் பிறக்கும்.

**இதுவுமது:—**

(இ-ள்) அண்பன்முதல்—அண்பல்லடியை, நாவிளிம்பு—நாவோரமானது, வீங்கி—தடித்து, ஒற்ற—நெருங்க, லகார(மாய்)—லகாரமாகியும், அண்ணம்—மேல்வாயை, (நாவிளிம்பு)—நாவோரமானது, வருட—தடவ, ளகாரமாய்—ளகாரமாகியும், இரண்டும்—இரண்டெழுத்துகளும், முறை—இம்முறையே, பிறக்கும்—பிறக்கும். (எ-று.)

85. மேற்பல் லிதழுற மேவிடும் வவ்வே.

**இதுவுமது:—**

(இ-ள்) மேற்பல்—மேற்பல்லானது, இதழ்—கீழுதட்டை, உற—பொருந்த, வ—வகரமானது, மேவிடும்—பிறக்கும். (எ-று.)

86. அண்ண நுனிநா நனியுறிற் றனவரும்.

**இதுவுமது:—**

(இ-ள்) அண்ணம்—மேல்வாயை, நாநுனி—நாக்குநுனி, நனியுறின்—மிகப் பொருந்தின், றன—றவ்வும் னவ்வும், வரும்—பிறக்கும். (எ-று.)

**[சார்பெழுத்துக்கு இடமுயற்சி]**

87. ஆய்தப் கிடந்தலை யங்கா முயற்சி
சார்பெழுத் தேனவுந் தம்முத லனைய.

**இது சார்பெழுத்திற்கு இடமுயற்சி வகையாற் பிறப்பு உணர்த்து கின்றது.**

(இ-ள்) ஆய்தக்கு—ஆய்தம் பிறத்தற்கு, இடம்—இடமானது, தலை—தலையாம், முயற்சி—தொழிலானது, அங்கா—வாயைத் திறத்தலாம், சார்பெழுத்தெனவும்—ஆய்தம் நீங்கலாகிய மற்றைச் சார்பெழுத்துகளும், தம்முதலனைய—தம்முதலெழுத்துக்களோடொப்பனவாய்ப் பிறக்கும். எ-று.

**[பிறப்புக்குப் புறனடை]**

88. எடுத்தல் படுத்தல் நலித லுழப்பின்
திரிபுந் தத்தமிற் சிறிதுள வாகும்.

**இது முன்சொன்ன பிறப்பிற்கு ஓர்புறநடை உணர்த்துகின்றது.**

(இ-ள்) பலவெழுத்திற்குப் பிறப்பு ஒன்றாகச் சொல்லப்பட்டாலும், எடுத்தல்—எடுத்தலும், படுத்தல்—படுத்தலும், நலிதல்—நலிதலும் ஆகிய, உழப்பின்—எழுத்திற்குரிய ஒலி முயற்சியால், திரிபும்—ஒன்றற்கொன்று பிறப்பு வேறுபாடுகளும், தத்தமில்—அவ்வவற்றின்கண், சிறிது—சிறிது சிறிது, உளவாகும்—உள்ளனவாம். (எ-று.)

**[உயிர்மெய்]**

89. புள்ளிவிட் டவ்வொடு முன்னுரு வாகியும்
ஏனை யுயிரோ டுருவு திரிந்தும்
உயிரள வாயதன் வடிவொழித் திருவயிற்
பெயரொடு மொற்றுமுன் னய்வரு முயிர்மெய்.

**இது முன் பிறப்புச் சொல்லிய சார்பெழுத்திற்குச் சார்ந்து வருமாறு மோர் பிறப்பாதலாற் பிறப்பிலக்கணத்துளடக்கி அறிவிக்கத் தொடங்கி அவற்றுள் உயிர்மெய் வருமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) புள்ளிவிட்டு—மெய்புள்ளியை விட்டு, அவ்வொடு—அகரத்தோடு கூடிய வழி, முன்னுருவாகியும்—அவ்விட்டவுரு வேயுருவாகியும், ஏனையுயிரோடு—அது நீங்கலாகிய வுயிர்க ளோடுகூடிய வழி, உருவுதிரிந்தும்—உருவுவேறுபட்டும், உயி ரளவாய்—தன்மாத்திரைதோன்றாது உயிர் மாத்திரையே மாத்திரையாய், அதன் வடிவொழித்து—தன் வரிவடிவின் விகாரவடிவே வடிவாய் உயிர் வடிவை யொழித்து, இருவயிற் பெயரொடும்—உயிரும் மெய்யும் ஆகிய இரண்டிடத்தும் பிறந்த உயிர்மெய்யென்னும் பெயருடனே, ஒற்றுமுன் னாய்—ஒற்றொலிமுன்னும் உயிரொலி பின்னுமாகி, உயிர் மெய்—உயிர்மெய் யெழுத்து, வரும்—வரும். (எ-று.)

க் + அ—க, க் + ஆ—கா, க் + இ—கி, க் + ஈ—கீ, க் + உ—கு, க் + ஊ—கூ, க் + எ—கெ, க் + ஏ—கே, க் + ஐ | கை, க் + ஒ—கொ, க் + ஓ—கோ, க் + ஔ—கௌ—இப்படியே மற்ற மெய்களின் மேலும் பன்னிரண்டு உயிர்களுங் கூடலால் இரு நூற்றுப்பதினாறாதல் காண்க.

[முற்றாய்தம்]

90 குறியதன் முன்ன ராய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே.

**இது, முற்றாய்தம் வருமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) ஆய்தப் புள்ளி—புள்ளி வடிவினதாகிய வாய்தம் குறியதன் முன்னர்—குற்றெழுத்தின் முன்னதாய், உயி ரொடு புணர்ந்த—உயிரொடு கூடிய, வல்லாறன் மிசைத்து—வல்லெழுத்தாறனுள் ஒன்றன் மேலதாய் வரும். (எ-று.)

(உ-ம்) எஃகு, கஃசு, இருபஃது, எனவரும். பிறவு மன்ன.

இச்சூத்திரம் மேற்கோளாதலால் தானெடுத்து மொழித லென்னு முத்தி. வல்லின வகையாலியல்பாக வருமாய்தமாறு ஞெடு அஃகடிய எனப் புணர்ச்சி விகாரத்தால் வருமாய்தமும், அஃகான் எனச் செய்யுள் விகாரத்தால் வருமாய்தமும், கூடி எட்டாதல் காண்க.

[உயிரளபெடை]

91. இசைகெடின் மொழிமுத லிடைகடை நிலைநெடில்
அளபெழு மவற்றவற் றினக்குறில் குறியே.

**இது, உயிர் அளபெடை வருமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) இசைகெடின்—பாட்டிலோசை குறையின், மொழி—அவ்வோசை குறைந்த சொல்லுக்கு, முதல்—முதலாகிலும், இடை—நடுவிலாகிலும், கடை—இறுதியிலாகிலும், நிலை—நின்ற, நெடில்—நெட்டெழுத்தேழுளொன்று, அளபெழும்—அவ்வோசையைக் குறைக்கத் தன் மாத்திரையின் மிகுந்தொலிக்கும், அவற்று—அவற்றின் பின், அவற்றினக் குறில்—அததற்கினமாகியகுற்றெழுத்துக்கள், குறி—அளபெடுத்தமையை அறிதற்கு வரிவடிவில் அறிகுறியாய் வரும். (எ-று.)

**உதாரணம்** "ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
யாஅது மென்னு மவர்"
"உறாஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
செறாஅஅய் வாழிய நெஞ்சு"
"அனிச்சப்பூங் கால்களையாள் பெய்தா ளுசுப்பிற்கு
நல்ல படாஅ பறை"
எனவரும்.

ஓதலில் 'ஓ' முதலிலும், உறாரில் 'ஆ' இடையிலும், படாவில் 'ஆ' இறுதியிலும் அளபெடுத்தன. மற்றைய நெட்டெழுத்துக்களும் இப்படியே அளபெடுக்கும். "செறாஅய்" ஈரளபெடுத்தது.

ஔகாரஞ் சொல்லுக்கு நடுவிலும், கடையிலும், வாராமையால் அவ்விடங்களில் அது நீங்கலாக, நின்று அளபெடுக்கின்ற அளபெடை பத்தொன்பதோடும்,

"கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய் மற்றாங்கே
யெடுப்பதூஉ மெல்லா மழை".

என வின்னிசை நிறைக்க வருமளபெடையும்,
"உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன்."
எனச் சொல்லிசை நிறைக்க வருமளபெடையுங்
கூடி உயிரளபெடை யிருபத்தொன்றாய் வருதல் காண்க.

[ஒற்றளபெடை]

92. ஙஞண நமன வயலள வாய்தம்
அளபாங் குறிலிணை குறிற்கீ ழிடைகடை
மிகலே யவற்றின் குறியாம் வேறே.

**இது, ஒற்றளபெடை வருமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) (இசைகெடின்)—பாட்டிலோசை குறையின், (குறிலிணைக் கீழ்)—குறிலிணையின் கீழாவது, குறிற்கீழ்—

குறிற் கீழாவது, இடை— சொல்லுக்கு நடுவிலாயினும், கடை—சொல்லுக்கு கடைசியிலாயினும், ஙஞண நமன வயலள—ஙம் முதலிய விப்பத்துள் ஒன்றேனும், ஆய்தம்—ஆய்தமெனும், அளபு மிகலாம்—அவ்வோசையை நிறைக்கத் தன் மாத்திரையின் மிகுந்தொலிக்கும், அவற்றின் வேறு குறியாம்—அப்படி யளபெடுத்தமையை யறிதற்கு அவற்றின் பின் அவ்வெழுத்துகளே வரிவடிவில் அறிகுறியாய் வரும். (எ-று.)

முன் சூத்திரத்தில் இசை கெடினென்றது இதற்குங் கூட்டப் பட்டது,

**உதாரணம்** "இலங்ங்கு வெண்பிறைசூ டீசனடி யார்க்குக்
கலங்ங்கு நெஞ்சமிலை காண்", எ-ம்,
"எங்ங் கிறைவனுள னென்பாய் மனனேயா
னெங்ங்கெனத் திரிவா ரின்" எ-ம்,
"மடங்ங் கலந்த மனனே களத்து
விடங்ங் கலந்தானை வேண்டு" எ-ம்,
"அங்ங் கனிந்த வருளிடத்தார்க் கன்புசெய்து
நங்ங் களங்கறுப்பா நாம்" எ-ம், வரும்.

இலங்கு—குறிலிணைக் கிழிடையிலும், எங்கு-குறிற் கீழிடையிலும், மடங்கு—குறிலிணைக் கீழ்க்கடையிலும், அங்—குறிற் கீழ்க் கடையிலும் ஙகரம் அளபெடுத்தது.

"எஃஃ கிலங்கிய கையரா யின்னுயிர்
வெஃஃகு வார்க்கில்லை வீடு"

ஆய்தமளபெடுத்தது. மற்ற மெய்களும் அப்படியே அளபெடுக்கும்.

ஙகரம் போல விதியீருகவும் வாராமையால் ஆய்தத்தை யிறுதியில் விலக்கி ஒற்றளபெடை நாற்பத்திரண்டாதல் காண்க.

### [குற்றியலிகரம்]

93. யகரம் வரக்குற ளுத்திரி யிகரமும்
அசைச்சொன் மியாவி னிகரமுங் குறிய.

**இது, குற்றியலிகரம் வருமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) யகரம் வர—யகரத்தை முதலிலேயுடைய சொல் வர, குற்று—குற்றியலுகரம், திரி—திரிந்த, இகரமும்—இகரமும், அசைச்சொல்—அசைச் சொல்லாகிய, மியாவின்—மியாவென்பதின் மகரத்தின் மேலிருக்கிற, இகரமும்—இகரமும் குறிய—குற்றியலிகரங்களாம். (எ-று.)

**(உதாரணம்)** நாகியாது, எஃகியாது, வரகியாது, கொக்கியாது, குரங்கியாது, அல்கியாது, எம். கேண்மியா, எம். வரும். பிறவு மிப்படியே வரும். நாகு + யாது = நாகியாது என்றாதல் காண்க.

பொதுப்படக் கூறிய குற்றியலுகரம் முப்பத்தாறனும், அசைச்சொன் மியாவினுனும், குற்றியலிகரம் முப்பத்தேழாய் வருமாறு காண்க.

**[குற்றியலுகரம்]**

**94.** நெடிலோ டாய்த முயிர்வலி மெலியிடை
தொடர்மொழி யிறுதி வன்மையூ ருகரம்
அஃகும் பிறமேல் தொடரவும் பெறுமே.

**இது குற்றியலுகரம் வருமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) நெடிலோடு—தனிநெடிலேழுடனே, ஆய்தம்—ஆய்த மொன்றும், உயிர்—சொல்லுக்கு நடுவிலுங் கடையிலும் வாராத ஔகாரம் நீங்கிய உயிர் பதினொன்றும், வலி—வல்லெழுத்தாறும், மெலி—மெல்லெழுத்தாறும், இடை—வல்லெழுத்துக்களோடு தொடராத வகரம் நீங்கிய இடை யெழுத்தைந்தும் ஆகிய முப்பத்தாறனுள்ளொன்றால், தொடர்—ஈற்றுக்கு அயலெழுத்தாகத் தொடரப் பட்டு, மொழியிறுதி—சொல்லினிறுதியில், வன்மை—வல்லெழுத்துகளுள் யாதாயினு மொன்றன் மேல், ஊர்—ஏறிவருகின்ற, உகரம்—உகரமானது, அஃகும்—தன் மாத்திரையிற் குறுகும், பிற—பிறவெழுத்துக்களுள் ஒன்றும் பலவும், மேற்றொடரவும்—குறுகுதற்கு மொழி நிறைதற்குங் காரணமாக மேலே தொடரவும், பெறும்—தனி நெடிலொழிந்தவைந்து தொடரவும் பெறும். (எ-று.)

**உதாரணம்.** நாகு, சிரசு, நீறு—நெடிற்றொடர்.
எஃகு—ஆய்தத் தொடர்
வரகு, பலாசு, கரிது—உயிர்த்தொடர்
கொக்கு, கச்சு, பற்று—வன்றொடர்
குரங்கு, மஞ்சு, கன்று—மென்றொடர்
தெள்கு, சேர்பு, வீழ்து—இடைத்தொடர்
எனவரும். பிறவு மிப்படியே வரும்.

இங்கே, ஈற்றயலெழுத்தைக் கொண்டு ஆறுவகையாகச் சொல்லிப் பின்னே புணரியல் முதலான விடங்களிலே எடுத்தாளுதலால் முன் மொழிந்து கோடலென்னு முத்தி.

மொழிந்த பொருளோடொன்றவவ்வயின் மொழியாத தனையு முட்டின்று முடித்தலென்னு முத்தியால், நுந்தை யென்னும்முறைப் பெயரின் முன் நின்ற நகர மெய்யிலிருக் கிற உகரமுங் குறுகு மென்று கொள்க.

### [ஐகார ஔகாரக் குறுக்கங்கள்]

95. தற்சுட் டளபொழி யைம்மூ வழியும்
நையு ஔவு முதலற் றாகும்.

**இது, ஐகார ஔகாரக் குறுக்கங்கள் வருமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) ஐ—ஐகாரம், தற்சுட்டளபு—தன்னைக் குறித்துத் தன் பெயர் சொல்லுமளவிற் குறுகாது, ஒழி—ஒழிந்த, மூவழி யும்—சொல்லுக்கு முதலிடை கடைகளிலே எங்கே நின்றா லும், நையும்—தன் மாத்திரையிற் குறுகும், ஔவும்—ஔ காரமும், முதல்—சொல்லுக்கு முதலில், அற்றாகும்—தன் மாத்திரையிற் குறுகும். (எ-று.)

**உதாரணம்.** ஐப்பசி, வலையன், குவளை, எ-ம்,
மௌவல், எ-ம், வரும்.

இடவகையால் ஐகாரக் குறுக்கம் மூன்றும், ஔகாரக் குறுக்கம் ஒன்றும் வருதல் காண்க.

### [மகரக் குறுக்கம்]

96. ணனமுன்னும் வஃகான் மிசையுமக் குறுகும்.

**இது, மகரக் குறுக்கம் வருமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) ணன—ணகரனகாரங்களிலொன்று நின்று தொடர, முன்னும்—அதன் முன்னின்றாலும், வஃகான்— வகரம் வந்து தொடர, மிசையும்—அதன் பின்னின்றாலும், ம—மகரம், குறுகும்—தன்மாத்திரையிற் குறையும். (எ-று.)

**உதாரணம்.** "வெருளினு மெல்லாம் வெருளு மஃதன்றி
மருளினு மெல்லாம் மருண்ம்" எ-ம்,
"திசையறி மீகானும் போன்ம்" எ-ம்,
தாரும் வளவன்" எ-ம், வரும்.

இவற்றுள், மருளும்—மருண்ம், போலும்—போன்ம் என் றாதலால் செய்யுமென்னு வாய்பாட்டு வினை முற்றுச் சொல் லிலே ள—ல திரிந்த ண—ன வென்றறிக.

இச் சூத்திரக் கருத்தைப் பின் வருஞ் சில சூத்திரங்களைக் கொண்டு உய்த்துணர வைத்தலால் இது உய்யத்துணர வைத்த லென்னு முத்தி.

97. லளவீற் றியைபினு மாய்த மஃகும்.

**இது, ஆய்தக் குறுக்கம் வருமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) லளவீற்றியைபின்—லகார ளகார வீற்றுப் புணர்ச்சியில் ஆம்—ஆகின்ற, ஆய்தம்—குறில்வ ழிலளத்தவ் வணையினய்த, மாகவும் பெறாஉ மல்வழி யானே என்னுமாய் தம், அஃகும்—தன் அரைமாத்திரையிற் குறுகும். (எ-று.)

**உதாரணம்.** கஃறீது, முஃடீது, எனவரும்.

இது முடிவிடங் கூறலென்னு முத்தி.

## 5. உருவம்

98. தொல்லை வடிவின வெல்லா வெழுத்துமாண்
டெய்து மெகர வொகரமெய் புள்ளி.

**இது, நிறுத்த முறையானே உருவமாமாறு உணர்த்துகின்றது**

(இ-ள்) எல்லாவெழுத்தும்—எல்லாவெழுத்துக்களும், தொல்லைவடிவின—பல்வேறுவகைப்பட்டு எழுதி வழங்கும் பழையவடிவினையுடையனவாம், ஆண்டு—அவ்வடிவையுடை யனவாய் வழங்குமிடத்து, எகரம்—எகரமும், ஒகரம்—ஒகரமும், மெய்—மெய்களும், புள்ளி—புள்ளியை, எய்தும்—பெறும். (எ—று.)

**உதாரணம்:—** ஒ், எ், க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் எனவரும்.

## 6. மாத்திரை

**[எழுத்துக்களின் மாத்திரை]**

99. மூன்றுயி ரளபிரண் டாநெடி லொன்றே
குறிலோ டையெளக் குறுக்க மொற்றள
பரையொற் றிஉக் குறுக்க மாய்தங்
கால்குறண் மஃகா னய்த மாத்திரை.

**இது, நிறுத்தமுறையானே மாத்திரையாமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) மாத்திரை—ஒலிக்குமளவு, உயிரளபு—உயிரள பெடைக்கு, மூன்றும்—மூன்றாகும், நெடில்—நெட்டெழுத் திற்கு, இரண்டாம்—இரண்டாகும், குறில்—குற்றெழுத்திற்

கும், ஐக்(குறுக்கம்)—ஐகாரக்குறுக்கத்திற்கும், ஔக்குறுக்கம்—ஔகாரக்குறுக்கத்திற்கும், ஒற்றளபு—ஒற்றளபெடைக்கும், ஒன்று—தனித்தனி யொன்றாகும், ஒற்று—மெய்யெழுத்திற்கும், இக்(குறுக்கம்)—குற்றியலிகரத்திற்கும், உக்குறுக்கம்—குற்றியலுகரத்திற்கும், ஆய்தம்—ஆய்தத்திற்கும், அரையாம்—தனித்தனியரையாகும், குறண்மஃகான்—மகரக்குறுக்கத்திற்கும்,குறளாய்தம்—ஆய்தக்குறுக்கத்திற்கும், காலாம்—தனித்தனிகாலாகும். (எ-று.)

மேல்உயிரளவாயென்று சொன்னதனால் இங்கே உயிர்மெய்க்கு மாத்திரை சொல்லவில்லை.

[மாத்திரை இன்னதென்பது]

100. இயல்பெழு மாந்த ரிமைநொடி மாத்திரை.

**இது ஒரு மாத்திரை யென்னுங்காலவளவை உணர்த்துகின்றது.**

(இ-ள்) மாந்தர்—மனிதருடைய, இயல்பு—இயல்பாக, எழும்—உண்டாகின்ற, இமை—கண்ணிமைப்பொழுதும், நொடி—கைந்நொடிப்பொழுதும், மாத்திரை—ஒரு மாத்திரை யென்னும் வரையறைப்பொழுதாம். (எ-று.)

**இது பின்னது நிறுத்தலென்னு முத்தியால் மாத்திரையினளவைப் பின்னாகச் சொன்னார்.**

[மாத்திரைக்குப் புறனடை]

101. ஆவியு மொற்று மளவிறந் திசைத்தலு
மேவு மிசைவிளி பண்டமாற் றாதியின்.

**இது "மூன்றுயிரளபெடை" என்னுஞ் சூத்திர விதிக்குப் புறனடை யுணர்த்துகின்றது.**

(இ-ள்) ஆவியும்—முதலும்சார்புமாகிய உயிரெழுத்துக்களும், ஒற்றும்—அவ்விருவகை மெய்யெழுத்துக்களும், அளவிறந்து—முன்சொன்ன வளவைக்கடந்து, இசைத்தலும்—அதிகமாக ஒலித்தலையும், மேவும்—பொருந்தும், இசை—இராகமும், விளி—அழைத்தலும், பண்டமாற்று—பண்டமாற்றலும், ஆதியின்—முதலானவைகளிடத்தென்றவாறு.

ஆதியென்றவதனால் புலம்பல் முதலியவைகளுங்கொள்க. இராகத்தில் அதிகமாக ஒலிக்கும்போதும், உயிர் பன்னிரண்டு மாத்திரையீறாகவும், ஒற்றுப்பதினொரு மாத்திரையீறாகவும் ஒலிக்குமென்பார் இசை நூலார். இது பிறநூன்முடிந்தது தானுடன்படுதலென்னுமுத்தி.

## 7. முதனிலை

102. பன்னீ ருயிருங் கசதந பமவய
ஞஙவீ ரைந்துயிர் மெய்யு மொழிமுதல்.

**இது, நிறுத்த முறையானே மொழிக்கு முதலாமாறு உணர்த்துகின்றது**

(இ-ள்) பன்னீருயிரும்—பன்னிரண்டு உயிர் எழுத்துக்களும், கசதநபமவயஞங—ககர முதல் ஙகர மீறாகச் சொல்லப்பட்ட, ஈரைந்து—பத்து, உயிர்—உயிரேறிய, மெய்யும்—மெய்யெழுத்துக்களும், மொழி—சொல்லுக்கு, முதல்—முதலாகும். (எ-று.)

**உதாரணம்.** அடை, ஆடை, இடை, ஈடு, உடை, ஊடல் எடு, ஏடு, ஐயம், ஒதி, ஓதி, ஔவியம், எனவும்,

களி, சவடி, தளிர், நலம், படை, மலை, வளம், யவனர், ஞமலி, அங்ஙனம், எனவும் வரும்.

உயிர் போலத் தனித்து முதலாக மாட்டாமையால் உயிர்மெய் என்றார். இது இன்னதல்லதிதுவெனமொழிதலென்னுமுத்தி.

[பொது விதியுட் சிறப்புவிதி]

103. உ ஊ ஒ ஓ வலவொடு வம்முதல்

**இது, முதலாமென்ற மெய்களுட் சிறப்புவிதி உணர்த்துகின்றது.**

(இ-ள்) உ ஊ ஒ ஓ வலவோடு—உ ஊ ஒ ஓ என்கிற நான்குமல்லாத எட்டுயிர்களோடும், வ—வகர மெய்யானது, முதல்—சொல்லுக்கு முதலாகும். (எ-று.)

**உதாரணம்.** வளி, வாளி, விளி, வீறு, வெளி, வேளை, வைகல், வௌவு, எனவரும்.

104. அ ஆ உ ஊ ஒ ஔ யம்முதல்.

**இதுவுமது:—**

(இ-ள்) அ ஆ உ ஊ ஓ ஔ (வொடு) — அ ஆ உ ஊ ஓ ஔ என்கிற ஆறுயிரோடும், ய—யகரமெய், முதல்—சொல்லுக்கு முதலாகும். (எ-று.)

முன் சூத்திரத்தின் ஒடுவை வருவிக்கலாயிற்று.

**உதாரணம்.** யவனர், யானை, யுகம், யூகி, யோகி, யௌவனம், எனவரும்.

105. அஆஎ ஒவ்வோ டாகு ஞம்முதல்.

**இதுவுமது:—**

(இ-ள்) அ, ஆ, எ, ஒவ்வோடு—அ ஆ எ ஒ என்கிற நான் குயிரோடும், ஞ—ஞகர மெய், முதலாகும்—சொல்லுக்கு முதலாகும். (எ-று.)

**உதாரணம்.** ஞமலி, ஞாலம், ஞெகிழி, ஞொள்கிற்று எனவரும்.

106. சுட்டியா வெகர வினவழி யவ்வை
ஒட்டி நவ்வு முதலா கும்மே

**இதுவுமது:—**

(இ-ள்) சுட்டு—மூன்று சுட்டும், யாவினா—யாவினாவும், எகர வினா—எகர வினாவும் ஆகிய ஐந்தனுடைய, வழி—பின்பு, அவ்வை—அகரத்தை, ஒட்டி—சேர்ந்து, நவ்வும்—நகர மெய்யும், முதலாகும்—சொல்லுக்கு முதலாகும். (எ-று.)

**உதாரணம்.** அந்நனம், இந்நனம், உந்நனம், யாந்நனம், எந்நனம், எனவரும்.

ஒரு விதத்தினாலே முதலாகையால் நவ்வுமென இழிவு சிறப்பும்மை கொடுத்துக் கூறினர். முதலாகாதென்பவருக்கு உடன்படுதலும் மறுத்தலும் ஆதலால் பிறர்தம்மதமேற் கொண்டுகளை வென்னுமதம்.

## 8. இறுதி நிலை

[மொழிக்கிறுதியில் வரும் எழுத்துக்கள்]

107. ஆவி ஞணநமன யரல வழளமெய்
சாயு முகரநா லாறு மீறே.

**இது, நிறுத்த முறையானே மொழிக்கீறுமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) ஆவி—தனித்தும் மெய்யோடும் வரும், பன்னிரண்டு உயிர்களும், ஞணநமன யரலவழள மெய்—இப்பதினோரு மெய்களும், சாயு முகரம்—குற்றியலுகரமுமாகிய, நாலாறும்—இருபத்து நான்கெழுத்துக்களும், ஈறு—மொழிக்கீறாகும். (எ-று.)

**உதாரணம்.** விள, பலா, கரி, தீ, கடு, பூ, சேஎ, தே, தை, நொ, போ, கௌ, எ—ம், உரிஞ், மண், பொருந், மரம், பொன், வேய், வேர், வேல், தெவ், வீழ், வாள், அஃகு, எ—ம், வரும்.

[சிலவற்றிற்குச் சிறப்பு விதி]

108. குற்றுயி ரளபி னீறா மெகர
மெய்யொடே லாதொந் நவ்வொ டாமௌக்
ககர வகரமோ டாகு மென்ப.

**இது, முன்னீருமென்ற வெழுத்துட் சிலவற்றிற்குச் சிறப்புவிதி யுணர்த்துகின்றது.**

(இ-ள்) குற்றுயிர்—அ இ உ எ ஒ என்கிற குற்றுயிரானவை, அளபின்—அளபெடையிலே, ஈறும்—வரிவடிவில் அறிகுறியாகத் தனித்து ஈறுகும், எகரம்—எகரமானது, மெய்யோடேலாது—மெய்யோடீறுகாது, ஒ—ஒகரமானது, நவ்வோடாம்—நகர மெய்யொன்றுடனீறுகும், என்ப—என்று சொல்லுவர் புலவர். (எ-று.)

**உதாரணம்** பலாஅ, தீஇ, பூஉ, சேஎ, கைஇ, கோஒ, கௌஉ, எ—ம், நொ, எ—ம், கௌ, வௌ, எ—ம், வரும்.

[எழுத்தின் முதலு மீறும்]

109. நின்றநெறி யேயுயிர் மெய்முத வீறே.

**இது, எழுத்தினது முதலுமீறு மாமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) நின்ற நெறியே—மெய் முதலும் உயிர் பின்னுமாக ஒலித்து நின்ற வழியே, உயிர் மெய்—உயிர் மெய்க்கு, முதல்—மெய் முதலாகும், ஈறு—உயிரீறுகும். (எ-று.)

எனவே உயிரும் மெய்யும் ஆய்தம் முதலிய ஒன்பது சார்பெழுத்துக்களும் ஓரெழுத்தாகையால், அவற்றிற்கு முதலும் மீறும் அவையேயாம் என்பதை அருத்தாபத்தியாற் கூறினும், இது எஞ்சிய சொல்லினெய்தக் கூறலென்னு முத்தி. இப்படிச் சொல்லாதவை யெல்லாம், சொல்லின் முடிவினப்பொருண் முடித்தலென்னு முத்தி.

## 9. இடைநிலை மயக்கம்

110. கசதப வொழித்த வீரேழன் கூட்ட
மெய்ம்மயக் குடனிலை ரழவொழித் தீரெட்டு
ஆகுமிவ் விருபால் மயக்கு மொழியிடை
மேவு முயிர்மெய் மயக்கள வின்றே.

**இது, நிறுத்த முறையானே மெய்யுடன் மெய் மயங்கலும் உயிரு மெய்யுமாறி மயங்கலுமாகிய இடைநிலை மயக்க மாமாறு உணர்த்து கின்றது.**

(இ-ள்) கசதப—கசதப வென்னு நான்கையும், ஒழித்த—நீக்கிய, ஈரேழன் கூட்டம்—பதினான்கு மெய்களும் பிற மெய்க ளோடு கூடுங் கூட்டம், மெய்ம் மயக் (காகும்) — வேற்றுநிலை மெய்ம் மயக்கமாம், ரழ—ரழ விரண்டனையும், ஒழித்து—நீக்கி, ஈரெட்டு—மற்றைய பதினாறு மெய்களும், (கூட்டம்) — தம் மோடு கூடுங் கூட்டம், உடனிலை (மெய்ம்மயக்) காகும்—உடனிலை மெய்ம் மயக்கமாகும், இவ்விருபான் மயக்கும்—இவ்விருவகை மயக்கமும், மொழி—ஒரு மொழிக்கும் தொடர் மொழிக்கும், இடை—நடுவில், மேவும்—வரும், உயிர் மெய்—உயிருடன் மெய்யும், மெய்யுடன் உயிரும், மயக்கு—மாறி மயங்கு மயக் கத்திற்கு, அளவின்று—அளவில்லை, வேண்டியவாறே மயங்கு மென்றவாறு.

கூட்ட மென்றாலும் மயக்க மென்றாலும், சையோக மென்றாலும் ஒரு பொருள். பின்னுடனிலையென்றதனால் முன் பிறமெய்யென்பது சொல்லப் பட்டது.

உயிர்மெய் மயங்குதற்கு உதாரணம்:—

அல, வில, எ—ம், கா, எ—ம், வரும். மற்றவைகளுக்கு உதாரணம் பின் வருஞ் சிறப்புச் சூத்திரங்களுட் காண்க.

[வேற்று நிலை மெய்ம்மயக்கத்திற்கு சிறப்புவிதி]

111. நம்முன் கவ்வாம் வம்முன் யவ்வே.

**இது, வேற்று நிலை மெய்ம்மயக்கத்துள் விதந்து சிறப்புவிதி உணர்த்துகின்றது.**

(இ-ள்) நம்முன்—ஙகரத்தின் முன், க—ககரமும், வம் முன்—வகரத்தின் முன், ய—யகரமும், ஆம்—மயங்கும். (எ-று.)

**உதாரணம்.** கங்கணம், எ—ம், தெவ்யாது, எ—ம், வரும்.

112. ஞநமுன் தம்மினம் யகரமொ டாகும்.

**இதுவுமது:—**

(இ-ள்) ஞநமுன்—ஞகர நகரங்களின் முன், தம்மினம்—அவற்றிற்கினமாகிய, சகரதகரங்களும், ய—யகரமும், ஆகும்—மயங்கும். (எ-று.)

**உதாரணம்.** கஞ்சன், உரிஞ்யாது, எ—ம், கந்தன், பொருந்யாது, எ—ம், வரும்.

113. டறமுன் கசப மெய்யுடன் மயங்கும்.

**இதுவுமது:—**

(இ-ள்) டறமுன்—டகர றகரங்களின் முன், கசபமெய்—கசப வென்கிற மூன்று மெய்களும், உடன் மயங்கும்—இணங்கி மயங்கும். (எ-று.)

**உதாரணம்.** கட்கம், கட்சி, திட்பம், எ—ம், கற்க, கற்சிறுர், கற்ப, எ—ம், வரும்.

114. ணனமுன் னினங்கச ஞபமய வவ்வரும்.

**இதுவுமது:—**

(இ-ள்) ணனமுன் — ணகரனகரங்களின் முன்னர், இனம்—அவற்றிற்கினமாகிய டகர றகரங்களும், கசஞபமயவ—ககர முதலிய விவ்வேழு மெய்களும், வரும்—மயங்கும். (எ-று.)

**உதாரணம்.** விண்டு, வெண்கலம், வெண்சோறு, வெண்ஞமலி, வெண்பல், வெண்மலர், மண்யாது, மண்வலிது, எனவும், புன்றலை, புண்கண், புன்செய், புன்ஞமலி, புன்பயிர், புன்மலர், பொன்யாது, பொன்வலிது என்றும் வரும்.

115. மம்முன் பயவ மயங்கு மென்ப.

**இதுவுமது:—**

(இ-ள்) மம்முன்—மகரத்தின் முன், பயவ—பயவ வென்னு மூன்று மெய்களும், மயங்கு மென்ப—மயங்கு மென்று சொல்லுவர் புலவர். (எ-று.)

**உதாரணம்.** கம்பன், கலம்யாது, கலம்வலிது, எனவரும்.

116. யரழ முன்னர் மொழிமுதன் மெய்வரும்.

இதுவுமது:—

(இ-ள்) யரழமுன்னர்—யரழவென்னு மூன்று மெய்க ளின் முன், மொழி முதன் மெய்—மொழிக்கு முதலாக நின்ற பத்து மெய்களும், வரும்—மயங்கும். (எ-று.)

உதாரணம். வேய்கடிது, வேர்கடிது, வீழ்கடிது—
சிறிது, பெரிது, தீது, நீண்டது, மாண்டது
ஞான்றது, யாது, வலிது, இவற்றையும் அம்
மூன்றுடன் கூட்டுக. வேய்ங்குழல், ஆர்ங்
கோடு, பாழ்ங்கிணறு, எனவரும்.

117. லளமுன் கசப வயவொன் றும்மே.

இதுவுமது:—

(இ-ள்) லளமுன்—லகர ளகரங்களின் முன், கசபவய—ககர முதலிய விவ்வைந்தும், ஒன்றும்—மயங்கும். (எ-று.)

உதாரணம். வேல்கடிது, வாள்கடிது, சிறிது, பெரிது,
வலிது, யாது, இவற்றையுங் கூட்டுக.

[இடைநிலை மெய்ம்மயக்கத்தின் சிறப்புவிதி]

118. ரழவல்லன தம்முற் றாமுட னிலையும்.

இது, இடை நிலை மயக்கத்தின் சிறப்புவிதி உணர்த்துகின்றது.

(இ-ள்) ரழவல்லன—ரகரழகரமல்லாத பதினாறு மெய் களும், தம்முன்—தமக்கு முன், தாம்—தாம், உடனிலையும் —உடனின்று மயங்கும். (எ-று.)

உதாரணம். அக்கம் — அண்ணம் — அய்யம்
அங்ஙனம்— அத்து — அல்லி
அச்சம் — அந்நீர் — அவ்வை
அஞ்ஞானம்—அப்பு — அள்ளல்
அட்டு — அம்மை — அற்றம்
அன்னை — எனவரும்.

[தனிமெய்யுடன் தனிமெய்யாய் மயங்குவன இவை, மொழிக்கு உறுப்பாக மயங்காதன இவை]

119. யரழவொற் றின்முன் கசதப ஙஞநம
ஈரொற் றாம்ரழத் தனிக்குறி லணையா.

**இது, தனிமெய்யுடனே தனிமெய்யாகியும் மயங்குமெய்கள் இத்தனை என்றும், சொல்லுக்கு உறுப்பாக மயங்காதவெழுத்துக்கள் இத்தனையென்றும் உணர்த்துகின்றது.**

(இ-ள்) யரழ—யரழவென்கிற மூன்று மெய்களும், முன்—இவற்றின் முன்மயங்குமென்ற, ஒற்றில்—பத்து மெய்களுள், கசதபஙஞநம—ககரமுதலாகிய வ்வெட்டு மெய்களும், ஈரொற்றும்—தனிமெய்யும் உயிர்மெய்யுமாகி மயங்குதலன்றியும் ஈரொற்றாகியுமயங்கும், ரழ—ரகாரழகார மெய்களும், தனிக்குறில்—தனிக்குற்றெழுத்தும், அணையா—சொல்லுக்கு உறுப்பாக வருவதும் நிற்பதுமாக மயங்குவன வல்ல. (எ-று.)

**உதாரணம்.** வேய்க்குறை— வேர்க்குறை— வீழ்க்குறை எ-ம்.
வேய்ச்சிறை— வேர்ச்சிறை— வீழ்ச்சிறை எ-ம்,
வேய்த்தலை — வேர்த்தலை — வீழ்த்தலை எ-ம்,
வேய்ப்புறம் — வேர்ப்புறம் — வீழ்ப்புறம் எ-ம்,
வேய்ங்குழல்— ஆர்ங்கோடு — பாழ்ங்கிணறு எ-ம்,
காய்ந்தனம் — நேர்ந்தனம் — வாழ்ந்தனம் எ-ம்,
மெய்ம்மயிர்—மெய்ஞ்ஞானம் எ-ம்—வரும்.

ஞகர மகரங்கள் ரகரழகரங்களோடு கூடி மயங்குதற்கு உதாரணம் வந்த விடத்திற்காண்க.

**[செய்யுளில் ஈரொற்றுய் நிற்கும் எழுத்துக்கள்]**

120. ளமெய் திரிந்த ணனமுன் மகாரம்
நைந்தீ ரொற்றுஞ் செய்யு ளுள்ளே.

**இது, செய்யுளுக்கு உரிமையா யீரொற்று உடனிற்பன இத்தனையென்று உணர்த்துகின்றது.**

(இ-ள்) லளமெய்திரிந்த—லகாரளகார வொற்றுத்திரிந்த, ணனமுன்—ணகாரனகாரமுன்வரும், மகாரம்—மகாரவொற்றானது, நைந்து—முன்சொன்னபடியே குறுகி, ஈரொற்றும்—அந்த மெய்களுடனே யீரொற்றுடனிலையாம், செய்யுளுள்ளே—பாட்டினுள். (எ-று).

**உதாரணம்.** "திசையறி மீகானும் போன்ம்" எ-ம்,
"மயிலியன் மாதர் மருண்ம்" எ-ம் வரும்.

**[முதனிலை இறுதிநிலை இடைநிலைகளுக்குப் புறனடை]**

121. தம்பெயர் மொழியின் முதலும் மயக்கமும்
இம்முறை மாறியு மியலு மென்ப.

**இது, முதனிலை யிறுதிநிலை யிடைநிலைகளுக்கு ஆவதோர் புறனடை உணர்த்துகின்றது.**

(இ-ள்) தம்பெயர்—தம்முடைய பெயர்களை, மொழியின்—சொல்லின் நிலைமொழி, வருமொழிகளாகப்புணர்க்குமிடத்து, முதலும்—மொழி முதலுக்கும், மயக்கமும்—இடைநிலை மயக்கத்திற்கும், இம்முறை—இப்படிவிதிக்கப்பட்டனவும், விலக்கப்பட்டனவுமாகிய வெல்லாவெழுத்துக்களும், மாறியுமியலும்—முதலாகியும் மயங்கியும் வரும், என்ப—என்று சொல்லுவர் புலவர். (எ-று.)

இப்படி யெல்லா வெழுத்துக்களும் தனித்தனி அதற்கதுவே ஈறுமெனத் தானே விளங்குதலால் ஈறுமெனமிகை படக்கூறாமல் விட்டார்.

**உதாரணம்.** "அவற்றுள்,
லளகான் முன்னர் யவ்வுந் தோன்றும்"

இதிலே லகரமானது முதலாகியும் னகரமெய்யோடு மயங்கியும் வந்தது.

கெப்பெரிது—இதில் எகரமானது மெய்யோடீறாய் வந்தது. பிறவுமிப்படியே வரும்.

## 10. போலி

**[மொழியிறுதிப்போலி]**

122. மகர விறுதி யஃறிணைப் பெயரின்
னகரமோ டுறழா நடப்பன வுளவே.

**இது, நிறுத்தமுறையானே போலியாமாறு உணர்த்தும்படியாகத் தொடங்கி மொழியிறுதிப் போலி உணர்த்துகின்றது.**

(இ-ள்) அஃறிணைப் பெயரின் — பால்பகாவஃறிணைப் பெயர்களிடத்து, இறுதி—ஈற்றிலேநின்ற, மகரம் — மகரமெய்யானது, னகரமோடு—னகரமெய்யோடு, உறழா—ஒத்து, நடப்பன—நடப்பவை, உளவே—உண்டு. (எ-று.)

மகரம்னகரத்தோடொத்தலாவது பெயரினிறுதியிலே மகரமிருந்தவிடத்து னகரம்வந்திருந்தாலும் வேறுபடாமலொத்தலாம். இம்மகரம் குறிலிணையைச்சேர்ந்து வருவதென்றறிக.

**உதாரணம்.** அகம்—அகன், நிலம்—நிலன், எனவரும்.

இவ்விறுதிப்போலியை முன்னே சொல்லுதலால், சுரும்பு—சுரும்பர், வண்டு—வண்டர் என, மென்றொடர்க் குற்றியலுகரப்பெயரிறுதியுகரம், அர்—என்பதனோடொத்து வருதலும், பந்தல்—பந்தர், சாம்பல்—சாம்பர் எனச்சில லகர, மெய்யீற்றுப் பெயரிறுதி லகரமெய் ரகரமெய்யோடொத்து வருதலுங்கொள்க.

### [மொழிமுதற்போலியும் மொழியிடைப்போலியும்]

123. *அஐ முதலிடை யொக்குஞ் சஞயமுன்.*

**இது, மொழிமுதற்போலியும் மொழி இடைப்போலியும் உணர்த்துகின்றது.**

(இ-ள்.) அஐ—அகரமும் ஐகாரமும், முதல்—சொல்லுக்கு முதலிலும், இடை—நடுவிலும், ஒக்கும்—வேறுபாடில்லாமல் ஒத்து நடக்கும், சஞயமுன்—சகர ஞகர யகரங்களுக்கு முன் வந்தால். (எ-று.)

**உதாரணம்.** பசல்—பைசல், மஞ்சு—மைஞ்சு, மயல்—மையல், எ-ம், அமச்சு—அமைச்சு, இலஞ்சி—இலைஞ்சி அரயர்—அரையர், எ-ம், வரும்.

### [மொழியிடைப்போலி]

124. *ஐகான் யவ்வழி நவ்வொடு சில்வழி*
*ஞஃகா னுறழு மென்மரு முளரே.*

**இது, மொழியிடைப் போலி உணர்த்துகின்றது.**

(இ-ள்) சில்வழி—சொல்லுக்குநடுவேசிலவிடத்து, ஐகான் (வழி)—ஐகாரத்தின் பின்னும், யவ்வழி—யகரமெய்யின் பின்னும், நவ்வொடு—இயல்பாய் வரும் நகர மெய்யினோடு, ஞஃகான்—ஞகரமெய்யானது, உறழும்—ஒத்துநடக்கும், என்மரும்—என்று சொல்வாரும், உளர்—சிலருண்டு. (எ-று.)

**உதாரணம்.** "செய்ஞ்ஞின்ற நீல மலர்கின்ற தில்லைச்சிற்றம்பலவன்
மைஞ்ஞின்ற வொண்கண் மலைமகள் கண்டு மகிழ்ந்துநிற்க
நெய்ஞ்ஞின் றெரியும் விளக்கொத்த நீல மணிமிடற்றான்
கைஞ்ஞின்றவாடல்கண் டாற்பின்னைக் கண்கொண்டு காண்பதென்னே."

எ-ம், ஐஞ்ஞூறு எ-ம், வரும்.

மண்யாத்த—மண்ஞாத்த

பொன்யாத்த—பொன்ஞாத்த என வரும்.

போலிக்கு ஆசிரியர்தொல்காப்பியர், இலக்கணஞ் சொன்னபடி இந்நூலாசிரியர் சொல்லாமல் விட்டது இறந்தது விலக்கல் என்னுமுத்தி.

[சந்தியக்கரம்]

125. அம்மு னிகரம் யகர மென்றிவை
எய்தி னையொத் திசைக்கு மவ்வொடு
உவ்வும் வவ்வும் ஒளவோ ரன்ன.

**இது, வடநூலார் சந்தியக்கர மென்பவற்றுள் ஐ, ஔ என்கிற நெட்டெழுத்துக்களின் வடிவு தோன்றுதலை உணர்த்துகின்றது.**

(இ-ள்) அம்முன்—அகரத்தின் முன், இகரம்—இகரமும், யகரம்—யகரமெய்யும், என்றிவை—என்று சொல்லப்பட்டவிவை, ஒத்து—தம்முளொத்து, எய்தின்—பொருந்தினல், ஐயிசைக்கும்—ஐயென்கிற நெட்டெழுத்து ஒலிக்கும், அவ்வோடு—அகரத்தோடு, உவ்வும்—உகரமும், வவ்வும்—வகரமெய்யும், (ஒத்து)—தம்முளொத்து, ஒ ர ன் ன—ஒருதன்மையனவாக, (எய்தின்)—பொருந்தினல், ஔ (விசைக்கும்)—ஔவென்கிற நெட்டெழுத்து ஒலிக்கும். (எ—று.)

யகர விகர மெய்கள் நடுவிலே கலக்குமெனக்கொள்க. மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனையு முட்டின்று முடித்தலென்னு முத்தியால் அகரக்கூறும் இகரக்கூறும் தம்முள் ஒத்து எகரமொலிக்கும். அகரக்கூறும் உகரக்கூறும், தம்முளொத்து ஒகரமொலிக்கும் எனக்கொள்க (எ-று.)

[எழுத்தின் சாரியைகள்]

126. மெய்க ளகரமும் நெட்டுயிர் காரமும்
ஐயௌக் கானு மிருமைக் குறிலிவ்
விரண்டொடு கரமுமாஞ் சாரியை பெறும்பிற.

**இது, மேலே சொல்லப்பட்ட எழுத்தின் சாரியைகளைத் தொகுத்து இனமடைத்தல் உணர்த்துகின்றது.**

(இ-ள்) மெய்கள்—ஒற்றுகள், அகரமும்—அகரச்சாரியையும், நெட்டுயிர்—உயிர்நெடில்கள், காரமும்—காரச்சாரியையும் ஐயௌ—அவற்றுள் ஐகார ஔகாரங்கள், கானும்—கான் சாரியையுடனே காரச்சாரியையும், இருமைக்குறில்—உயிர்க்

குறிலும், உயிர்மெய்க் குறிலும், இவ்விரண்டொடு—காரம், கான், என்றவிரண்டுடனே, கரமும்—கரச்சாரியையும், ஆம்—ஆகின்ற, சாரியை—சாரியைகளை, பெறும்—பெறும். (எ—று)

மெய்கள்அவ்வு மென்னுது அகரமுமென்றதனுல் இப்படியே கரம், காரம், கான் வந்தால் அச்சாரியை அகரத்தினது சாரியையென்று கொள்க.

மெய்கள் சாரியைப் பெருமலும், உயிர்மெய் நெடில்கள் சாரியைப் பெற்றும் வருதலில்லை.

**உதாரணம்.** க-ங, எ-ம், ஆகாரம், ஐகாரம், ஔகாரம் எ—ம், ஐகான், ஔகான், எ-ம், அகாரம், அஃகான் அகரம், மகரம், மஃகான், மகரம், எ-ம். வரும்.

விகற்பத்தின் முடித்தலென்னு முத்தியால் மேல் விரிந்து கிடந்தவற்றை விளங்கவேண்டி இங்கே தொகுத்து முடித்தலால் இச்சூத்திரம் முடிந்தது முடித்தலென்னு முத்தி.

## [இவ்வியலுக்குப்புறனடை]

127. மொழியாய்த் தொடரினு முன்னனைத் தெழுத்தே.

**இது, இவ்வியலுக்காவதோர் புறனடையுணர்த்துகின்றது.**

(இ—ள்) எழுத்து—இவ்வெழுத்துக்கள், மொழியாய்—பதமாயினும், தொடரினும்—அப்பதந்தம்மோடும் உருபோடும் புணர்ந்தாலும், முன்னனைத்து—முன்சொல்லப்பட்ட அப்பதத்திலக்கணத்தையும் உடையனவாகும். (எ—று.)

**எழுத்தியல் முற்றுப் பெற்றது.**

———x———

## 2. பதவியல்

### பதம்

[பதம் இன்னதென்பதும் அதன் வகையும்]

128. எழுத்தே தனித்துந் தொடர்ந்தும் பொருள்தரின்
பதமா மதுபகாப் பதம்பகு பதமென
இருபா லாகி யியலு மென்ப.

**இது, நிறுத்த முறையானே பதத்தினிலக்கணத்தை யறிவிக்கத் தொடங்கி எழுத்தினாலே பதமாதலும் அது இத்தனை வகைப்படுமென் பதும் உணர்த்துகின்றது.**

(இ-ள்) எழுத்து—எழுத்துக்கள் தாமே, தனித்தும்—ஒவ் வொன்றாகத் தனித்தாகிலும், தொடர்ந்தும்—இரண்டு முத லாகத் தொடர்ந்தாகிலும், பொருள்—பிறபொருளை, தரின்—காட்டுமேயானால், பதமாம்—பதமாகும், அது—அப்பதமானது, பகாப்பத (மென) — பகாப்பத மெனவும், பகுபதமென—பகு பதமெனவும், இருபாலாகி—இரண்டு வகையினை யுடையதாகி, இயலும்—நடக்கும், என்ப—என்று சொல்லுவர் புலவர். (எ—று.)

### [ஓரெழுத்தொரு மொழி]

129. உயிர்மவி லாறுந் தபநவி லைந்தும்
கவசவி னாலும் யவ்வி லொன்றும்
ஆகு நெடினொது வாங்குறி லிரண்டோடு
ஓரெழுத் தியல்பத மாறேழ் சிறப்பின.

**இது, ஓரெழுத்தொருமொழி இவை யென்பதும் இத்தனை என்ப தும் உணர்த்துகின்றது.**

(இ-ள்) உயிர்மவில்—உயிர் வருக்கத்திலும், மவ் வருக்கத் திலும், ஆறும்—அவ்வாறும், தபநவில்—தவ்வருக்கத்திலும் பவ்வருக்கத்திலும் நவ்வருக்கத்திலும், ஐந்தும்—அவ்வைந்தும், கவசவில்—கவ்வருக்கத்திலும் வவ்வருக்கத்திலும் சவ்வருக் கத்திலும், நாலும்—நந்நான்கும், யவ்வில்—யவ்வருக்கத்தில், ஒன்றும்—ஒன்றும், ஆகுநெடில்—ஆகுநெட்டெழுத்தா லாகிய மொழி நாற்பதும், நொ—நொவ்வும், து—துவ்வும், ஆங் குறில்—ஆகுங் குற்றெழுத்தாலாகிய மொழி, இரண்டோடு—இரண்டுடனே, ஓரெழுத்தியல்பதம்—ஓரெழுத்தாலாகிய மொழிகள், ஆறேழ்—நாற்பத்திரண்டும், சிறப்பின—சிறப் பினவாம். (எ-று.)

**உதாரணம்.** ஆ ஈ ஊ ஏ ஐ ஓ எனவும்,
மா மீ மூ மே மை மோ எனவும்,
தா தீ தூ தே தை தோ எனவும்,
பா பீ பூ பே பை போ எனவும்,
நா நீ நூ நே நை நோ எனவும்,
வா வீ — — வை வௌ எனவும்,
சா சீ — சே — சோ எனவும்,
யா எனவும், நொ, து, எனவும், வரும்.

இவற்றுள், ஊ—இறைச்சி, ஓ—மதகுநீர் தாங்கும் பலகை, பே—நுரை, நே—அன்பு, சோ—மதில், நோ—துன்பப்படு, து—உண்ணெனப் பொருள்படும்.

இவை, 'சிறப்பின' வெனவே கு, கௌ, பீ, வே, எனச் சிறப்பில்லாதவைகளுஞ் சிலவுள வென்றறிக.

[தொடரெழுத்தொருமொழி]

130. பகாப்பத மேழும் பகுபத மொன்பதும்
எழுத்தீ ருகத் தொடரு மென்ப.

**இது, தொடரெழுத்து மொழியாமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) பகாப்பதம்—பகாப் பதங்கள், ஏ(மெழுத்தீருக)வும்—இரண்டெழுத்து முதல் ஏழெழுத்தீருகவும், பகுபதம்—பகுபதங்கள், ஒன்பதெழுத்தீருகவும்—இரண்டெழுத்து முதலொன்பதெழுத்தீருகவும், தொடரும்—தொடரும், என்ப—என்று சொல்லுவர் புலவர். (எ-று.)

**உதாரணம்.** அணி, அறம், அகலம், அருப்பம்
தருப்பணம், உத்திரட்டாதி, எ-ம்,
கூனி, கூனன், குழையன், பொருப்பன்,
அம்பலவன், அரங்கத்தான், உத்திராடத்தான்,
உத்திரட்டாதியான், எ—ம், வரும்.

நடத்துவிப்பிக்கிருன் எனப் பகுதி முதலிய உறுப்புகள் வேறுபட்டு வருகின்றவைகளுக்கு இவ்வரையறை யில்லை யென்றறிக.

[பகாப் பதம்]

131. பகுப்பாற் பயனற் றிடுகுறி யாகி
முன்னே யொன்ருய் முடிந்தியல் கின்ற
பெயர்வினை யிடையுரி நான்கும் பகாப்பதம்.

**இது, முன் பகாப்பதம் பகுபதம் என்றவற்றுள்ளே பகாப்பதங்கள் இப்படிப்பட்டவைக ளென்பதும், இத்தனை வகைப்படுமென்பதும் உணர்த்துகின்றது.**

(இ-ள்) பகுப்பால்—பிரிக்கப் படுதலினாலே, பயனற்று—பகுதி விகுதி முதலாகிய பயனில்லாமல், இடுகுறியாகி—காரணமில்லாமல் இடப்பட்ட குறியாகி, முன்னே யொன்றாய்—படைப்புக் காலந் தொட்டு ஒன்றாகி, முடிந்து—முடிந்து, இயல்கின்ற—நடக்கின்ற, பெயர்—பெயர்ச்சொல்லும், வினை—வினைச்சொல்லும், இடை—இடைச்சொல்லும், உரி—உரிச்சொல்லுமாகிய, நான்கும்—நான்கும், பகாப்பதம்—பகாப் பதங்களாகும். (எ-று.)

**உதாரணம்.** நிலம், நீர், நெருப்பு, காற்று என்பன பெயர்ப் பகாப்பதம்.

நட, வா, உண், தின், என்பன வினைப் பகாப்பதம்.

மன், கொல், போல், மற்று, என்பன இடைப்பகாப் பதம்.

உறு, கழி, அன்பு, அழகு, என்பன உரிப்பகாப்பதம்.

[பகுபதம்]

132. பொருளிடங் காலஞ் சினைகுணந் தொழிலின்
வருபெயர் பொழுதுகொள் வினைப்பகு பதமே.

**இது, பகுபதங்கள் இப்படிப்பட்டவைகளென்பதும், இத்தனை வகைப்படு மென்பதும் உணர்த்துகின்றது.**

(இ-ள்) பொருள்—பொருளும், இடம்—இடமும், காலம்—காலமும், சினை—உறுப்பும், குணம்—குணமும், தொழிலின்—தொழிலின் காரணமாக, வரு—வருகின்ற, பெயர்—பெயர்ச் சொற்களும், பொழுது கொள்—தெரிநிலையாகவும் குறிப்பாகவும் காலத்தைக் கொள்ளும், வினை—வினைச்சொற்களும், பகுபதம்—பகுபதங்களாகும். (எ-று.)

பொழுது கொள் வினை பகுபதமென்வே அவ்விருவகை வினையாலணையும் பெயர்களும் பகுபதமா மென்பது அருத்தாபத்தியாற் சொன்னாரென வறிக.

**உதாரணம்.** பொன்னன் — அகத்தன்
ஆதிரையான் — கண்ணன்
கரியன் — ஊனன்

எனப் பெயர்ப் பகுபதம் வந்தன.

நடந்தான் நடக்கின்றான் நடப்பான் எ—ம்,
நடந்த நடக்கின்ற நடக்கும் எ—ம்,
நடந்து நடக்க நடக்கின் எ—ம்,
நடந்திலன் நடக்கின்றிலன் நடவான் எ—ம்,

நடவாத, எ—ம், நடவாமல், எ—ம், உடன்பாட்டிலும், எதிர்மறையிலுங் கூடிய முற்றும், பெயரெச்சமும், வினையெச்சமுமாகிய தெரிநிலைவினைப்பகுபதம் வந்தன.

பொன்னன், ஊனன், எ—ம், கரிய, பெரிய, எ—ம், அன்றி, இன்றி, எ—ம், முற்றும் பெயரெச்சமும் வினையெச்சமுமாகிய குறிப்பு வினைப் பகுபதம் வந்தன.

நடந்தான்—நடந்தவன், பொன்னன்—பொன்னவன் என இருவகை வினையாலணையும் பெயர்ப்பகுபதம் வந்தன.

[பகுபத வுறுப்புக்கள்]

133. பகுதி விகுதி யிடைநிலை சாரியை
சந்தி விகார மாறினு மேற்பவை
முன்னிப் புணர்ப்ப முடியுமெப் பதங்களும்.

**இது, பகுபதத்தினுறுப்புக்கள் இத்தனை என்பது உணர்த்துகின்றது.**

(இ-ள்) பகுதி—முதனிலையும், விகுதி—இறுதி நிலையும், இடைநிலை—இடைநிலையும், சாரியை—சாரியையும், சந்தி—சந்தியும், விகாரம்—விகாரமும், ஆறினும்—ஆகிய வ்வாறு உருப்பினுள்ளும், ஏற்பவை—பொருளமைதிக்கு ஏற்பவைகளை, முன்னி—நினைத்து, புணர்ப்ப—அறிவுடையோர் கூட்டி முடிக்க, எப்பதங்களும்—எவ்வகைப்பட்ட பகுபதங்களும், முடியும்—முடிவுபெறும். (எ-று.)

**உதாரணம்** கூனி என்பது, கூன்+இ, என பகுதி விகுதியான் முடிந்தது. உண்டான் என்பது, உண்+ட்+ஆன் என, அவ்விரண்டுடன் இடைநிலை பெற்று முடிந்தது. உண்டனன் என்பது, உண்+ட்+அன்+அன் என அம்மூன்றுடன் சாரியை பெற்று முடிந்தது. பிடித்தனன் என்பது, பிடி+த்+த்+அன்+அன் என அந்நான்குடன் சந்திபெற்று முடிந்தது. நடந்தனன் என்பது, நட+த்+த்+அன்+அன் என அவ்வைந்துடன், சந்தியால் வந்த தகரவல்லொற்று மெல்லொற்றாதலாகிய விகாரமும் பெற்று முடிந்தது.

பதப்புணர்ச்சிக்கு விதிக்கப்பட்ட தோன்றல் முதலிய மூன்று புணர்ச்சி விகாரங்களையும், வலித்தல் முதலாகிய வொன்பது செய்யுள் விகாரங்களையும் இது பெறுமென மாட்டுதலால் இது மாட்டெறிந் தொழுக லென்னு முத்தி.

### [பகுதி இன்னதென்பது]

134. தத்தம்,
பகாப் பதங்களே பகுதி யாகும்.

**இது, பகுபத உறுப்புக்கள் ஆறனுள்ளே பின்னைய மூன்றும் புணரியலுள் காட்டப்படுதலால் அவை நீங்கலாக முன்னைய மூன்றனுள்ளே பகுதிகள் இப்படிப்பட்டவைகளென்று உணர்த்துகின்றது.**

(இ-ள்) தத்தம் பகாப்பதங்களே—பெயர்ப் பகுபதங்களுள்ளும் வினைப் பகுபதங்களுள்ளும் அதனதனுடைய முன்னிற்கின்ற பகாப்பதங்களே, பகுதியாகும்—பகுதிகளாகும். (எ-று.)

### [பண்புப் பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி]

135. செம்மை சிறுமை சேய்மை தீமை
வெம்மை புதுமை மென்மை மேன்மை
திண்மை யுண்மை நுண்மை யிவற்றெதிர்
இன்னவும் பண்பிற் பகாநிலைப் பதமே.

**இது, பண்புப் பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துகின்றது.**

(இ-ள்) செம்மை—நுண்மை—செம்மை முதல் நுண்மையீறுகச் சொல்லப் பட்ட பதினொன்றும், இவற்றெதிர்—இவைகளுக் கெதிரான வெண்மை முதலானவைகளும், இன்னவும்—இவைபோல்வன பிறவும், பண்பின்—பண்புப் பொருளினின்றும், பகா—வேறு பொருள் பகுக்கப் படாத, நிலை—நிலையையுடைய, பதம்—பதங்களாகும். (எ-று.)

சொன்னிலையாற் பகுபதமாயினும் மைவிகுதிக்குப் பகுதிப்பொருளல்லது வேறு பொருளில்லாமையின் பண்புப்பகாநிலை என்னுது பண்பிற் பகாநிலை யென்றார். இது சொற்பொருள் விரித்தலென்னு முத்தி. செம்மை, சிறுமை, சேய்மை, தீமை, முதலிய வாய்பாடுகள் எடுத்துக்காட்டலென்னு முத்தி.

136. ஈறு போத லிடையுகர மிய்யாத
லாதி நீட லடியகர மையாத
றன்னொற் றிரட்டன் முன்னின்ற மெய்திரித
லினமிக லினையவும் பண்பிற் கியல்பே.

**இதுவுமது:—**

(இ-ள்) ஈறு—இறுதியிலுள்ள மை விகுதியானது, போதல்—கெடுதலும், இடை—நடுநின்ற, உகரம்—உகரமானது, இய்யாதல்—இகரமாதலும், ஆதி—முதனின்ற குறிலானது, நீடல்—நெடிதாதலும், அடியகரம்—முதனின்ற அகரமானது, ஐயாதல்—ஐகாரமாதலும், தன்னொற்று—தன் மெய்யானது, இரட்டல்—நடுவே மிகுதலும், முன்னின்ற மெய்—முன்னின்ற மெய்யானது, திரிதல்—வேறொரு மெய்யாதலும், இனம்—வருமெழுத்திற்கு இனவெழுத்து, மிகல்—மிகுதலும், இனையவும்—இவை போல்வன பிறவும், பண்பிற்கு—அப்பண்பினுக்கு, இயல்பு—இயல்பாகும். (எ-று.)

இவ்விகாரங்கள் பதப்புணர்ச்சிக்குங் கொள்க. இது ஒப்பின் முடித்தலென்னு முத்தி.

**உதாரணம்.** நல்லன்—நன்மையின் மை விகுதி கெட்டது.
கரியன்—கருமையின் மை விகுதி கெட்டு, நடுநின்ற உகரம் இகரமாயிற்று.
பாசி—பசுமையின் மை விகுதி கெட்டு, ஆதி நீண்டது.

பைந்தார்—பசு மையின் மை விகுதியும், நடுநின்ற உயிர்மெய்யுங் கெட்டு வருமெழுத்திற்கு இனவெழுத்தும் மிகுந்து முதலிலிருந்த அகரம் ஐகாரமாயிற்று.

வெற்றிலை—வெறுமையின் மை விகுதி கெட்டுத் தன்னொற்றிரட்டியது.

சேதாம்பல்—செம்மையின் மை விகுதி போய் ஆதி நீண்டு முன்னின்ற மகரமெய் தகரமெய்யாகத்திரிந்தது.

இவ்விகாரங்கள் அன்பன் அழகன் முதலிய வாய்பாடுகளுக்கு அடையாமல் செம்மை முதலிய வாய்பாடுகளுக்கே அடைய வைத்தலால் எடுத்தமொழியி னெய்தவைத்தலென்னு முத்தியாம்.

**[தெரிநிலை வினைப்பகுதிகளுக்கு எய்தியதன்மேற் சிறப்பு விதி]**

137. நடவா மடிசீ விடுகூ வேவை
நொப்போ வௌஉரி ஞுண்பொருந் திருந்தின்
தேய்பார் செல்வவ் வாழ்கேள் அஃகென்று
எய்திய விருபான் மூன்று மீற்றவுஞ்
செய்யெ னேவல் வினைப்பகாப் பதமே.

**இது, தெரிநிலைவினைப்பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்பு விதி உணர்த்துகின்றது.**

(இ-ள்) நட அஃகென்று—நட வா மடி சீ விடு கூ வே வை நொ போ வெள உரிஞ் உண் பொருந் திரும் தின் தேய் பார் செல் வவ் வாழ் கேள் அஃகு என்று, எய்திய— முதனிலையாகப் பொருந்திய, இருபான் மூன்றும்—இருபத்து மூன்றாகும், ஈற்றவும்—உயிரும் மெய்யும் குற்றியலுகரமுமாகிய ஈற்றை யுடைய இவை முதலாகிய வாய்பாடுகளெல்லாம், செய்யென்— செய்யென்கின்ற, ஏவல்—ஏவலினது (பகாப்பதம்)—பகாப் பதமாகிய பகுதியும், வினை—மற்றை வினைகளுக்கும், பகாப் பதங்களாகிய பகுதியும், ஆம். (எ-று.)

விகற்பத்தின் முடித்தலென்னு முத்தியால் இருபத்து மூன்று ஈற்றனவாக விகற்பித்து எடுத்துக் காட்டும் வாய்பாடு களெல்லாம் இப்பொதுவாய்பாட்டிலே யடங்குமென்பார் முடிந்தது முடித்தலென்னுமுத்தியால் செய்யெனவுங் கூறினர்.

செய்யென் வினைப்பகாப்பத மென்றவளவிலே செய்யெ னேவற் பகாப்பதமும் அடங்குமாயினும் முதனிலைகளேவற் பொருளுணர்த்தாமல் ஆய்விகுதியோடு புணர்ந்துநின்று உணர்த்துமென்றறிவித்தற்கு வேறு கூறினர்.

அம்முன்னிலையேவலொருமை யெதிர்காலவினைமுற்றிற்கு வரும். ஆய்விகுதி குன்றியும் வரும்.

இதுபோலவே விகுதி புணர்ந்துகெட்டு நிற்குஞ் சொற் கள் இன்னும் பல உண்டு. அவையெல்லாம் பகுபதம் முடிக் கும்போது காண்பிக்கப்படும்.

(ஏவற் பகுதிக்கு உதாரணம்:—)

நடவாய், வாராய், உண்ணாய், தின்னாய், அஃகாய், எ-ம், நட, வா, உண், தின், அஃகு, எ-ம், வரும்.

(மற்றை வினைப்பகுதிக்கு உதாரணம்)

| | | |
|---|---|---|
| நடந்தான் | வைத்தான் | திருமினான் |
| வந்தான் | நொந்தான் | தின்றான் |
| மடித்தான் | போயினான் | தேய்த்தான் |
| சீத்தான் | வவ்வினான் | பார்த்தான் |
| விட்டான் | உரிஞினான் | சென்றான் |

கூவினன் உண்டான் வவ்வினன்
வெந்தான் பொருமினன் வாழ்ந்தான்.
கேட்டான் அஃகினன் எனவரும்.

இந்நூலாசிரியர் வடநூல் மேற்கோளாக ஒரு மொழி களை விதந்து பகாப்பதம் பகுபதம் எனக் காரணப்பெயர் தாமே இட்டு "எழுத்தே" என்னுஞ் சூத்திரமுதல் இது வரைக்கும் பகாப்பதம் பகுபதமெனப் பலதரஞ்சொல்லுதல் தன்குறி வழக்க மிகவெடுத்துரைத்த லென்னுமுத்தி.

இத் தெரிநிலை வினைப்பகுதிகள் விகுதியோடு புணரும் போது, தொழுதான் உண்டான் எனச்சில இயல்பாதலல்லா மலும், செல் சேறல் என முதனீண்டும், தா, தந்தான், எனத் தனிநெடில் குறுகியும், சா செத்தான் என முதலா காரம் எகரமாகியும், கொணு கொணர்ந்தான் என முதலய லெழுத்துக் குறுகி ரகரமெய் விரிந்தும், விரவு விராவினன்' என நடுக்குறில் நீண்டும், முழுகு முழுகினன் என இயல் பும் விகாரமுமாக உறழ்ந்தும், வா வருகிருன் எனத் தனி நெடில் குறுகி ஓருயிர்மெய் விரிந்தும், கல் கற்ருன் என ஈற்றுமெய் வருமெய்யாகத் திரிந்தும், செல் சென்ருன் என ஈற்றுமெய் வருமெழுத்திற்கு இனமாகத் திரிந்தும், இன்னும் பலவாறு விகாரப்பட்டு வரும்.

கா, சா, தா இவை முறையே காத்தான், செத்தான் தந்தான், எனவும், கல், நில்,புல், சொல் இவை கற்ருன், நின் ருன், புல்லினன், சொன்னன் எனவும், ஒரு நிகராகிய பகுதி கள் பல விதமாக விகாரப்படுவதால் அவையெல்லாம் தனித் தனிச் சொல்லப் புகுந்தால் விரியுமாதலால் செய்யுள் வழக்கத் தையும் உலகவழக்கத்தையும் பார்த்துச் செய்யுள்விகாரமும் புணர்ச்சிவிகாரமுங் கொண்டு அமைத்துக் கொள்க.

தெரிநிலை வினைகள்:— நட—வா முதலாகிய முதனிலை வினைப்பகுதிகளிலிருந்தல்லாமலும் சிறுபான்மை கடைக் கண் — கடைக்கணித்தான், சித்திரம் சித்திரித்தான் எனப் பெயர்ச்சொற்களிலிருந்தும், போல்—பொன் போன்ருன், நிகர்—புலி நிகர்த்தான் என, இடைச்சொற்களிலிருந்தும், மால்—மாலும், சால்—சான்ருன், செம்மை—சேந்தான், சிறுமை—சிறுத்தான், என உரிச்சொற்களிலிருந்தும், பிறக்கும்.

[ஏவற்பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்பு விதி]

138. செய்யென் வினைவழி விப்பி தனிவரின்
செய்வியென் னேவ லிணையினீ ரேவல்.

**இது, ஏவற்பகுதிக்கு எய்தியதன்மேற் சிறப்பு விதி கூறுகின்றது.**

(இ-ள்) செய்யென்—செய் யென்னும் வாய்ப்பாட்டு, வினைவழி—முதனிலைத் தனிவினையின் பின், விப்பி—விவ் விகுதியாவது பிவ்விகுதியாவது, தனிவரின்—தனித்து வருமாயின், செய்வியென்னேவல்—செய்யென்னு மேவலின் மேலோரேவலாய்ச் செய்வி யென்னும் வாய்பாட்டேவற்பகுதியாம், இணையின்—அவ்வினையின் பின் இந்த விகுதிகள் தன்னொடும் பிறிதோடும் இணைந்து வருமாயின், ஈரேவல்—செய்விப்பி யென்னும் வாய்பாட்டேவற் பகுதியாம். (எ-று.)

**உதாரணம்.** நடப்பியாய்—நடப்பிப்பியாய், வருவியாய்—வருவிப்பியாய், எனவரும்.

சிறுபான்மை, உரையிற்கோடலென்னு முத்தியால், கு, சு, டு, து, பு, று என்கிற ஆறு விகுதிகளுள் ஒன்று பெற்றும், சில பகுதிகள் விகாரப்பட்டும் அப்படி வருமெனக் கொள்க.

**உதாரணம்.** போ—போக்கு, நட—நடத்து,
பாய்—பாய்ச்சு, எழு—எழுப்பு,
உருள்—உருட்டு, துயில்—துயிற்று எனவும்,
இயங்கு—இயக்கு, ஆடு—ஆட்டு,
திருந்து—திருத்து, தேறு—தேற்று,
தோன்று—தோற்று, உருகு—உருக்கு,
எனவும் வரும்.

[வினைப் பகுதிக்குப் புறனடை]

139. விளம்பிய பகுதிவே றாதலும் விதியே.

**இது வினைப்பகுதிக்காவதோர் புறனடை உணர்த்துகின்றது.**

(இ-ள்) விளம்பிய பகுதி—ஏவற்பகுதிவேறாதல்போல அதன் பின்னே சொல்லப்பட்ட மற்றைய வினைப்பகுதிகள், வேறாதலும்—வேறுபடுதலும், விதியே-விதியேயாகும்.(எ-று.)

**உதாரணம்.** நடத்தினன், நடப்பித்தான், நடத்துவிப்பித்தான் என வரும். இங்கே தன்வினைப்பகுதிகள் பிற வினைப்பகுதிகளானமை காண்க.

## விகுதி

140. அன்ஆன் அள்ஆள் அர்ஆர் பம்மார்
அஆ குடுதுறு என்ஏன் அல்அன்
அம்ஆம்,எம்ஏம் ஓமொ டும்மூர்
கடதற ஐஆய் இம்மின் இர்ஈர்
ஈயர் கயவு'ம் என்பவும் பிறவும்
வினையின் விகுதி பெயரினுஞ் சிலவே.

**இது விகுதிகள் இப்படிப்பட்டவைகளென்று உணர்த்துகின்றது.**

(இ–ள்) அன், என்பவும்—அன் முதல் முப்பத்தேழாகச் சொல்லப்பட்டவைகளும், பிறவும்—இவைபோல்வன பிறவும், வினையின் விகுதி—வினைப்பகுபதங்களின் விகுதிகளாகும், பெயரினும்—பெயர்ப்பகுபதங்களினும், சில—சில விகுதிகளாகும். (எ–று.)

அன் விகுதி தன்மைக்கு எதிரது போற்றலென்னுமுத்தியால் சேர்க்கப்பட்டதாகலின் வலியுறுத்தற்குப் பின்னுங் கூறினர்.

**உதாரணம்.** நடந்தனன், நடந்தான், நடந்தனள், நடந்தாள், நடந்தனர், நடந்தார், நடப்ப, நடமார், நடந்தன, நடவா, உண்கு, உண்டு, நடந்து, கூயிற்று, நடந்தனென், நடந்தேன், நடப்பல், நடப்பன், நடப்பம், நடப்பாம், நடப்பெம், நடப்பேம், நடப்போம், நடக்கும், உண்டும், நடத்தும், சேறும், நடந்தனை, நடந்தாய், நடத்தி, நடமின், நடந்தனிர், நடந்தீர், நிலீயர்,நடக்க,வாழிய,நடக்கும், என வரும்.

பிறவு மென்றதனல், நடந்திடு, எழுந்திரு, அருளு, மறூல், அழேல், சொல்லிக்காண் என, இடு, இரு, உ, ஆல், ஏல், காண் முதலியனவும் வரும். இவையெல்லாம் தெரிநிலைவினை முற்றுகள்.

வினைக்குறிப்புமுற்றுகள் குறிப்பாகக் காலங் காட்டுவனவாதலால் இந்த விகுதிகளுக்குள்ளே தாமே காலங்காட்டும் விகுதிகளொழிந்த மற்றவைகளோடு வருமெனக் கொள்க.

**உதாரணம்.** குழையன் குழையான்
குழையள் குழையாள்
குழையர் குழையார்
குழையன் குறுந்தாட்டு
குழையது குழையிற்று

குழையினென் குழையினேன்
குழையம் குழையாம்
குழையினெம் குழையினேம்
குழையினேம் குழையினை
குழையாய் வில்லி குழையினிர்*
குழையீர் என வரும்.

'பெயரினுஞ்சில' வென்றதனால் இவ்விகுதிகளுள், அன், ஆன், அள், ஆள், அர், ஆர், அது, இ, மார் எனவருகின்றவை களுடனே, மன், மான், கள், வை, தை, கை, பி, முன், அன், ன், ள், ர், வ்மெய்கள் முதலியனவைகள் பெயர் விகுதிகளாம்.

**உதாரணம்.** குழையன், வானத்தான் குழையள், வானத்தாள், குழையர்,வானத்தார், குழையன, யாது,பொன்னி, தேவிமார், வடமன், கோமான், கோக்கள், அவை, எந்தை, எங்கை, எம்பி, எம்முன், தோன்றல், பிறன், பிறள், பிறர், அவ் எனவரும்.

இன்னும் 'வினையின் விகுதி பெயரினுஞ்சில'வென்றதனு லும் 'பிறவு' மென்றதனுலும் பலவகைப்பட்ட வினைகளுக்கும் பெயர்களுக்கும் இவ்விகுதிகளுக்குள் அடங்கியும் அடங்கா மலும் வரும் விகுதிகளெல்லாம் கொள்ளப்படும்.

**தெரிநிலைவினைப்பெயரெச்ச விகுதிகள்:** அ, உம், இவை பெய ரெச்சவினை விகுதிகளாம்.

**உதாரணம்.** நடத்த, நடக்கின்ற, நடக்கும், எனவரும்.

**தெரிநிலை வினையெச்ச விகுதிகள்:—** உ, பு, ஆ, ஊ, என, அ, இன், இய, இயர், வான், பான், பாக்கு, இ, ய், கு, ஆல், கால், ஏல், ஏனும், உம், மல், மை, மே, து, றி, இவை முதலானவைகளும் வினை யெச்ச வினைவிகுதிகளாம்.

**உதாரணம்.** நடந்து உண்ணியர் ஒலித்தக்கால்
உண்குபு வருவான் நடக்குமேல்
உண்ணு உண்பான் நடக்குமேனும்
உண்ணூ உண்பாக்கு காண்டலும்
உண்டென ஓடி உண்ணமல்
உண்ண போய் உண்ணமை
நடக்கின் உணற்கு உண்ணமே
உண்ணிய நடந்தால் அல்லது
அன்றி எனவரும்

**தொழிற்பெயர் விகுதிகள்:**— தல், அல், அம், ஐ, கை, வை, கு, பு, உ, தி, சி, வி, உள், காடு, பாடு, அரவு, ஆனை, மை, து இவை முதலியன தொழிற்பெயர் விகுதிகளாம்.

**உதாரணம்.** நடத்தல் போக்கு விக்குள்
ஆடல் நடப்பு சாக்காடு
வாட்டம் வரவு கோட்பாடு
கொலை மறதி தோற்றரவு
நடக்கை புணர்ச்சி வாரானை
பார்வை புலவி நடவாமை
பாய்த்து எனவரும்.

துவ்விகுதி நடந்தது—நடக்கின்றது—நடப்பது எனக் காலவிடைநிலையோடு கூடியும் வரும்.

**பண்புப்பெயர் விகுதிகள்** :—மை, ஐ, சி, பு, உ, கு, றி, று, அம், நர் இவை முதலியன பண்புப்பெயர் விகுதிகளாம்.

**உதாரணம்.** நன்மை மாண்பு நன்றி
தொல்லை மழவு நன்று
மாட்சி நன்கு நலம்
நன்னர் எனவரும்.

**எதிர்மறை விகுதிகள்:**— இல், அல், ஆ இவை எதிர்மறை விகுதிகளாம்.

**உதாரணம்.** நடந்திலன் — நடக்கின்றிலன் — நடக்கிலன்
நடக்கலன் — நடவாதான் — எனவரும்.

**பிறவினைவிகுதிகள்:**— வி, பி, கு, சு, டு, து, பு, று இவை பிறவினை விகுதிகளாம்.

**உதாரணம்.** வருவித்தான்—உருட்டினன்
நடப்பித்தான்—நடத்தினன்
போக்கினன்—எழுப்பினன்
பாய்ச்சினன்—துயிற்றினன் எனவரும்.

கரை, தேய் என வருகிற தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவாகிய முதனிலைகள் சிறுபான்மை இவ்விகுதி வேண்டாமல்—கரைத்தான்—தேய்த்தான்

கரைத்திலன்—தேய்த்திலன்
கரைக்கின்றான்—தேய்க்கின்றான்
கரைக்கின்றிலன்—தேய்க்கின்றிலன்
கரைப்பான்—தேய்ப்பான்
கரைக்கான்—தேய்க்கான் எ—ம்,

பிறவினைப் பொருளைத் தரும்போது வல்லெழுத்துமிக்கும்,

கரைந்தான் கரைக்கின்றிலன்
கரைந்திலன் கரைவான்
கரைக்கிறான் கரையான்

எனத்தன்வினைப் பொருளைத் தரும்போது வல்லெழுத்து மிகாமலும் வரும் என்றறிக.

இன்னும் இ ஐ அம் விகுதிகள், அலரி, பறவை, எச்சம், என வினைமுதற் பொருளையும், ஊருணி, தொடை, தொல் காப்பியம், எனச் செயப்படுபொருளையும், மண்வெட்டி, பார்வை, நோக்கம், எனக் கருவிப்பொருளையும் உணர்த்தி வரும்.

விடு, ஒழி, விகுதிகள், வந்துவிட்டான், கேட்டொழிந் தான், எனத் துணிவுப்பொருளை உணர்த்திவரும். கொள் விகுதி அடித்துக்கொண்டான், கடித்துக்கொண் டான், எனத் தற்செயலுணர்த்திவரும். படு, உண் விகுதி கள், கட்டப்பட்டான், கட்டுண்டான், எனச் செயப்பாட்டு வினைகளுக்கு வரும். மைவிகுதி, ஆண்மை, பெண்மை எனத் தன்மைப் பொருளுணர்த்தும்.

எல்லாப்பொருளிலும் வரும் எல்லாவிகுதிகளையும அளவு செய்தல் கூடாமையால் அதிகமாக வழங்குகிற சில விகுதி களைக் காட்டினேம்.

பொன்னன், கரியன் என வருகின்றவை முக்காலங்க ளுள் ஒன்றைக் குறிப்பாகக் காட்டும்போது வினைக்குறிப்பு முற்று பகுபதங்களாம். எட்டுவேற்றுமைகளுளொன்றை யேற்று வரும்போது பெயர்ப் பகுபதங்களாகும். அவ்வி ரண்டையுங் கொண்டு வரும்போது வினைக் குறிப்பு முற்றாலணை யும் பெயர்ப் பகுபதங்களாகும்.

நடந்தான், வந்தான், என வருகின்றவை காலங் காட்டும் போது தெரிநிலைவினைமுற்றுப் பகுபதங்களாம். காலங் காட்டுதலுடனே வேற்றுமையேற்கும்போது தெரிநிலை வினைமுற்றாலணையும் பெயர்ப் பகுபதங்களாம். இவையே ஒன்றுக்கொன்று வேறுபாடாம்.

## இடைநிலை

### [பெயரிடைநிலை]

141. இலக்கியங் கண்டதற் கிலக்கண மியம்பலின்
பகுதி விகுதி பகுத்திடை நின்றதை
வினைப்பெய ரல்பெயர்க் கிடைநிலை யெனலே.

**இது, இடைநிலையாமாறு அறிவிக்கத் தொடங்கி பெயர்க்கு இடைநிலை உணர்த்துகின்றது.**

(இ-ள்) இலக்கியம் — அறிவுடையோராலே நியமிக்கப்பட்ட இலக்கியத்தை, கண்டு—பார்த்து, அதற்கு—அவ்விலக்கியத்திற்கு, இலக்கணம்—அவ்விலக்கியத்தினமைதியே யிலக்கணமாக, இயம்பலின்—சொல்லுதலால், பகுதி—முன் சொல்லப் பட்ட பகுதியையும், விகுதி — விகுதியையும், பகுத்து — பிரித்து, இடைநின்றதை — நடுநின்றதை, வினைப்பெயரல் பெயருக்கு—வினையாலணையும் பெயரல்லாத பெயர்கட்கு, இடைநிலையெனல்—இடைநிலை யென்று சொல்லுக. (எ-று.)

**உதாரணம்.** அறிஞன் — ஞகரவிடைநிலை
ஓதுவான் — வகரவிடைநிலை
வலைச்சி — சகரவிடைநிலை
வண்ணாத்தி — தகரவிடைநிலை

மற்றவையு மிப்படியே வருதல் காண்க.

### [இறந்தகால வினையிடைநிலை]

142. தடறவொற் றின்னே யைம்பால் மூவிடத்து
இறந்த காலந் தருந்தொழி லிடைநிலை.

**இது, இறந்தகால வினைக்கு இடைநிலை உணர்த்துகின்றது.**

(இ-ள்.) தடறவொற்று — தகர டகர றகர மெய்களும், இன்—இன்னும், ஐம்பால் மூவிடத்து — ஐம்பால் மூவிடங்களிலும், இறந்தகாலம் — இறந்தகாலத்தை, தரும்—காட்டுகின்ற, தொழில்—வினைப் பகுபதங்களுடைய, இடை— இடைநிலைகளாகும். (எ—று.)

**உதாரணம்.** நடந்தான், நடந்தாள், நடந்தார், நடந்தது, நடந்தன, நடந்தேன், நடந்தோம், நடந்தாய், நடந்தீர், எ-ம், உண்டான், எ-ம், சென்றான், எ-ம், உறங்கினான், எனவும், வரும்.

இன் இடைநிலை எஞ்சியது எனக் கடை குறைந்தும், போனது என முதல் குறைந்தும், வரும். மற்றவையு மிப்படியே.

[நிகழ்கால விடைநிலை]

143. ஆநின்று கின்று கிணறுமூ விடத்தி
ஐம்பால் நிகழ்பொழு தறைவினை யிடைநிலை.

**இது, நிகழ்கால வினைக்கு இடைநிலை உணர்த்துகின்றது.**

(இ-ள்.) ஆநின்று—ஆநின்றென்பதும், கின்று—கின்றென்பதும், கிறு — கிறுவென்பதும், ஐம்பான் மூவிடத்தின் — ஐம்பால் மூவிடங்களிலும், நிகழ் பொழுது — நிகழ் காலத்தை, அறை—காட்டுகின்ற, வினை—வினைப் பகுபதங் களினுடைய, இடைநிலை—இடைநிலைகளாகும். (எ-று.)

**உதாரணம்.** நடவாநின்றான், நடக்கின்றான், நடக்கிறான், எனவரும். மற்றவைகளு மிப்படியே.

[எதிர்கால விடைநிலை]

144. பவ்வ மூவிடத்தைம்பா லெதிர்பொழு
திசைவினை யிடைநிலை யாமிவை சிலவில.

**இது, எதிர்கால வினைக்கு இடைநிலையும், முக்கால விடைநிலை களுக்கு ஆவதோர் புறனடையும் உணர்த்துகின்றது.**

(இ-ள்.) பவ்வ — பகரமெய்யும் வகரமெய்யும், ஐம்பான் மூவிடத்து—ஐம்பான் மூவிடங்களிலும், எதிர்பொழுது எதிர் காலத்தை, இசை — காட்டுகின்ற, வினை — வினைப்பகுபதங் களுடைய, இடைநிலையாம்—இடைநிலைகளாகும், இவை—இம் முக்கால விடைநிலைகளும், சில — சில முற்றெச்சங்களுக்கு, இல— இல்லை. (எ-று.)

**உதாரணம்.** நடப்பான், வருவான், எனவரும். மற்றவைகளு மிப்படியே.

'இவை சிலவில' வென்றதனால் விகுதியாவது பகுதியாவது வேறிடைநிலையாவது காலங்காட்டுமென்பது பெற்றாம். அவை பின்வருஞ் சூத்திரத்திற் காண்க.

[காலங் காட்டும் விகுதி]

145. றவ்வொ டுகர வும்மைநிகழ் பல்லவும்
தவ்வொ டிறப்பு மெதிர்வும் டவ்வொடு
கழிவுங் கவ்வொடு எதிர்வுமின் னேவல்

வியங்கோ ளிம்மா ரெதிர்வும் பாந்தம்
செலவொடு வரவுஞ் செய்யுநிகழ் பெதிர்வும்*
எதிர்மறை மும்மையு மேற்கு மீங்கே.

**இது, முன் சூத்திரத்தில் இவை சிலவில வென்றார், அவை யிவை என்பது உணர்த்துகின்றது.**

(இ-ள்.) றவ்வொடு — றகர மெய்யோடு கூடிய, நிகழ் பல்லவும் — இறந்த காலத்தையும் எதிர் காலத்தையும், தவ்வொடு—தகர மெய்யோடு கூடிய, (உகரவும்மை)—உகர விகுதியும் உம் விகுதியும், இறப்புமெதிர்வும்—இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும், டவ்வோடு— டகர மெய்யோடு கூடிய, (உகரவும்மை)—உகர விகுதியும், கழிவும்—இறந்த காலத்தையும், கவ்வொடு—ககர மெய்யோடு கூடிய, (உகரவும்மை)—உகர விகுதியும் உம் விகுதியும், எதிர்வும் — எதிர்காலத்தையும், மின்—மின்விகுதியும், ஏவல்—முன்னிலையேவல் விகுதிகளும், வியங்கோள் — வியங்கோள் விகுதிகளும், இ—இகர விகுதியும், மார்—மார் விகுதியும், எதிர்வும் — எதிர்காலத்தையும், பாந்தம் — பகரவிகுதி, செலவொடுவரவும் — இறந்த காலத்தையும் எதிர்காலத்தையும், செய்யும் — செய்யுமென்னும் வாய்பாட்டு முற்றுவிகுதி, நிகழ்பெதிர்வும்—நிகழ் காலத்தையும் எதிர் காலத்தையும், எதிர்மறை—எதிர்மறை ஆகார விகுதி. மும்மையும்—மூன்று காலத்தையும், ஏற்கும்—ஏற்று வரும், ஈங்கு—இவை சிலவில வென்றவைகளுள். (எ-று.)

**உதாரணம்.**

| | | |
|---|---|---|
| சென்று | — சென்றும் | — இ |
| சேறு | — சேறும் | — எ |
| வந்து | — வந்தும் | — இ |
| வருது | — வருதும் | — எ |
| உண்டு | — உண்டும் | — இ |
| உண்கு | — உண்கும் | — எ |
| உண்மின் | — உண்ணு | எ |
| உண்க | — சேறி-உண்மார் | எ |
| உண்ப | — இ—எ | |
| உண்ணும் | — நி—எ | |
| உண்ணான் | — இ—நி—எ எனவரும். | |

காலங்காட்டும் விகுதிகளை மட்டும் சொல்லிக் காலங்காட்டும்பகுதியையும் பிற இடைநிலையையும் சொல்லாமையால் அவை சிறுபான்மை வரும். வந்தவிடங்களிற் கண்டுகொள்க வென்றாராயிற்று.

**அவை வருமாறு:—** தொட்டான், உற்ருன், புக்கான், என டு, கு, று என்கிற மூன்றெழுத்துக்களுள் ஒன்று ஈருகிய சில குறிலிணைப் பகுதிகள் விகாரப்பட்டு இறந்தகாலங் காட்டும்.

என்மனுர், என்றிகினேர், போயது, என மன், இசின் யகரமெய் இம்மூன்றிடை நிலைகளும் இறந்தகாலங் காட்டும்.

உண்ணுகிடந்தான் — உண்ணுவிருந்தான் — என ஆகிடந்து — ஆவிருந்து இரண்டிடைநிலைகளும் நிகழ்காலமும், என்மர்—என மகரவிடைநிலை இறந்தகாலமுங் காட்டும்.

'ஈங்கே' யென்ற மிகையால், வருதி என இகரவிகுதி நிகழ் காலங் காட்டுதலையும், எச்ச விகுதிகள் காலங் காட்டுதலையும் அமைத்துக் கொள்க.

இனி, பகுதி விகுதி முதலிய வுறுப்புகளாற் பகுபத முடிக்குமாறு :—

பொன்னன் என்கிற உயர்திணை யாண்பால் ஒருமைப் படர்க்கைப் பொருட்பெயர்ப் பகுபதத்தை முடிக்குமிடத்து 'பொருளிடங் கால' மென்னுஞ் சூத்திர விகுதியால் பொன் என்னும் பகுதியை முதலில் வைத்து, அதன் பின் 'அன் ஆன் அள் ஆள்' என்னுஞ் சூத்திர விகுதியால், உயர்திணை யாண்பாலொருமைப் படர்க்கையைக் காட்டுகிற, அன் விகுதியை வருவித்து. பொன்+அன் என வைத்து 'தனிக்குறின் முன்னொற்றுயிர்' என்னுஞ் சூத்திர விதியால் அந்த னகர மெய்யை இரட்டித்து, பொன்+ன்+அன் என வைத்து, 'உடன் மேலுயிர், என்னும் சூத்திரவிதியால், அகரவுயிரை மிகுந்த னகரமெய்யின்மேலேற்றி பொன்னன் எனமுடிக்க.

நடந்தனன் என்கிற உயர்திணை யாண்பால் லொருமைப் படர்க்கை இறந்தகாலங்காட்டும் வினைமுதற் றெரிநிலை வினை முற்றுப் பகுபதத்தை முடிக்குமிடத்து, 'நடவா' வென்னுஞ் சூத்திர விதியால் நட வென்னும் பகுதியை முதலில் வைத்து 'அன் ஆன் அள் ஆள்' என்னுஞ் சூத்திர விதியால், உயர் திணை யாண்பாலொருமைப் படர்க்கையைக் காட்டுகின்ற அன் விகுதியை அதன்பின் வருவித்து, நட—அன் என வைத்து; 'தடறவொற்றின்னே' என்னுஞ் சூத்திர விதியால் இறந்தகாலங் காட்டுந் தகர விடைநிலையை அவ்விரண்டற்குந் நடுவிலே வருவித்து, நட—த்—அன் எனவைத்து 'அன் ஆன்,

வென்னுஞ் சூத்திர விதியால் இடைநிலைக்கும் விகுதிக்கு மிடையிலே அன் சாரியை வருவித்து, நட+த்+அன்+அன் என வைத்து உடன்மேலுயிர்வந்தொன்னுஞ் சூத்திர விதியால் இடைநிலைத் தகர மெய்யின்மேலே சாரியை அகர வியிரை யேற்றி நட+தன்+அன் என வைத்து, "இயல்பி னும்" என்னுஞ் சூத்திர விதியால் இடைநிலைத் தகரத்தை மிகு வித்து, நட+த்+தன்+அன், என வைத்து வலித்தல் மெலித்த லென்னுஞ் சூத்திர விதியால் மிகுந்த தகர வல்லொற்றை மெல்லொற்றாக்கி நடந்தனன் என முடிக்க.

நட உண் என வருகிற முன்னிலைவேல் வினைகளிலே ஆய்விகுதியும், நடவான்—நடவேன்—நடவாய் என்கிற எதிர் மறை வினைகளிலே ஆவென்னும் எதிர்மறை விகுதியும், கொல்களிறு—ஓடாக்குதிரை என்பவைகளிலே கொன்ற, கொல்கின்ற, கொல்லப்படாத என வருகிற பெயரெச்ச வினை விகுதிகளும், வரிப்புனை பந்து—இதில் வரிந்து என வருகிற வினையெச்ச விகுதியும், சொளவாருங்கள், வருநேர்—இதில் நேர்வார் என வருகிற முற்றுவினை விகுதியும், முடி அடி என்பவைகளிலே முடித்தல் அடித்தல் என வருகிற தொழிற் பெயர் விகுதியும், காய்த்தல் இவைகளில் வினை முதற் பொரு ளுணர்த்தும் இகர விகுதியும், உண்—எழுத்து—இவைகளிலே செயப்படு பொருளுணர்த்தும் ஐ விகுதியும், புணர்ந்து குன்றின. அவ்விகுதிகள் புணர்ந்து குன்றினும் புணர்ந்து நின்றாற் போலவே பொருளுணர்த்தும்.

## வடமொழியாக்கம்.

### [ஆரியமொழி தமிழில் வடமொழியாதல்]

146. இடையின் நான்கு மீற்றி லிரண்டும்
அலலா வச்சை வருக்க முதலீறு
யவ்வாதி நான்மை னவ்வாகு மையைம்
பொதுவெழுத் தொருந்தநா லேழுந் திரியும்.

**இது, ஆரிய மொழிவிகாரப் பட்டுத் தமிழில் வந்து மொழியாமாறு அறிவிக்கத் தொடங்கி அவற்றின் பொது விதி உணர்த்துகின்றது.**

(இ-ள்) இடையில்—ஆரியத்தில் 𑌅, 𑌆, 𑌇, 𑌈, 𑌉, 𑌊, 𑌋 𑍠 𑌌 𑍡 𑌏, 𑌐, 𑌓, 𑌔, 𑌅𑌂, 𑌅𑌃 என்கிற உயிர் பதினாறனுள் நடுவிலிருக்கின்ற, நான்கும் — 𑌋 𑍠 𑌌 𑍡 என்கிற நாலெ ழுத்துக்களும், ஈற்றில்—கடையிலிருக்கின்ற, இரண்டும்— 𑌅𑌂 𑌅𑌃 என்கிற இரண்டெழுத்துக்களும், அல்லா—நீங்கலாகிய,

அச்சு—அ, ஆ, இ, ஈ, உ, ஊ, ஏ, ஓ, ஔ, என்கிற பத்து உயிர் களும். ஐவருக்கம்—க வ ம வ ஈ      அ ஆ ஜ ஸ ரு

ட ஂ ஙு ஜ ண      த ய த ய த

வ ஷ ஞ ஹ ஐ

ய ர ழ வ ஶ ஷ ஸ ஹ ள க்ஷ ஷ்க      ஷ்ப

என்கிற மெய் முப்பத்தேழும் ககர மிதலைங்கெழுத்துக்களா கியஐந்து வருக்கங்களுடைய, முதல்...முதலிருக்கின்ற கசட தப என்கின்ற வைந்து மெய்களும், ஈறு—கடையிலிருக்கின்ற நஞணநம என்கின்ற வைந்து மெய்களும், யவ்வழி நான்மை— யரலவ என்கிற நான்கு மெய்களும், ள ளகர மெய்யும், ஆகுமையயெழுத்து—ஆகிய இருபத்தைந்தெழுத்துக்களும், பொது—தமிழிற்கும் ஆரியத்திற்கும் பொது வெழுத்துக்க ளாகும், ஒழிந்த—அவை யொழிந்த, நாலேழும்—இருபத் தெட்டு எழுத்துக்களும், திரியும்—ஆரியத்திற்குச் சிறப் பெழுத்துகளாய்த் தமக்கேற்ற பொதுவெழுத்துகளாகத் திரிந்து வரும். (எ-று.)

[ஆரியமொழி வடமொழியாதற்குச் சிறப்பு விதி]

147. அவற்றுள்,
ஏழாமுயி ரிய்யும் இருவுமை வருக்கத்
திடையின் மூன்று மவ்வம் முதலும்
எட்டே யவ்வும் முப்பது சயவும்
மேலொன் று சடவும் இரண்டு சதவும்
மூன்றே யகவும் ஐந்திரு கவ்வும்
ஆவீ றையும் ஈயீ றிகரமும்.

**இது, முன் சொல்லப்பட்டதற்குச் சிறப்பு விதி உணர்த்து கின்றது.**

(இ-ள்) அவற்றுள்—முன்னே திரியு மென்ற வெழுத்து களுள், ஏழாமுயிர்—சிறப்பெழுத்தாகிய வேழாமுயிரானது, இய்யுமிருவும்—இகரயாகவாறும் இருவாகவாறும், ஐவருக்கத்து—ஐந்து வருக்கங்களினும், இடையின் மூன்று— நடுநின்ற மும்மூன்றெழுத்துக்களும், அவ்வம் முதலும்—அவ் வவ் வருக்கங்களின் முதலெழுத்துகளாகும், எட்டு—எட்டாவ தாகிய சகர வருக்கத்து மெய்யானது, யவ்வும்—ஓரோவிடத் தில் யகரமாகும், முப்பது—முப்பதாம் மெய்யானது, சய வும்—மொழிக்கு முதலிலே சகரமும் நடுவிலே டகரமுமாம், இரண்டு—முப்பத்திரண்டாம் மெய்யானது, சதவும்— மொழிக்கு முதலிலே சகரமும், நடுவிலே தகரமுமாகும். மூன்று—முப்பத்துமூன்றாம் மெய்யானது, அகவும்—

மொழிக்கு, முதலிலே அகரமும், நடுவிலே ககரமுமாகும், ஐந்து முப்பத்தைந்தாம் மெய்யானது. இருகவ்வும்—இரண்டு ககரமாகும், ஆவீறு—பொதுவெழுத்துக்களிலே மொழியிறுதி ஆகாரமானது, ஐயும்—ஐகாரமாகும், ஈயீறு — மொழியிறுதி ஈகாரமானது, இகரமும்—இகரமாகும். (எ-று.)

**உதாரணம்.** இடபம் எ—ம், மிருகம் எ—ம், ஏழாமுயிர் இகரமும் இருவுமாயிற்று.

நகம் — நாகம் — மேகம் — என்றும்,
சலவாதி— விசயம் — சருக்கரை — என்றும்,
மடம் — பீடை — திடம் — என்றும்,
தலம் — தினம் — தரை — என்றும்,
பலம் — பந்தம் — பாரம் — என்றும்,

ஐந்து வருக்கங்களினும் உரப்பியும், எடுத்தும், கனைத்தும் சொல்லப்படுகிற மும்மூன்றும் அவ்வவ் வருக்க முதலெழுத்தாயின.

பங்கயம், எட்டாமெய்யகரமுமாயிற்று. சாலை—எ-ம், மயானம்—எ-ம், முப்பதாமெய் முதலிற் சகரமும் நடுவில் யகரமுமாயிற்று.

சட்டி எ-ம், இடபம் எ-ம், முப்பத்தொன்றுமெய் முதலிற் சகரமும் நடுவில் டகரமுமாயிற்று.

சித்தி எ-ம், வாதனை எ-ம், முப்பத்திரண்டாமெய் முதலிலகரமும், நடுவில் ககரமுமாயிற்று.

அரன் எ-ம், மோகம் எ-ம், முப்பத்துமூன்றுமெய் முதலிலகரமும், நடுவில் ககரமுமாயிற்று.

பக்கம்—என முப்பத்தைந்தாமெய் இரண்டு ககரமுமாயிற்று.

மாலை—என ஆவீறு ஐயாயிற்று. புரி—என ஈகாரவீறு இகரமாயிற்று.

148. ரவ்விற் கம்முத லாமுக் குறிலும்
லவ்விற் கிம்முத லிரண்டும் யவ்விற்கு
இய்யி மொழிமுத லாகிமுன் வருமே.

**இதுவுமது:—**

(இ-ள்) ரவ்விற்கு—ரகரத்திற்கு, அம்முதலாமுக்குறிலும்—அ, இ, உ என்கிற மூன்று குற்றெழுத்துக்களிலொன்றும், லவ்விற்கு—லகரத்திற்கு, இம்முதலிரண்டும்—இ, உ என்கிற விரண்டிலொன்றும், யவ்விற்கு—யகரத்திற்கு, இய்யும்—இகரமும், மொழிமுதலாகி—அவ்வெழுத்துக்களை முதலிலுடைய வடமொழிகளுக்கு முதலாகி முன்வரும்—அம்மூன்றெழுத்துக்களுக்கு முன்னே வரும். (எ-று.)

**உதாரணம்.** அரங்கம் — இராமன் — உரோமம் — எ-ம், இலாபம் — உலோபம் எ-ம், இயக்கன் — எ-ம், வரும்.

149. இணைந்தியல் காலை யரலக் கிகரமும்
மவ்வக் குகரமும் நகரக் ககரமும்
மிசைவரும் ரவ்வழி யுவ்வு மாம்பிற.

**இதுவுமது:—**

(இ-ள்) இணைந்து—ஆரியமொழியுள் இரண்டெழுத் திணைந்து, இயல்காலை—ஒரெழுத்தைப்போல நடக்கும்போது, யரலக்கு—பின்னின்ற யகர ரகரலகரங்களுக்கு, இகரமும்—இகரமும், மவ்வக்கு—மகரவகரங்களுக்கு, உகரமும்—உகரமும், நகரக்கு—நகரத்திற்கு, அகரமும்—அகரமும், மிசை—மேலே, வரும்—வந்து வடமொழிகளாகும், ரவ்வழி—இணைந்து முன்னின்ற ரகத்திற்குப்பின், உவ்வுமாம்—உகரமும் வரும். (எ—று.)

**உதாரணம்.** வாக்கியம் — வக்கிரம்—சுக்கிலம்—எ-ம், பதுமம்—பக்குவம் — எ-ம், அர்த்தம்—எ-ம், அருத்தம்—எ-ம் வரும்.

பிறவென்றதனல் — சத்தி—கட்சி — காப்பியம் — அருப்பதம் இவை முதலாகிய திரிபும். தூலம் — அர்த்தம்—ஆதித்தன்—இவை முதலாகிய கேடும், மற்றும், விகாரத்தால் வருவனவுங்கொள்க.

[தமிழெழுத்திற் சிறப்பெழுத்தும் பொதுவெழுத்தும்]

150. ரனழள ஒவ்வு முயுர்மெய்யு முலரளபு
அல்லாச் சார்புந் தமிழ்பிற பொதுவே.

**இது தமிழெழுத்துக்களிற் சிறப்பெழுத்துக்களும் பொதுவெழுத்துக்களும் உணர்த்துகின்றது.**

(இ-ள்) ற ன ழ எ ஒ வ் வு ம்—முதலுஞ்சார்புமாகிய தமிழெழுத்து நாற்பதுகளிலே றகர னகர ழகர எகர ஒகரங்களைந்தும், உயிர்மெய்யுயிரள பல்லாச்சார்பும்—உயிர் மெய்யும், உயிரளபெடையும் இல்லாத சார்பெழுத்து எட்டும், தமிழ்—தமிழுக்கே சிறப்பெழுத்துக்களாம். பிற—ஒழிந்த இருபத்தேழு எழுத்துக்களும், பொது—பொதுவெழுத்துக்களாம். (எ—று.)

இரண்டாவது பதவியல்
**முற்றுப்பெற்றது.**

**உதாரணம்.** சாத்தன், கொற்றன், ஆண், இவற்றின் முன் குறிது, சிறிது, தீது, பெரிது, குறியன், சிறியன், தீயன் பெரியன், கை, செவி, தலை, புறம் இவற்றை வருவித்து,

சாத்தன்குறிது
சாத்தன்குறியன்
சாத்தன்கை

என முறையே கூட்டிப் பொதுப்பெயரீற்றுமெய் இயல் பாதல் காண்க.

ஊரன், அவன் இவற்றின்முன் குறியன், சிறியன், தீயன், பெரியன், கை, செவி, தலை, புறம் இவற்றை வருவித்து ஊரன்குறியன், ஊரன்கை என முறையே கூட்டி உயர் திணைப்பெயரீற்றுமெய் இயல்பாதல் காண்க. மற்றவைபு மிப்படியே.

சாத்தி, கொற்றி, தாய், இவற்றிமுன் குறிது, சிறிது, தீது, பெரிது, குறியள், சிறியள், தீயள், பெரியள் கை, செவி, தலை, புறம் இவற்றை வருவித்து,

சாத்திகுறிது
சாத்திகுறியன்
சாத்திகை

என முறையே கூட்டிப் பொதுப்பெயரீற்றுஉயிர், யகர முன் வலி இயல்பாதல் காண்க.

நம்பி, விடலை இவற்றின்முன், குறியன், சிறியன், தீயன், பெரியன், கை, செவி, தலை, புறம் இவற்றையும், அவர், ஒருவர், இவற்றின்முன் குறியர், சிறியர், தீயர், பெரியர், கை செவி, தலை, புறம் இவற்றையும் வருவித்து, நம்பிகுறியன், நம்பிகை, அவர் குறியர், அவர் கை என முறையே கூட்டி உயர்திணைப் பெயரீற்று உயிர், ரகர முன் வலி இயல்பாதல் காண்க. மற்ற வையுமிப்படியே.

கபிலன் + பரணன் = கபிலபரணர்
வடுகன் + நாதன் = வடுகநாதன்
அரசன் + வள்ளல் = அரசவள்ளல்
ஆசீவகன் + பள்ளி = ஆசீவகப்பள்ளி

குமரன் + கோட்டம் = குமரகோட்டம், குமரக்கோட்டம் மற்றவைகளுமிப்படியே. எனவிருவழியும் உயர்திணையுள் சில தமக்கேற்ற விகாரமாயின.

[வினைப்பெயர் விளிப்பெயர் முன் வல்லினம்]

160. ஈற்றியா வினாவிளிப் பெயர்முன்வலி யியல்பே.

இதுவுமது.

(இ-ள்) ஈற்று வினாமுன்—ஆ, ஏ, ஓ என்கிற மூன்று ஈற்று வினாமுன்னும், யா வினாமுன்—யா வினா முன்னும், விளிப்பெயர் முன்—உயிரீறு மெய்யீறுமாகிய விளிப்பெயர் முன்னும், வலி—வருகிற வல்லெழுத்துக்கள், இயல்பு—இயல் பாகும். (எ-று.)

**உதாரணம்.** நம்பியாகொண்டான், சென்றான், தந்தான், போயினான் எனவும், யாகுறியன, சிறியன, தீயன, பெரி யன எனவும், வினாமுன் வலி இயல்பாதல் காண்க.

நம்பி, நம்பீ, விடலை, விடலாய், கிள்ளை, கிள்ளாய், தாய், தாயே, இவற்றின்முன் கொள், செல், தா, போ இவற்றை வருவித்து,

நம்பி கொள், நம்பி தா,
நம்பி செல், நம்பி போ

என முறையே கூட்டி விளிப்பெயர்முன் வலி இயல்பாதல் காண்க.

ஏகார ஓகார வினாக்களுக்கு "இடைச் சொல்லேயோ" வென்னுஞ் சிறப்புச் சூத்திரத்தில் உதாரணம்பெறப்படும்.

[முன்னிலை ஏவல் முன் வல்லினம்]

161. ஆவி யரழ விறுதிமுன் னிலைவினை
யேவன்முன் வல்லின மியல்பொடு விகற்பே.

**இதுவுமது:**

(இ-ள்) ஆவி—உயிரையும், ய ர ழ—ய, ர, ழ என்கிற மூன்று மெய்களையும், இறுதி—இறுதியாகவுடைய, முன் னிலை வினை—முன்னிலைவினைமுன்னும், ஏவன் முன்—ஏவல் வினை முன்னும், வல்லினம்—வருகிற க, ச, த, ப க்கள், இயல் பொடு—இயல்புடனே, விகற்பு—விகற்பமாம். (எ-று.)

**உதாரணம்.** உண்டி, உண்டனை, உண்டாய் எம்,
உண்டனிர், உண்டீர் எனவும் நிறுத்தி,
சாத்தா, கொற்றா, தேவா, பூதா எ-ம்,
சாத்தரே, கொற்றரே, தேவரே, பூதரே எ-ம்
வருவித்து,

உண்டிசாத்தா, உண்டனிர்சாத்தரே எனக்கூட்டி முன்னிலைவினைமுன் இயல்பாதல் காண்க.

கொணு, எறி, விடு, ஆய், சேர், தாழ் என நிறுத்தி, சாத்தா, கொற்ரு, தேவா, பூதா என வருவித்து, கொணு சாத்தா என முறையே கூட்டி ஏவல்வினைமுன் இயல்பாதல் காண்க. விகற்பமாதல் வந்தவிடத்திற் காண்க.

நட கொற்ரு, நடக்கொற்ரு, எய்கொற்ரு, எய்க்கொற்ரு என ஏவலின்முன் விகற்பிக்குமென்று கொள்ளினுமாம்.

## உயிரீற்றுச் சிறப்புப் புணர்ச்சி

### [உயிர்முன் உயிர் புணர்தல்]

162. இ, ஈ, ஐ வழி யவ்வும் ஏனை
உயிர்வழி வவ்வும் ஏமுனிவ் விருமையும்
உயிர்வரி னுடம்படு மெய்யென் ருகும்.

இது உயிரீற்றுப்பதம் புணருஞ் சிறப்புப்புணர்ச்சி சொல்லத் தொடங்கி உயிரீற்றுமுன் உயிரீற்றுப் பதம் வந்து புணருமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்) இ, ஈ, ஐ வழி—இகர ஈகார ஐகாரங்களின் முன்னே, யவ்வும்—யகரமும், ஏனையுயிர்வழி—அ, ஆ, உ, ஊ, ஒ, ஓ, ஔ என்கிற விவ்வேழுயிர்களின் முன்னே, வவ்வும்—வகரமும், ஏமுன்—ஏகாரத்தின் முன்னே, இவ்விருமையும்—யகரமும் வகரமும், உயிர்வரின்—உயிர்முதன்மொழி வந்தால்; உடம்படு மெய்யென்ருகும்—உடம்படுமெய் என்று வரப்பெறும். (எ-று.)

**உதாரணம்.** மணி, தீ, பனை இவைகளுக்கு முன்னே, அழகிது—அழகு முதலாகிய முதன்மொழிகளை வருவித்து, மணியழகிது—மணியழகு எனக் கூட்டி இ, ஈ, ஐ முன் யகரம் வருதல் காண்க.

விள, பலா, கடு, பூ, நொ, கோ, கௌ இவைகளுக்கு முன்னே, அழகிது—அழகு முதலாகிய உயிர்முதன்மொழிகளை வருவித்து, விளவழகிது—விளவழகு எனக்கூட்டி மற்றை உயிர்களின் முன் வகரம் பெறுதல் காண்க.

அவனே + இவன் = அவனேயிவன், சே + அழகிது = சேவழகிது என ஏமுன்னவ்விருமெய்களும் வருதல் காண்க.

[வினச்சுட்டின்முன் நாற்கணமும் புணர்தல்]

163. எகர வினமுச் சுட்டின் முன்னர்
உயிரும் யகரமு மெய்தின் வவ்வும்
பிறவரி னவையுந் தூக்கிற் சுட்டு
நீளின் யகரமுந் தோன்றுதல் நெறியே.

இது, 'இ, ஈ, ஐ வழி' என்னுஞ் சூத்திரத்தாலும் 'எண் மூவெழுத்திற்' வென்னுஞ் சூத்திரத்தாலும் எய்தியது விலக்கிப் பிறிது விதி பகுக்கின்றது.

(இ-ள்) எகர வின முன்னர்—எகர வினவிடைச்சொல்லின் முன்னும், முச்சுட்டின் முன்னர்—மூன்று சுட்டிடைச்சொல்லின் முன்னும், உயிரும்—உயிரும், யகரமும்—யகரமும், எய்தின்—வந்தால், வவ்வும்—வகரமும், பிற—யகர மொழிந்த மெய்கள், வரின்—வந்தால், அவையும்—அவ்வந்தமெய்களும், தூக்கில்—செய்யுளிடத்து, சுட்டு—சுட்டுக்கள், நீளின்—நீண்டு வருமிடத்து, யகரம்—யகரமும், தோன்றுதல்—மிகுதல் நெறி—முறையாம். (எ-று.)

உதாரணம். எ + அணி = எவ்வணி
எ + யானை = எவ்யானை (எ-ம்),
எ + குதிரை = எக்குதிரை
எ + சேனை = எச்சேனை
எ + தண்டு = எத்தண்டு
எ + படை = எப்படை
எ + ஞாலம் = எஞ்ஞாலம்
எ + நாடு = எந்நாடு
எ + மனை = எம்மனை
எ + வளை = எவ்வளை
எ + ஙனம் = எங்ஙனம் (எ-ம்),
ஆ + இடை = ஆயிடை, (எ-ம்),

வகரமும் வந்தமெய்களும் யகரமுந் தோன்றினமை காண்க. அ, இ, உ இவற்றின் முன்னும் அப்படியே கூட்டுக.

'நெறியே' யென்றமையால் யாங்ஙனம் என யா வின முன்னும் ஆங்ஙனம், ஈங்ஙனம், ஊங்ஙனம் என நீண்ட சுட்டின் முன்னும் ஙகர மிகுதலும், ஈது, ஆங்கு, ஊங்கு, ஆண்டு, ஈண்டு எனச் சுட்டுப்பெயர் நீளலும், "விண்வத்துக் கொட்கும்" "செல்வுழிச் செல்க" என மெய்யீற்றின் முன் உயிர் வர இப்படி உடம்படுமெய் யல்லாத வகரம் பெறுதலுங் கொள்க.

### [குற்றியலுகர முன்னுஞ் சில முற்றியலுகர முன்னும் உயிரும் யகரமும் புணர்தல்]

164. உயிர்வரி னுக்குறள் மெய்விட் டோடும்
யவ்வரி னிய்யாம் முற்றுமற் றொரோ வழி.

இது, குற்றியலுகரத்திற்கு "இ, ஈ, ஐ வழி" என்னுஞ் சூத்திரத்தால் எய்தியது விலக்கிப் பிறிது விதிவகுத்தலும், முற்றியலுகரத்திற்கு அச்சூத்திரத்தாலெய்தியதன்மேற் சிறப்பு விதியுமுணர்த்துகின்றது.

(இ-ள்) உக்குறள்—குற்றியலுகரமானது, உயிர்—உயிர் முதன்மொழி, வரின்—வந்தால், மெய்விட்டு—தனக்கிடமாகிய மெய்யை விட்டு, ஓடும்—கெடும், ய—யகர முதன்மொழி. வரின்—வந்தால், இய்யாம்—அது இகரமாகத் திரியும், முற்றும்—முற்றியலுகரமும், அற்று—அவ்விருவிதியும் பெறும், ஒரோவழி—ஒவ்வோரிடத்து. (எ-று.)

உதாரணம்,

| | | |
|---|---|---|
| நாகு+அரிது | = | நாகரிது |
| நாகு+யாது | = | நாகியாது |
| நாகு+வளர்ச்சி | = | நாகின் வளர்ச்சி |
| நாகு+யமன் | = | நாகியமன் |
| கதவு+அழகிது | = | கதவழகிது |
| கதவு+யாது | = | கதவியாது |
| அது+ஐ | = | அதை எனவும் வரும். |

கெடுமென்னாது ஓடுமென்றமையால், தன்முகமாகத் தானழைப்பதுவே எனக் குற்றியலுகரம் பொதுவிதி பெறுதலுங் கொள்க.

## உயிரீற்று முன் வல்லினம்

### [உயிரீற்றின் முன் வல்லினம் புணர்தல்]

165. இயல்பினும் விதியினும் நின்ற உயிர்முன்
கசதப மிகும் விதவாதன மன்னே.

இது உயிரீற்றுமுன் வல்லினம் புணருமாறு அறிவிக்கத் தொடங்கி உயர்திணைப்பெயர் பொதுப்பெயர்க்கு, 'ஆவியா முன் வன்மைமிகா' வென எய்தியதன்மேற் சிறப்பு விதியும், அஃறிணைப் பெயர்க்கும் வினை முதலியவைகளுக்கும் எய்தாததெய்துவித்தலுஞ் சொல்லுகின்றது.

(இ-ள்) இயல்பினும்—இயல்பினுலும், விதியினும்—விதியினுலும், நின்ற—இறுதியாக நின்ற, உயிர் முன்—உயிர்களின் முன், கசதப—வருகிற கசதபக்கள், மிகுமன்—பெரும்பாலும் மிகும், விதவாதன—சிறப்புவிதியிற் சொல்லாதவைகள். (எ-று.)

**உதாரணம்:**—ஆடூஉக் குறியன், நம்பிக் கொற்றன், சாத்திப்பெண், தாராக்கடிது, ஒற்றைக்கை, வட்டக்கடல், தாழ்க்கோல் எ-ம், ஆடூஉக்கை, நம்பிப் பாருக்காய், ஆட்டுக்கால், எனப் பெயர்களின் முன்னும், இருவழியினும் வல்லெழுத்து மிகுந்தன.

ஆடிக்கொண்டான், ஆடாக்கொண்டான், ஆடுக்கொண்டான், ஆடெனக் கொண்டான், ஆடக் கொண்டான், உண்பாக்குச் சென்றான், பூத்துக் காய்த்தது, பொள்ளெனப் பரந்தது, சாலப்பகைத்தது எனவும், இருளின்றிக்கண்டார், எ-ம், வினையெச்சங்களின் முன் மிக்கன. மற்றைச்சாதி என இடைச்சொல் முன்னும், கடிக்கமலம் என உரிச்சொல், முன்னும், சொன்றிக்குழிசி எனத் திசைச்சொல் முன்னும் கங்கைச்சடை என வட சொல் முன்னும் வலி மிக்கன.

விதவாதன பெரும்பாலு மிகுமெனவே விதந்தன சிறுபான்மை மிகுமெனவும், விதவாதன சிறுபான்மை மிகாவெனவும் கூறியதாயிற்று.

**உதாரணம்:**—நொக்கொற்று—துக்கொற்று என்பது 'ஏவன் முன் வல்லினம் இயல்பொடு விகற்பே' எனச்சொல்லிய சிறப்பு விதி பெறுமல் வல்லெழுத்து மிக்கன.

ஏரிகரை, குழந்தைகை, பழமுதிர்சோலை மலைகிழவோனே, கூப்புகரம், நாட்டுபுகழ், என விதவாதன மிகாவாயின.

**[உயிரீற்றுச் சில மரப்பெயர்முன் வல்லினம் புணர்தல்]**

166. மரப்பெயர் முன்ன ரினமெல் லெழுத்து
 வரப்பெறு னவுமுள வேற்றுமை வழியே.

**இது உயிரீற்றுச்சில மரப்பெயர்முன் வரும் வல்லெழுத்திற்கு எய்தியது ஒருவழி விலக்கிப் பிறிதுவிதி உணர்த்துகின்றது.**

(இ-ள்.) மரப்பெயர் முன்னர் — உயிரீற்றுச் சில மரப்பெயர்களுக்கு முன்—இன மெல்லெழுத்து வர-முன்சொன்ன பொது விதியால் வருகிற வல்லெழுத்து மிகாமல் அவற்றிற்

கினமாகிய மெல்லெழுத்து மிகப், பெறுனவும்—பெறுவனவும் உள—சிலவுளவாம், வேற்றுமை வழி—வேற்றுமை வழியில். (எ-று.)

**உதாரணம்** விள + காய் = விளங்காய், மா + கொம்பு = மாங் கொம்பு என வரும்.

**அகர வீற்றுச் சிறப்பு விதி**

167. செய்யிய வென்னும் வினையெச்சம் பல்வகைப்
பெயரி னெச்சமுற் ருற னுருபே
அஃறிணைப் பன்மை யம்மமுன் னியல்பே.

**இது, உயிரீறுகளுக்குத் தனித்தனி சிறப்பு விதி சொல்லத்தொடங்கி அகரவீற்றுச் சொற்களுக்குள்ளே சிலவற்றிற்கு எய்தியது விலக்கு கின்றது.**

(இ-ள்.) செய்யிய வென்னும் வினையெச்சம் — செய்யிய வென்னும் வினையெச்சவினையும், பல்வகைப் பெயரி னெச்சம் — பலவகைப்பட்ட பெயரெச்சவினையும், (பல்வகை) முற்று—பலவகைப்பட்ட முற்று வினையும், ஆறனுருபு—ஆறும் வேற்றுமை அகரவுருபும், அஃறிணைப்பன்மை—அஃறிணைப் பன்மைப்பெயரும், அம்ம—அம்ம வென்கிற வுரையசை யிடைச்சொல்லும், முன்—ஆகிய அகரவீற்றுச் சொற்களா றன் முன்னும், இயல்பு—வல்லெழுத்துக்களியல்பாம். (எ—று)

**உதாரணம்** உண்ணிய கொண்டான்—சென்றான், தந்தான், போயினன் எனச் செய்யியவென்னும் வினை யெச்சமுன்னியல்பாயின. உண்ட, உண்ணு நின்ற, உண்ணுத — எ-ம், கடைக்கணித்த, சித்திரித்த, வெறுத்த, சினவிய, கறுவிய, அம ரிய—எ-ம், திண்ணென்ற, பொன்போன்ற, எ-ம், சான்ற, எற்ற எ-ம், வருகிற நால்வகைத் தெரிநிலைப் பெயரெச்ச முன்னும், அழர் முகத்த— கடுங்கண்ண, சிறிய, பெரிய, உள, இல, பல சில, எ-ம், பொன்னன் எ-ம், கடிய, எ-ம், வரு கிற மூவகை வினைக்குறிப்புப் பெயரெச்சமுன் னும், குதிரை, செநாய், தகர், பன்றி, இவற்றை வருவித்து, உண்ட குதிரை, உண்டசெந்நாய், உண்டதகர், உண்டபன்றி என முறையே கூட் டிப் பல்வகைப்பெயரெச்சமுன் னியல்பாதல் காண்க.

பொருள்வேறுபாடல்லாமற் சொல்வேறுபாடிலாமையால் முற்றிற்கும் இவையே உதாரணமாகும்.

வாழ்ககொற்றா—சாத்தா, தேவா, பூதா என வியங்கோள் முற்றின்முன்னியல்பாயின. வாழியவென்பதனோடு மிப்படியே கூட்டுக.

முற்றின்முன்னியல்பாமெனவே அருத்தாபத்தியால் உண்டகண்டன், அமர்முகத்தகுதிரைகள், அமர்முகத்த கலக்கின என வினைமுற்று வினையெச்சமாகியும், குறிப்புமுற்றீரெச்சமாகியும் வந்தவிடத்தும் இயல்பாமென்றறிக. தன கைகள், செவிகள், தாள்கள், பதங்கள் என ஆறனுருபின் முன்னியல்பாயின.

பல குதிரைகள், செந்நாய்கள், தகர்கள், பன்றிகள் எ-ம், பல கொடுத்தான், செய்தான், தந்தான், போயினன் எ-ம், அஃறிணைப்பன்மைப்பெயர் முன் இருவழியும் இயல்பாயின.

அம்ம கொற்றா—சாத்தா, தேவா, பூதா என உரையசையிடைச்சொல்முன்னியல்பாயின.

168. வாழிய வென்பத னீற்றி னுயிர்மெய்
ஏகலு முரித்தஃ தேகினு மியல்பே

**இது வியங்கோள்முற்றிற்கு எய்தாததெய்துவித்தலும், எய்திய வழிப் புணரும் வல்லினத்திற்கு எய்தியது இகந்துபடாமைக் காத்தலுஞ் சொல்லுகின்றது.**

(இ-ள்) வாழிய வென்பதன்—வாழிய வென்னும் வியங்கோள்முற்றினுடைய, ஈற்றின்—இறுதியிலுள்ள, உயிர்மெய்—யகரவுயிர்மெய்யானது, ஏகலும்—குறைதலும், உரித்து—உரித்தாகும், அஃது—அவ்வுயிர்மெய்யானது, ஏகினும்—குறைந்து இகரவீறாய் நின்றாலும், இயல்பே—வல்லினம் பொதுவிதியினாலே மிகாமற் சிறப்புவிதியிற் கூறியஇயல் பேயாம். (எ-று.)

**உதாரணம்.** ஆ வாழி—எனவீற்றுயிர்மெய் குறைந்தது. வாழி கொற்றா—சாத்தா, தேவா, பூதா, என குறைந்த விடத்தும் வல்லினமியல்பாயின.

169. சாவவென் மொழியீற் றுயிர்மெய் சாதலும்விதி.

**இது சாவ என்கிற நிலைமொழிக்கு எய்தாததெய்துவிக்கின்றது.**

(இ-ள்) சாவவென்மொழி—சாவ வென்னும் செயவெனெச்ச வினைச்சொல்லினுடைய, ஈற்று—இறுதியி லிருக்கின்ற, உயிர்மெய்—வகரவுயிர்மெய்யானது, சாதலும்—கெட்டுப் புணர்தலும், விதி—விதியாகும். (எ-று.)

**உதாரணம்.** சாவ + குத்தினன் = சாக்குத்தினன் எனவரும். இப்புணர்ச்சி சாவக்குத்தினன் என்னும் புணர்ச்சி போற் சிறந்தது அல்லாமையாற் 'சாதலும்விதி' யென்றார்.

170\. பலசில வெனுமிவை தம்முன் தாம்வரின்
இயல்பும் மிகலும் அகர மேக
லகரம் றகர மாகலும் பிறவரின்
அகரம் விகற்ப மாகலு முளபிற.

**இது வருமொழிக்கு எய்தியது இகந்துபடாமைக் காத்தலும், அதன் மேற் சிறப்புவிதியும், நிலைமொழிக்கு எய்தாததெய்துவித்தலுஞ் சொல்லுகின்றது.**

(இ-ள்) பல சிலவெனுமிவை—பல சிலவென்கின்ற விரு சொல்லும், தம்முன்—தமக்குமுன்னே, தாம்வரின்—தாம் வருமாயின், இயல்பும்—இயல்பாதலும், மிகலும்—மிகுதலும், அகரம்—அகரமானது, ஏக—கெட, லகரம்—லகரமானது, றகரமாதலும்—றகரமாகத் திரிதலும், பிற—இவற்றின்முன் பிறமொழிகளுள் யாதாயினுமொன்று, வரின்—வந்தால், அகரம்-அகரமானது, விகற்பமாகலும்—நிற்றலும் நீங்கலும், உள—உளவாம். (எ-று.)

**உதாரணம்.** பல பல, சில சில—இயல்பாயின.
பற்பல, சிற்சில—அகரம் கெட லகரம் றகர மாயிற்று.
பலப்பல, சிலச்சில-மிக்கன
பல கலை—பல்கலை
பல சாலை—பல்சாலை
பல தாழிசை—பஃறாழிசை
பல படை—பல்படை
பல ஞானம்—பன்ஞானம்
பல நாள்—பன்னாள்
பல மணி—பன்மணி
பல வளை—பல்வளை
பல யாழ்—பல்யாழ்
பல வணி—பல்லணி
பல வாயம்....பல்லாயம்
பிறவர அகரம் விகற்பமாயிற்று.

பிறவென்ற மிகையால் பல்பல—சில்சில....என அகரம் கெட-லகரம் றகரமாகாமல் ஓரோவிடத்து வருதலும், இன்

னும் அகரவீற்றுப் புணர்ச்சியுள் அடங்காது வருவனவுங் கொள்க.

### [ஆகாரவீற்றுச் சிறப்புவிதி]

171. *அல்வழி யாமா மியாமுற்று முன்மிகா.*

**இது ஆகாரவீற்றுட் சிலவற்றிற்கு எய்தியதொருமருங்கு விலக்குகின்றது.**

(இ-ள்) அல்வழி—அல்வழியில், ஆ மா—ஆவுமாவுமாகிய விருபெயரும், மியா—மியாவென்னு முன்னிலையசையிடைச் சொல்லும், முற்று—ஆகாரவீற்று அஃறிணைப் பன்மையெதிர் மறை முற்றுவினையுமாகிய, முன்—இவற்றின்முன், மிகா—வருகிற வல்லினம் இயல்பாகும். (எ-று.)

**உதாரணம்.** ஆ குறிது—மா குறிது, சிறிது, தீது, பெரிது எ-ம், கேண்மியா கொற்றா—சாத்தா, தேவா, பூதா எ-ம், உண்ணா குதிரைகள்—செந்நாய்கள், தகர்கள், பன்றிகள் எனவரும்.

இரட்டுற மொழிதலாற் காட்டுப்பசுவென்னும் பொருளைத் தருகிற ஆமா வென்பதன் முன்னும் ஆமாகுறிது என வியல்பாகுமெனக் கொள்க.

172. *குறியதன் கீழாக் குறுகலு மதனொடு*
*உகர மேற்றலு மியல்புமாந் தூக்கின்.*

**இது ஆகாரவீற்றுட் சில சொல்லிற்கு எய்தாதனவெய்துவித்தலும், அவ்விடத்து வருவதோர் ஐயம் ஒழித்தலுஞ் சொல்லுகின்றது.**

(இ-ள்) குறியதன் கீழா—குற்றெழுத்தின்கீழ் நின்ற ஆகாரம், குறுகலும் — அகரமாதலும், அதனொடு—அவ்வகரமாதலுடனே, உகர மேற்றலும்—உகரம் பெறுதலும், இயல்பும்—அவ்விரண்டுமில்லாம லியல்பாகலும் ஆகிய மூன்று விதியும், ஆம்—ஆகும், தூக்கின்—பாட்டினிடத்து. (எ-று.)

**உதாரணம் :** நில விரிகானல் வாய் நின்று—நிலா-விரி (குறுகல்)
மருவினென் செய்யுமோ நிலவு—நிலவு (குறுகலோடு உகரமேற்றல்)
நிலாவணங்கு வெண்மணன் மேனின்று (இயல்பு)
எனவரும்.

செய்யுளிலே மூன்று மாமெனவே இரா—இரவு, புரு—புறவு, சுரு—சுறவு எனவியல்புங்குறுகி உகரமேற்றலும் வழக்கில் வருமெனக்கொள்க.

### இகர வீற்றுச் சிறப்பு விதி

173. அன்றி யின்றியென் வினையெஞ் சிகரம்
தொடர்பினு ளுகர மாய்வரி னியல்பே.

**இது அன்றி யின்றி யென்னும் வினையெச்சக் குறிப்பிற்கு எய்தாத தெய்து வித்தலும், எய்தியவழிப்புணரும் வல்லினத்திற்கு எய்தியது விலக்கலுஞ் சொல்லுகின்றது.**

(இ-ள்) அன்றியின்றி யென்—அன்றியின்றி என்கிற, வினையெஞ்சிகரம்—வினையெச்சக் குறிப்புச்சொற்களின் ஈற்றிலிருக்கின்ற இகரம், தொடர்பினுள்—செய்யுளில், உகரமாய்வரின்—உகரமாய்த்திரிந்துவரின், இயல்பு—வருகிற கசதபக்கள் இயல்பாகும். எ-று.

**உதாரணம் :** நாளன்று போகி, உப்பின்று புற்கையுண்கமா, எனவரும்.

174. உரிவரி னாழியி னீற்றுயிர் மெய்கெட
மருவும் டகர முரியின் வழியே
யகர வுயிர்மெயா மேற்பன வரினே.

**இது எய்தியது விலக்கிப் பிறிது விதி வருக்கின்றது.**

(இ-ள்) உரிவரின்—உரியென்னுமளவுப்பெயர் வந்தால், நாழியின்—நாழியென்னுமளவுப் பெயரினது, ஈற்றுயிர்மெய்—ஈற்றிலுள்ளழிகரமானது, கெட—நீங்க, டகரம்—டகரமெய்யானது, மருவும்—வரும், உரியின்வழி—உரியென்னுமளவுப் பெயரின் பின், யகரவுயிர்மெய்யாம்—யகரவுயிர்மெய்வரும், ஏற்பன—அவ்வுயிர்மெய்வருதற்கு ஏற்ற மொழிகள், வரின்—வந்தால். எ-று.

**உதாரணம்.** நாழி + உரி = நாடுரி எ-ம், உரி + உப்பு = உரியவுப்பு, உரியபயறு, உரிய மிளகு, உரியவரகு, எ-ம்வரும்.

ஏற்பன வரினெனவே ஏலாதன வரின், உரியரிசி எனப்பொதுவிதி பெறுதல் கொள்க. நாடுரி என்பது நாயுரி என இக்காலத்து மருவிற்று.

175. சுவைப்புளி முன்னின மென்மையுந் தோன்றும்.

**இது, எய்தியதன் மேற் சிறப்புவிதி யுணர்த்துகின்றது.**

(இ-ள்) சுவை—அறுசுவையுளொன்றை யுணர்த்துகின்ற, புளிமுன்—புளியென்னும் பெயர்முன், இனமென்மையும்—வருகிறவல்லெழுத்துக்கள் மிகுதலல்லாமல் அவற்றிற்கு இனமாகிய மெல்லெழுத்துகளும், தோன்றும்—ஒரோவிடத்து மிகும். எ—று.

**உதாரணம்.** புளிங்கறி, புளிஞ்சோறு, புளிந்தயிர், புளிம்பாளிதம் எனவரும். புளிப்பாகிய கறி எனவும் புளிப்பையுடைய கறி எனவும், விரிக்கப்படுதலால் இருவழிக்குமாம். உம்மையால் புளிக்கறி எனப் பொதுவிதி பெறுதலே சிறப்புடைத்தாகும்.

### இகர ஐகார வீற்றுச் சிறப்புவிதி.

176. அல்வழி இ ஐ ம் முன்ன ராயின்
இயல்பும் மிகலும் விகற்பமு மாகும்.

**இது, இகர ஐகார வீற்றஃறிணைப் பெயர்முன் வருகிற வல்லினத்திற்கு ஒருவழியெய்தியது விலக்கலும் எய்தியது இகந்துபடாமைக் காத்தலும், எய்தியது விலக்கலுடன் விலக்காமையும் உணர்த்துகின்றது.**

(இ-ள்) இஐம்முன்னர் — இகர ஐகாரவீற்றஃறிணைப் பெயர்முன், அல்வழி—அல்வழியினிடத்து, ஆயின்—வல்லினம் வருமாயின், இயல்பும்—இயல்பாதலும், மிகலும்—பொதுவிதியான் மிகுதலும், விகற்பமும்—ஒன்றற்கே ஒருகான் மிகாமையும் ஒருகான் மிகுதலும், ஆகும்—ஆகும். எ-று.

ஒப்பின் முடித்தலால் ஐகார வீறும் உடன் கூறினர்.

**உதாரணம்.** பருத்தி, ஒதி, யானை, குதிரை இவற்றின் முன் குறிது, சிறிது, தீது, பெரிது, இவற்றை வருவித்து பருத்திகுறிது என முறையே கூட்டி இயல்பாதல் காண்க.

கிளி + குறிது = கிளிக்குறிது, திணை + குறிது = திணைக்குறிது என விகற்பித்தன.

## ஈகார வீற்றுச் சிறப்பு விதி

177. *ஆமுன் பகரவீ யனைத்தும்வரக் குறுகும்*
*மேலன வல்வழி யியல்பா கும்மே.*

**இது, ஆமுன்நின்ற பகரவீகாரத்திற்கு எய்தாத தெய்துவித்தலும் எய்தியவழிவருகிற வல்லினத்திற்கு எய்தியதுகந்துபடாமைக் காத்த லும் சொல்லுகின்றது.**

*(இ-ள்) ஆமுன்பகரவீ—ஆமுன்நின்ற பகர வீகாரம், அனைத்தும்—நாற்கணமும், வர—வந்தால், குறுகும்—குறுகும், அல்வழி—அல்வழியில், மேலன—மேலைச் சூத்திரத்தினுட் கூறிய விதிமூன்றனுள், இயல்பாகும்—வருகிறவல்லினம் இயல்பைப்பெறும். எ-று.*

**உதாரணம்.** *ஆப்பியரிது, ஆப்பிகுளிரும், ஆப்பிநன்று, ஆப்பிவலிது எ-ம், ஆப்பியருமை, ஆப்பிக் குளிர்ச்சி, ஆப்பிநன்மை, ஆப்பிவன்மை எ-ம், வரும்.*

178. *பவ்வீ நீமீ முன்ன ரல்வழி*
*யியல்பாம் வலிமெலி மிகலுமாம் மீக்கே.*

**இது, பவ்வீ நீமீ என்கிற பெயர்களுக்கு முன் வருகிற வல்லினத் திற்கு ஒருவழி 'இயல்பினும்' என்னுஞ் சூத்திரத்தால் எய்தியது விலக் கலும், இவற்றினுள்ளே பவ்வீக்கு முன் வருகிற வல்லினத்திற்கு அச்சூத் திரத்தால் எய்தியதிகந்துபடாமைக்காத்தலும், எய்தியது விலக்கிப் பிறிது விதியும் உணர்த்துகின்றது.**

*(இ-ள்) பவ்வீ—பகரமெய்யின் மேலேறி நின்ற ஈகார வீற்றிடர்க்கப் பெயரும், நீ—நீ என்கிற முன்னிலைப்பெயரும், மீ—மீ என்கிற மேலாகிய பண்பையும் மேலிடத்தையும் உணர்த் தும் பெயருமாகிய, முன்னர்—இம்மூன்றன் முன்னும், அல் வழி—அல்வழியில், இயல்பாம்—வருகிற வல்லின மியல்பாகும், மீக்கு—இவற்றுள்ளே மீயென்னுஞ் சொல்லுக்கு, வலி—வல் லெழுத்து, மிகலுமாம் — மிகுதலுமாகும், மெலி — மெல் லெழுத்து, மிகலுமாம்—மிகுதலுமாகும். எ-று.*

**உதாரணம்.** *மீகுறிது, சிறிது, தீது, பெரிது எ-ம், நீ குறியை, சிறியை, தீயை, பெரியை எ-ம், மீகண் எ-ம், இயல்பாயின.*

*மீக்கூற்று என எய்தியதிகந்து படாமல் வலிமிகுந்தது. மீந்தோல் என மெலிமிகுந்தது. மீக்கூற்று — மேலாய சொல்*

லாற் பிறந்த புகழ், மீந்தோல்=மேலாயதோல், இது இக்காலத்துப் பீந்தோலென வழங்குகின்றது.

நீ என்னும் பொதுப்பெயர் அல்வழியிலே நீ யென்றும் வேற்றுமையிலே நின்னென்றும் நிற்கையினலே பொதுப் பெயருயர் திணைப்பெயரென்னுஞ் சூத்திரத்துளடங்க வில்லை.

### முற்றுகர வீற்றுச் சிறப்பு விதி.

179. மூன்ரு றுருபுபெண் வினைத்தொகை சுட்டீறு
ஆகு முகர முன்னர் இயல்பாம்.

**இது, முற்றுகர வீற்றுட் சிலவற்றின் முன் வருகிற வல்லினத்திற்கு "இயல்பினும் விதியினு" என்னுஞ் சூத்திரத்தால் எய்தியது விலக்குகின்றது.**

(இ-ள்) மூன்றுருபு—மூன்ரும் வேற்றுமை யுருபிற்கும், ஆறுருபு—ஆரும்வேற்றுமையுருபிற்கும், எண்—இயல்பாயும் விகாரமாயும் வருகிற எண்ணிற்கும், வினைத்தொகை—வினைத்தொகைக்கும், சுட்டு—சுட்டுப்பெயருக்கும், ஈருகும்—ஈருகிய, உகரமுன்னர்—முற்றியவுகரத்தின் முன்னே, இயல்பாம்—வருகிற வல்லினம் இயல்பாகும். எ—று.

**உதாரணம்.** சாத்தனெடு கொண்டான், சென்ருன், தந்தான், போயினன் எ-ம், சாத்தனதுகை, செவி, தலை, புறம், எ-ம், மூன்ருமுருபின்முன்னும் ஆருமுருபின்முன்னு மியல்பாயின.

ஒருகை, செவி, தலை, புறம், என எண்ணுப்பெயர்முன் இயல்பாயின.

இரு, அறு, ஏழு, எழு, இவற்ரேடும் அப்படியே கூட்டுக. அடுகளிறு, சேனை, தானை, படை, என வினைத்தொகை முன் இயல்பாயின.

தரு, புகு, தெறு, எழு, விரவு முதலியவற்ரேடு மொட்டுக. அது குறிது, சிறிது, தீது, பெரிது—எ-ம், அது கண்டான், செகுத்தான், தந்தான், படைத்தான் எ-ம், சுட்டுப் பெயர் முன்னிருவழியுமியல்பாயின.

இது உது என்பவற்ரேடுமிப்படியே யொட்டுக. உது காண்—உதுக்காண் என விகற்பித்து வருவது 'இயல்பின்

விகாரமுமென்னுஞ் சூத்திரத்தில் அன்னபிறவுமென்றதனு லமையும்.

180. *அதுமுன் வருமன் றூன்றூந் தூக்கின்*

**இது, அவென்பதற்கு முன்வரும் அன்றென்பதற்கு எய்தாததெய்துவிக்கின்றது.**

(இ-ள்) அதுமுன்—அதுவென்னுஞ் சுட்டுப்பெயர் முன், வரும்—வருகிற, அன்று—அன்றென்னும் வினைக்குறிப்பு முற்றானது, தூக்கின்—பாட்டினிடத்து, ஆன்றாம்—முதனீறாம் (எ-று.)

**உதாரணம்** அதான்று எனவரும், ஆன்றேயாமென வியல்பை விளக்காமையால் அதன்று, அதுவன்று எனவும் வரும்.

**குற்றுகரவீற்றுச் சிறப்புவிதி**

181 *வன்றொட ரல்லன முன்மிகா வல்வழி.*

**இது குற்றியலுகர வீற்றுட் சிலவற்றிற்கு 'இயல்பினும்' என்னுஞ் சூத்திரத்தால் எய்தியதொருவழி விலக்குகின்றது.**

(இ-ள்) வன்றொடரல்லனமுன்—வன்றொடரொழிந்த ஐந்து குற்றியலுகரவீற்றின் முன்னும், அல்வழி—அல்வழியில், மிகா—வருகின்ற வல்லினம் இயல்பாகும். (எ-று.)

**உதாரணம்** நாகுகடிது, வரகுதீது, எஃகுசிறிது, குரங்கு பெரிது, தெள்குகொடிது—எனவும், ஏகுகால், அஃகுபிணி, பொருதுசென்றான், அறிந்துதந்தான், எய்து கொன்றான்—எ-ம், அல்வழியில் இயல்பாயின.

182. *இடைத்தொட ராய்தத்தொட ரொற் றிடையின்*
*மிகாநெடி லுயிர்த்தொடர் முன்மிகா வேற்றுமை.*

**இதுவுமது:—**

(இ-ள்) இடைத்தொடர்முன்—இடைத்தொடர் முன்னும், ஆய்தத்தொடர்—ஆய்தத்தொடர் முன்னும், ஒற்றிடையின் மிகா நெடிற்றொடர்முன்—ஒற்றிடையே மிகாத நெடிற்றொடர் முன்னும், உயிர்த்தொடர்முன்—உயிர்த்தொடர் முன்னும், வேற்றுமை—வேற்றுமையில், மிகா—வருகிற வல்லினம் இயல்பாம் (எ-று.)

**உதாரணம்** தென்கின்கடுமை, எஃகின் கடுமை, நாகின் கடுமை, வரகின் கடுமை, சிறுமை, தீமை, பெருமை, என வல்லெழுத்து மிகாது 'இதற்கிது சாரியை' யென்னுஞ் சூத்திரத்தால் இன்சாரியை பெற்றுவந்தது. வரகுகதிர்எனச் சாரியைபெறாது வருதலுங் கொள்க.

183. நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுள்
டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே.

**இது, மேலே நிலைமொழிக்கோர் புறனடையாக எய்தாத தெய்துவித்தலும்' உயிர் வந்தபோது, அந்நிலைமொழிக்கு 'உயிர் வரினுக் குறளெ'ன்னுஞ் சூத்திரத்தால் எய்தியதன்மேற் சிறப்பு விதியும் உணர்த்துகிறது.**

(இ-ள்) நெடிற்றொடர்—நெடிற்றொடர்களும், உயிர்த் தொடர்—உயிர்த்தொடர்களுமாகிய, குற்றுகரங்களுள்—குற்றியலுகர மொழிகளுள், டறவொற்று—அவ்வுகரம் மேறி நின்ற டகர றகர மெய்கள், வேற்றுமை—வேற்றுமையில் மிக—பெரும்பாலும், இரட்டும்—இரட்டும். (எ-று.)

வருமெழுத்தைச் சொல்லாமையால் நாற்கணமுங் கொள்க.

**உதாரணம்** ஆடு + கால்=ஆட்டுக்கால்
பாறு+ கால்=பாற்றுக்கால்
முருடு+ கால்=முரட்டுக்கால்
முயிறு+கால்=முயிற்றுக்கால் எனவரும்.

செவி, தலை, புறம், நூற்சி, நிறம், மயிர், யாப்பு, வலிமை அடி என்பவற்றை யொட்டிக் காண்க.

இவ்விரண்டொற்றும் வேற்றுமையிலிரட்டுமெனவே காவிரிபுரக்கு நாடு கிழவோனே எனச் சிறுபான்மை வேற்றுமையிலிரட்டாமையும், காடு + அரசன் = காட்டரசன், களிறு+யானை=களிற்றியானை எனச் சிறுபான்மை அல்வழியிலிரட்டுதலும், வெருகு+கண்=வெருகுக்கண் என வேற்றுமையிலும், எருது+மாடு=எருத்துமாடு என அல்வழியிலுஞ் சிறுபான்மை பிறவொற்றிரட்டலுங் கொள்க.

184. மென்றொடர் மொழியுட் சிலவேற் றுமையிற்
றம்மின வன்றொட ராகா மன்னே.

**இது மென்றொடர்க் குற்றியலுகரங்களுட் சில நிலைமொழிக்கு மூவினமும் வரின் எய்தாத தெய்துவித்தலும் உயிர்வரின் எய்தியதன்மேற் சிறப்பு விதியுமுணர்த்துகின்றது.**

(இ-ள்) மென்றொடர் மொழியுள்—மென்றொடர்க் குற்றியலுகர மொழிகளுள், சில — சிலமொழிகள், வேற்றுமையில்—வேற்றுமைக்கண், தம்மினம்—தமக்கினமாகிய, வன்றொடர்—வன்றொடர்க்குற்றியலுகர மொழிகளாக—ஆகா—ஆதலை யொழிந்தன, மன்—பெரும்பாலன. எ-று.

வருமெழுத்தைச் சொல்லாமையால் நாற்கணமுங்கொள்க.

**உதாரணம்.** மருந்து + பை = மருந்துப்பை, கரும்பு+வில்= கரும்புவில், கன்று+ஆ=கற்ரு, எனவரும்.

சிலவாமெனவே ஆகாதன பலவென்பதும், மன்னே யென்ற மிகையால், அன்பு+தளை=அற்புத்தளை எனச், சிறுபான்மை அல்வழிக்கண் வன்றொடராதலுங் கொள்க.

185. ஐயீற் றுடைக்குற் றுகரமு முளவே.

**இது முன் சொன்ன நிலைமொழிக்கு எய்தாத தெய்துவித்தலும் எய்தியதன்மேற் சிறப்புவிதியும் உணர்த்துகின்றது:**

(இ-ள்) ஐ—ஐகாரச்சாரியையை, ஈற்றுடை—இறுதியிலே பெற்றுவருகிற, குற்றுகரமும் — மென்றொடர்க்குற்றியலுகர மொழிகளும், உள—சில உண்டு. எ-று.

வருமெழுத்தைச் சொல்லாமையால் நாற்கணமுங் கொள்க.

**உதாரணம்.** பண்டு + காலம் = பண்டைக்காலம், இன்று+ நாள்=இற்றைநாள் எ-ம், அன்று+கூலி=அற்றைக்கூலி, இன்று+நலம்=இற்றைநலம் எ-ம், இருவழியினும் வரும்.

மேலைச் சூத்திரத்தைச் சாரவைத்தலால் மென்றொடரென்னுமாயினும் குற்றுகர மெனப் பொதுப்படச் சொன்னமையால், நேற்று+பொழுது=நேற்றைப்பொழுது என, வன்றொடர் ஐகாரச்சாரியை பெறுதலும், ஐயீற்றுடைக்குற்றுகரமும் என உடைமையாக்கிக் கூறினமையால் ஒற்றை வேட்டை, ஈராட்டை என வருமொழி நோக்காது அ சாரியை பெறுதலுங் கொள்க.

186. திசையொடு திசையும் பிறவுஞ் சேரின்
நிலையீற் றுயிர்மெய் கவ்வொற்று நீங்கலும்
றகரம் னலவாத் திரிதலு மாம்பிற.

**இது குற்றியலுகரவீற்றுத் திசைப்பெயர்களுக்கு எய்தாத தெய்துவிக்கின்றது.**

(இ-ள்) திசையொடு — திசைச்சொல்லோடு, திசையும்— திசைச்சொல்லும், பிறவும்—பிறசொல்லும், சேரின்—புணரு மிடத்து, நிலையீற்று—நிலைமொழியீற்றிலே நின்ற, உயிர் மெய்—உயிர்மெய்யும், கவ்வொற்று—அதன் பின்னின்ற ககரமெய்யும், நீங்கலும்—கெடுதலும், றகரம்—அவ்விடத்து நின்ற றகரமெய், னலவா—னகரமெய்யாகவும் லகரமெய்யா கவும், திரிதலும்—திரிதலும், ஆம்—ஆகும். எ-று.

**உதாரணம்.** வடக்கு+கிழக்கு=வடகிழக்கு
மேற்கு, திசை, மலை, வேங்கடம்
என உயிர்மெய்யுங் ககரமெய்யுங் கெட்டன.

குடக்கு+திசை = குடதிசை, குணக்கு+கடல் = குண கடல், இவையுமப்படியே. தெற்கு+கிழக்கு=தென்கிழக்கு, தென்மேற்கு தென்மலை என உயிர்மெய்கெட, றகரமெய் னகரமெய்யாயிற்று.

மேற்கு+பால்=மேல்பால், மேற்கு+நாடு=மேனாடு என, உயிர்மெய்கெட னகரமெய் லகர மெய்யாயிற்று.

பிறவென்றதனால், மேற்கு+சேரி=மேல்சேரி, மேற்சேரி, மேலைச்சேரி; கிழக்கு+திசை=கீழ்திசை, கீழ்த்திசை, கீழைத் திசை எனவும், கீழ்மேற்றென்வடல் எனவும், விகாரப்பட்டும், சிறுபான்மை கிழக்கு, மேற்கு, தெற்கு, வடக்கு, வடக்கூர்— தெற்குமலை—என இவ்விகாரமில்லாமலும் வரும்.

187. தெங்குநீண் டீற்றுயிர் மெய்கெடுங் காய்வரின்.

இது தெங்கு என்னும் பெயர்க்கு எய்தாததெய்துவிக்கின்றது.

(இ-ள்) காய் — காயென்னுஞ்சொல், வரின் — வந்தால், தெங்கு—தெங்கென்னு நிலைமொழி, நீண்டு—முதனீண்டு, ஈற் றுயிர்மெய்—ஈற்றிலுள்ள உயிர்மெய், கெடும்—நீங்கும். எ-று.

**உதாரணம்.** தெங்கு+காய்=தேங்காய், எனவரும்.
கெட்டே வருமென்னுமையால் தெங்கங்காய் என வருவதுங் கொள்க.

188 எண்ணிறை யளவும் பிறவு மெய்தின்
ஒன்று முதலெட் டீறா மெண்ணுள்
முதலீ ரெண்முதல் நீளும் மூன்றா று
ஏழ்குறு கும்மா றேழல் வவற்றின்
ஈற்றுயிர் மெய்யு மேழ னுயிரும்
ஏகு மேற்புழி யென்மனார் புலவர்.

**இது ஒன்று முதலெட்டீரு மெண்ணுப்பெயர்களுக்கு உயிர்வரின் எய்தியதன்மேற் சிறப்பு விதியும், மெய்வரின் எய்தாத தெய்து வித்த லுஞ் சொல்லுகின்றது.**

(இ-ள்) எண்—எண்ணுப்பெயரும், நிறை—நிறைப்பெய ரும், அளவு—அளவுப்பெயரும், பிறவும்—பிறபெயர்களும், எய்தின்—வந்தால், ஒன்றுமுதல்—ஒன்றுமுதல், எட்டீரும்— எட்டீருகும், எண்ணுள்—எண்களுள், முதலீரெண்—முதலி லுள்ள இரண்டெண்களும், முதனீளும்—முதற்குறினீளும், மூன்றூறேழ்—மூன்றும் ஆறும் ஏழும், முதல் குறுகும்—முத னெடில் குறுகும், ஆறேழல்லவற்றின்—ஆறு மேழுமல்லாத ஆறெண்களினுடைய, ஈற்றுயிர் மெய்யும்—இறுதியிலுள்ள உயிர்மெய்களும், ஏழன்—ஏழனுடைய, ஈற்றுயிரும்—இறுதி யிலுள்ள உயிரும், ஏகும்—கெடும், ஏற்புழி—ஏற்குமிடங்களில், என்மனர்—என்று சொல்லுவர், புலவர்—புலவர். எ—று.

இவ்விகாரம் பண்புத்தொகைக்கே யுரியவாகும். ஏழு, என்பது முற்றியலுகர வீறாயினும் ஒன்றின முடித்தறன்னின முடித்தலென்பதனுல் இங்கே சொல்லப்பட்டது.

**உதாரணம்.** ஆறு+பத்து=அறுபது
ஆறு கழஞ்சு=அறுகழஞ்சு
ஆறு+நாழி=அறுநாழி
ஆறு+மீன் அறுமீன்
ஏழு+பத்து எழுபது
ஏழு+கழஞ்சு=எழுகழஞ்சு
ஏழு+நாழி=எழுநாழி
ஏழு+மீன்=எழுமீன்
என ஆறு மேழுங் குறுகின.
ஏழு+கடல்=ஏழ்கடல்

என ஏழனீற்றுயிர் கெட்டது. மற்றவைகளுக்கு உதாரணம் பின்னே காட்டப்படும். ஏற்புழி என்றதனுல் பொது விதியால் இரண்டாயிரம், ஏழாயிரம், இரண்டு கழஞ்சு, மூன்றுபடி, நான்குபொருள், ஏழுகடல், என நிற்பனவும் உண்டென்று கொள்க.

189. ஒன்றன் புள்ளி ரகர மாக
இரண்ட னொற்றுயி ரேகவுவ் வருமே.

**இதுவுமது:—**

(இ-ள்) ஒன்றன்—ஈற்றுயிர்மெய் கெட நின்ற வொன் றென்னு மெண்ணினது, புள்ளி—னகரமெய்யானது, ரகர மாக—ரகரமெய்யாக, இரண்டன்—இரண்டனுடைய, ஒற்று—ணகரமெய்யும், உயிர்—அகரவுயிரும், ஏக—கெட, உவ்வரும்—அவ்விரண்டு ரகர மெய் மேலும் உகரம் வரும். எ-று.

**உதாரணம்.** ஒன்று + ஆயிரம் = ஓராயிரம்
இரண்டு + ஆயிரம் = ஈராயிரம்.

என உயிர்வர முதனீண்டு ஈற்றுயிர்மெய் கெட்டு உகரம் பெற்று "முற்று மற்றொரோவழி," என்பதனல் அவ்வுகரமுங் கெட்டு வந்தன. ஒன்று+பத்து=ஒருபது, இரண்டு+பத்து = இருபது என மெய்வர முதனீளாது ஈற்றுயிர்மெய் கெட்டு உகரம் பெற்றுவந்தன.

இங்கே சொல்லியபடி மற்றைத் திரிவு முதலானவை வருதலுங் காண்க. சிறுபான்மை ஒராயிரம், இராயிரம் என வருதலு முண்டு.

190. மூன்றனுறுப் பழிவும் வந்தது மாகும்.

**இதுவுமது:—**

(இ-ள்) மூன்றன்—இறுதி உயிர்மெய்கெட நின்ற மூன் றென்னு மெண்ணினது, உறுப்பு—மெய்யானது, அழிவும்—கெடுதலும், வந்ததும்—வருகிற மெய்யாகத்திரிதலும், ஆகும்—ஆகும், எ-று.

**உதாரணம்.** மூன்று + ஒன்று = மூவொன்று,

என உயிர்வர, முதல்குறுகாது ஈற்றெழுத்தும் னகர மெய்யும் கெட்டன. மூன்று+பத்து=முப்பது எனமெய்வர ஈறுகெட்டு னகரமெய்வந்த மெய்யாய்த்திரிந்தது. மற்றவை களுமிப்படியே.

191. நான்கன் மெய்யே லறவா கும்மே.

**இதுவுமது:—**

(இ-ள்) நான்கன்—இறுதி உயிர் மெய் கெட நின்ற நான்கென்னு மெண்ணினது, மெய்—னகர மெய், லறவாகும்—லகர மெய்யாகவும் றகர மெய்யாகவும் திரியும். எ-று.

**உதாரணம்.** நான்கு + ஆயிரம் = நாலாயிரம்
நான்கு + வழி = நால்வழி

என உயிரும் இடையெழுத்தும் வர ஈற்றுயிர் மெய் கெட்டு னகர மெய் லகர மெய்யாயிற்று.

நான்கு + மணி = நான்மணி

என லகர மெய்யோடு மயங்காத மெல்லெழுத்து வரின் னகர மெய் இயல்பா மென்க.

நான்கு + பத்து = நாற்பது

என வல்லெழுத்து வர ஈற்றுயிர் மெய் கெட்டு னகர மெய் றகர மெய்யாயிற்று. மற்றவைகளுமிப்படியே.

192. ஐந்தனொற் றடைவது மினமுங் கேடும்.

**இதுவுமது:—**

(இ–ள்) ஐந்தன்—இறுதி யுயிர்மெய் கெட நின்ற ஐந் தென்னு மெண்ணினது, ஒற்று—நகர மெய்யானது, அடைவதும்—வருகிற மெய்யாகியும், இனமும்—அதற்கினமாகியும், கேடும்—கெட்டும் வரும். எ–று.

**உதாரணம்.** ஐந்து + மூன்று = ஐம்மூன்று என மெல் லெழுத்து வர ஈற்றுயிர் மெய் கெட்டு நகரமெய் வந்த மெய்யாய்த் திரிந்தது.

ஐந்து + கழஞ்சு = ஐங்கழஞ்சு

என வல்லெழுத்து வர ஈற்றுயிர் மெய் கெட்டு நகர மெய் வந்த வெழுத்திற்கு இனமாய்த் திரிந்தது.

ஐந்து + ஆயிரம் = ஐயாயிரம்
ஐந்து + வழி = ஐவழி

என உயிரும் இடை யெழுத்தும் வர, ஈற்றுயிர் மெய் யுடன் நகர மெய்யுங் கெட்டது. மற்றவைக்கு மிப்படியே.

ஒரோ விடத்து ஐவ்வண்ணம் என வரும். அடைவது மினமு மென்றமையால் அருத்தாபத்தியால் ஐந்நூறு, ஐந் நூணி என நகரமெய் இயல்பாதல் கொள்க.

193. எட்ட னுடம்புணவ் வாகு மென்ப.

**இதுவுமது:—**

(இ-ள்.) எட்டன்—இறுதி யுயிர்மெய்கெட நின்ற எட் டென்னு மெண்ணினது, உடம்பு—டகர மெய்யானது, ணவ் வாகும்—ணகர மெய்யாகும், என்ப—என்று சொல்லுவர் புலவர். எ-று.

**உதாரணம்.** எட்டு + ஆயிரம் = எண்ணாயிரம்

என ஈற்றுயிர்மெய் கெட்டு டகரமெய் ணகர மெய்யாயிற்று. மற்றவைகளுமிப்படியே.

194. ஒன்பா னொடுபத்து நூறு மொன்றின்
முன்னதி னேனைய முரணி யொவ்வொடு
தகர நிறீஇப்பஃ தகற்றி னவ்வை
நிரலே ணளவாத் திரிப்பது நெறியே.

**இது ஒன்பதிற்கு எய்தாத தெய்துவித்தலும் அதனோடு புணரும் பத்திற்கும் நூற்றிற்கும், 'இயல்பினு' மென்பதனாலும், எண் முவெழுத் தென்பதனாலும் எய்தியது விலக்கிப் பிறிது விதியும் உணர்த்துகின்றது.**

(இ-ள்.) ஒன்பானொடு—ஒன்பஃதுடனே, பத்தும்—பத் தென்பதும், நூறும்—நூறென்பதும், ஒன்றின்—வந்து புண ருமாயின், முன்னதின்—முன்னதாகிய நிலைமொழியினின் றும், ஏனைய—மற்றை வருமொழிகளாகிய பத்தையும் நூற் றையும், முரணி—முறையே நூறெனவும், ஆயிரமெனவுந் திரித்து, ஒவ்வொடு—நிலை மொழி முதலிலுள்ள ஒகர வுயி ரோடு, தகரம்— தகர மெய்யை, நிறீஇ—அதற்கு ஆதாரமாக நிறுத்தி, பஃது—அந்நிலைமொழி யிறுதியிலுள்ள பஃதை, அகற்றி—கெடுத்து, னவ்வை—அம்மொழிமுதற் கயனின்ற னகர மெய்யை, நிரலே—முறையே, ணளவா—ணகர மெய் யாகவும், ளகர மெய்யாகவும், திரிப்பது—திரிப்பது, நெறி— முறையாகும். எ-று.

நெறியே யென்ற விலேசானே தனிக்குறின்முன் னொற் றிரட்டித்தலுங் கொள்க.

**உதாரணம்.** ஒன்பஃது + பத்து = தொண்ணூறு
ஒன்பஃது + நூறு = தொள்ளாயிரம்

எனவரும். தொள்ளாயிரமென விக்காலத்தில் வழங்கு கின்றது.

பஃதகற்றி யென்பதனோடு பொருந்த, ஒன்பஃதனோ டென்னது, ஒன்பானோடென்றமையால்,ஒன்பது நின்று புண ரினு மிவ்விதியே பெறுமென்றறிக.

195. முதலிரு நான்கா மெண்முனர்ப் பத்தின்
இடையொற் றேக லாய்த மாக
லெனவிரு விதியு மேற்கு மென்ப.

**இது ஒன்றுமுத லெட்டெண்களின் முன் வருகிற பத்தென்னு மெண்ணிற்கு 'இயல்பினும்' என்பதனுல் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.**

(இ-ள்). முதல்—ஒன்று முதலாகிய, இரு நான்காமெண் முன்னர்—எட்டெண்களின் முன்னும் வருகிற, பத்தின்—பத்

தென்னு மெண்ணினது, இடை—நடு நின்ற, ஒற்று—தகர மெய்யானது, ஏகல்—கெடுதலும், ஆய்தமாகல்—தகர நின்ற விடத்து அது கெட ஆய்தம் வருதலும், என விருவிதியும்— என்னு மிவ்விரண்டு விதியையும், ஏற்கும்—ஏற்கும், என்ப— என்று சொல்லுவர் புலவர். எ—று.

ஒன்று+பத்து = ஒருபது, ஒருபஃது
இரண்டு+பத்து = இருபது, இருபஃது

என வரும். மற்றவைகளுமிப்படியே.

196. ஒருபஃ தாதிமுன் னென்றுமுத லொன்பான்
எண்ணு மவையூர் பிறவு மெய்யின்
ஆய்த மழியவாண் டாகுந் தவ்வே.

**இது மேலைச் சூத்திரத்தாலே எய்திய ஒருபஃது முதலாகிய நிலை மொழிகளுக்கு உயிர் வரின், 'உயிர் வரினுக்குறள்', என்பதனால் எய்திய தன்மேற் சிறப்பு விதியும், மெய் வரின் எய்தாத தெய்துவித்தலுஞ் சொல்லுகின்றது.**

(இ—ள்). ஒருபஃதாதி முன்—ஒரு பஃது முதலாகிய எட் டெண்களின் முன், ஒன்று முதல்—ஒன்று முதலாகிய, ஒன்பா னெண்ணும்—ஒன்பதெண்களும், அவை—அவ் வெண்களை, ஊர்—ஊர்ந்த, பிறவும்—மற்றவையும், எய்தின்—வந்து புணரு மாயின்; ஆய்தம்—நிலைமொழி யிடையிலே நின்ற வாய்த மானது; அழிய—கெட, த—இயல்பாகிய தகரம், ஆண்டு—அவ் வாய்தம் நின்ற விடத்து, ஆகும்—வரும். எ-று.

**உதாரணம்.** ஒரு பஃது+ஒன்று = ஒரு பத்தொன்று
இரு பஃது+மூன்றரை = இருபத்துமூன்றரை

என வரும். மற்றவைகளுமிப்படியே.

ஆய்தங் கெடத் தகரம் வருமென்றமையால் அருத்தா பத்தியால் ஆய்தமில்லாத ஒருபது முதலானவைகளும் தகரம் பெறு மென்றதாயிற்று.

197. ஒன்றுமுத லீரைந் தாயிரங் கோடி
எண்ணிறை யளவும் பிறவரிற் பத்தின்
ஈற்றுயிர் மெய்கெடுத் தின்னு மிற்றும்
ஏற்ப தேற்கு மொன்பது மினைத்தே.

**இது பத்தென்னு நிலைமொழிக்கு உயிர்வரின் 'உயிர்வரி னுக்குறள்' என்பதனால் எய்தியது விலக்கிப் பிறிது விதியும், மெய் வரின் எய்தாத தெய்துவித்தலும், ஒன்பது என்னு நிலைமொழிக்கு உயிர்வரின் அச்சூத் திரத்தால் எய்தியதன்மேற் சிறப்பு விதியும், மெய்வரின் எய்தாத தெய்துவித்தலும் உணர்த்துகின்றது.**

(இ-ள்). ஒன்று முத லீரைந்து—ஒன்று முதலாகிய பத்தெண்களும், ஆயிரம்—ஆயிரமும், கோடி—கோடியுமாகிய, எண்—எண்ணுப்பெயரும், நிறை—நிறைப்பெயரும், அளவும்—அளவுப்பெயரும் பிற—பிறபெயரும், வரின்—வந்து புணருமாயின், பத்தின்—நிலைமொழியாகிய பத்தினது, ஈற்றுயிர் மெய்—இறுதியிலுள்ள தகர வுயிர்மெய்யை, கெடுத்து—அழித்து, இன்னும்—இன்சாரியையாயினும், இற்றும்—இற்றுச் சாரியையாயினும், ஏற்பது—அவ்விடத்திற் கேற்பது, ஏற்கும்—ஏற்று நிற்கும், ஒன்பதும்—ஒன்பதென்னும் நிலைமொழியும், இனைத்து—இப்படியே எண்ணுப் பெயர் முதலானவை வந்து புணருமாயின் இன்னாயினும், இற்றாயினும் அவ்விடத்திற்கு ஏற்பது ஏற்று நிற்கப் பெறும்.

**உதாரணம்.** பத்து+ஒன்று = பதினொன்று, பதிற்றொன்று
ஒன்பது+ஆயிரம் = ஒன்பதினாயிரம், ஒன்பதிற்றாயிரம்

என வரும். மற்றவைகளுமிப்படியே.

பதினொன்று உம்மைத் தொகை. பதிற்றொன்று பண்புத்தொகை.

ஏற்ப தேற்கு மென்றதனாற் பத்துக்கோடி, ஒன்பது கோடி எனப் பொது விதிப்படியே முடிந்து நிற்றலுங் கொள்க.

198. இரண்டு முன்வரின் பத்தினீற் றுயிர்மெய்
கரந்திட வொற்று னவ்வாகு மென்ப.

**இதுவுமது:—**

பத்தென்னு நிலைமொழிக்கு 'உயிர் வரின் உக்குறள்' என்பதனால் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்குகின்றது.

(இ-ள்.) இரண்டு—இரண்டென்பது, முன்வரின்—முன் வருமாயின், பத்தின்—பத்தென்னு நிலைமொழியினது ஈற்றுயிர்மெய்—ஈற்றிலுள்ள தகர உயிர்மெய்யானது, கரந்திட—கெட, ஒற்று—தகரமெய், னவ்வாகும்—னகர மெய்யாகத் திரியும், என்ப—என்று சொல்லுவர் புலவர்.

**(உதாரணம்)** பத்து+இரண்டு = பன்னிரண்டு என வரும்.

199. ஒன்ப தொழித்தவெண் ணொன்பது மிரட்டின்
முன்னதின் முன்னல வோட வுயிர்வரின்
வவ்வு மெய்வரின் வந்தது மிகல்நெறி.

**இது ஒன்பதை நீக்கிய ஒன்பதெண்களாய் நிலைமொழிகளுள் 'மூன்று நேழற்கு மூன்றுநேழ் குறுகும்' என எய்தியதன்மேற் சிறப்பு விதியும், உயிர் வரின் எல்லாவற்றிற்கும் எய்தியது விலக்கிப் பிறிது விதியும், மெய்வரின் எய்தாததெய்து வித்தலுஞ் சொல்லுகின்றது.**

(இ-ள்.) ஒன்பது—ஒன்பதென்கிற எண்ணொன்றனை யும், ஒழித்த—ஒழித்து நின்ற, எண்ணொன்பதும்—ஒன்று முதற் பத்திறுகிய ஒன்பதெண்ணினையும், இரட்டின்—இரட்டித்துச் சொன்னால், முன்னதின்—நிலைமொழியினது, முன்னல—முதலெழுத்தல்லாதவைகள் எல்லாம், ஓட—கெட, உயிர் வரின்-உயிர் முதலான வெண் வரின், வவ்வும்-வகர மெய்யும், மெய் வரின்—மெய்முதலான வெண் வரின், வந்ததும்—வந்த மெய்யும், மிகல்—மிகுதல், நெறி—முறையாம். எ-று.

**உதாரணம்:** ஒன்று+ஒன்று = ஒவ்வொன்று
இரண்டு+இரண்டு = இவ்விரண்டு
நான்கு+நான்கு = நந்நான்கு
பத்து+பத்து = பப்பத்து

எனவரும். நெறியென்றமையால் நநான்கு என நான்கிற்குக் குறுக்கமும், ஒரோவொன்று, ஒன்றொன்று, கழக் கழஞ்சு, என விரட்டித்தலும், இன்னும் குற்றியலுகரப் புணர்ச்சியுள் அடங்காதனவுங் கொள்க.

**[ஊகார வீற்றுச் சிறப்பு விதி]**

**200.** பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன்றும்.

**இது பூ வென்கிற ஊகார வீற்றுச் சொன்முன் வருகிற வல்லினத்திற்கு 'இயல்பினும்' என்பதனால் எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துகின்றது.**

(இ-ள்.) பூப்பெயர் முன்—பூவென்னும் பல பொருளொருசொன்முன், இனமென்மையும்—வருகிற வல்லினம் மிகுதலல்லாமல் அவற்றிற்கினமாகிய மெல்லினமும், தோன்றும்—மிகும்.

**உதாரணம்:** பூங்கொடி, பூஞ்சோலை, பூந்தடம், பூம்பணை.

எனவரும். மலராயின் இரண்டாம் வேற்றுமைத் தொகையும், அழகாயிற் பண்புத் தொகையுமாம்.

**[ஏகார ஓகார வீற்றுச் சிறப்பு விதி]**

**201.** இடைச்சொல் லேயோ முன்வரின் இயல்பே.

இது ஏகார ஓகார விடைச் சொற்களின் முன் வருகிற வல்லினத்திற்கு 'இயல்பினும்' என்பதனுல் எய்தியது விலக்குகின்றது.

(இ–ள்). இடைச்சொல்—இடைச்சொல்லாகிய,ஏ முன்—ஆறேகாரத்தின் முன்னும், ஓ முன் — எட்டோகாரத்தின் முன்னும், வரின்—வல்லினம் வந்தால், இயல்பு — பொதுவிதியான் மிகாது இயல்பாகும்.

உதாரணம்: அவனே கொண்டான். இது பிரிநிலையும், வினவும், ஈற்றசையும், தேற்றமுமாம்.
அறமே, பொருளே, காமமே, துறவே—எண்.
ஏயெனவென் றோரிருடி வினவ—இசைநிறை.
அவனோ கொண்டான்—என்பது ஒழியிசை,
முதலியன வெட்டுமாம்.

[ஐகார வீற்றுச் சிறப்பு விதி]

202. வேற்றுமை யாயி னைகா னிறுமொழி
ஈற்றழி வோடுமம் மேற்பவு முளவே.

இது ஐயீற்று நிலைமொழிக்கு எய்தாததெய்துவிக்கின்றது.

(இ–ள்.) ஐகானிறு மொழி—ஐகார வீற்றுச் சொற்கள் வேற்றுமையாயின்—வேற்றுமைக் கண் வருமாயின், ஈற்றழிவோடும் — ஈற்றைகாரங்கெடுதலுடனே, அம் — அம்முச் சாரியை, ஏற்பவும்—பெற்று முடிவனவும், உள—சில வுள.

அழிவோடு மென்றமையால் அழியாமையோடும் அம் ஏற்பவுமுளவெனக் கொள்க. வருமெழுத்தைச் சொல்லாமையால் நாற்கணமுங் கொள்க.

உதாரணம் புன்னை + கானல் = புன்னையங் கானல்
முல்லை + புறவம் = முல்லையம் புறவம்
வழுதுணை + காய் = வழுதுணங்காய்
ஆவிரை + வேர் - ஆவிரம்வேர்

என வரும். ஏற்பவுமுளவென்றதனுல், முல்லைப் புறவு என வரினுங் கொள்க.

203. பனைமுன் கொடிவரின் மிகலும் வலிவரின்
ஐபோ யம்முந் திரள்வரி னுறழ்வும்
அட்டுறி னைகெட்டந் நீள்வுமாம் வேற்றுமை.

இது பனையென்கிற நிலைமொழிக்கும், அதனோடு புணருஞ் சில வருமொழிக்கும் 'இயல்பினும்' என்பதனுலும், மேலைச் சூத்திரத்தாலும்

எய்தியவற்றை யிகந்திபடாமைக் காத்தலும், 'இசைவழி' யென்பதனால் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுத்தலுஞ் சொல்லுகின்றது.

(இ-ள்.) *பனைமுன்—பனை யென்னும் பெயர் முன், கொடி வரின்—கொடி யென்னும் பெயர் வருமாயின், மிகலும்—வந்தது மிகுதலும், வலிவரின்—கசதபக்கள் வருமாயின், ஐபோய்—நிலைமொழி யீற்றைகாரங் கெட்டு, அம்மும்—அம்முப் பெறுதலும், திரள் வரின்—திரளென்னும் பெயர் வருமாயின், உறழ்வும்—வந்தது மிகுதலும், ஐபோய் அம்முப்பெற்றும் விகற்பித்தலும், அட்டுறின்—அட்டென்னும் பெயர் வருமாயின், ஐ கெட்டு—ஐகாரங் கெட்டு, அந்நீள்வும்—வருமொழி அகரம் ஆகாரமாதலும், ஆம்—ஆகும், வேற்றுமை—வேற்றுமைக் கண்.*

**உதாரணம்:** *பனைக்கொடி, எ—ம், பனங்காய், செருப்பு, தூண், பழம், எ—ம், பனைத்திரள், பனந்திரள், எ—ம், பனாட்டு எ—ம், வரும்.*

**உயிரீற்றுப் புணரியல் முற்றுப் பெற்றது.**

---

## 4. மெய்யீற்றுப் புணரியல்

[மெய்யீற்றின் முன் உயிர்]

204. *உடல்மேல் உயிர்வந் தொன்றுவ தியல்பே.*

இது, மெய்யீற்றுப் பதம் புணருஞ் சிறப்புப் புணர்ச்சி இவ்வியலாற் கூறப்படுதலின் மெய்யீற்று முன் உயிர் முதல் வந்து புணருமாறு உணர்த்துகின்றது.

(இ-ள்.) *உடன் மேல்—நிலைமொழி யீற்றினின்ற மெய்யின் மேல், உயிர்—வருமொழி முதலுயிர், வந்து—வந்து, ஒன்றுவது—ஒன்று பட்டிணங்கி நிற்பது, இயல்பே—இயல்பு புணர்ச்சியேயாம்.*

**உதாரணம்** *தோன்றல்+அழகன்=தோன்றலழகன்*
*உரிஞ்+அழகிது=உரிஞழகிது*
*புகழ்+அழகிது=புகழழகிது எ-ம்,*
*வேல்+எறிந்தான்=வேலெறிந்தான் எ-ம், வரும்.*
*மற்றவைகளுமிப்படியே.*

205. *தனிக்குறில் முன்னொற் றுயிர்வரி னிரட்டும்.*

இது எய்தியதன்மேற் சிறப்பு விதி உணர்த்துகின்றது.

(இ-ள்.) தனிக் குறின் முன்—தனிக் குற்றெழுத்தின் முன்னின்ற, ஒற்று—மெய்யானது, உயிர்—உயிரானது, வரின்—வந்தால், இரட்டும்—இரட்டித்து நிற்கும்.

**உதாரணம்** மண் + அரிது = மண்ணரிது
பொன் + அரிது = பொன்னரிது எ-ம்,
மண் + அகம் = மண்ணகம்
பொன் + ஒளி = பொன்னொளி எ-ம்,
வரும். மற்றவைகளுமிப்படியே.

**[மெய்யீற்றின் முன் மெய்]**

206. தன்னொழி மெய்முன் யவ்வரி னிகரம்
துன்னு மென்று துணிநரு முளரே.

**இது யகரமொழிந்த பத்து மெய்களின்முன் வருகிற யகரத்திற்கு 'எண் மூவெழுத் தென்பதனல், எய்தியதன்மேற் சிறப்பு விதி உணர்த்துகின்றது.**

(இ-ள்.) தன்னொழி—தன்னை யொழிந்த, மெய்முன்—ஞணநமன ரலவழள என்கிற பத்து மெய்களின் முன்னும், ய—யகரமானது, வரின்—வந்தால், இகரம்—இகரச் சாரியையை, துன்னுமென்று—தன் முன் பொருந்துமென்று, துணிநரும்—அரிதிற் கொள்வாரும், உளர்—சிலருளர்.

**உதாரணம்.** வேளியாவன், மண்ணியாது, என வரும்.
மற்றவைகளுமிப்படியே.

துணிநரு மென்ற எதிர்மறையாய இழிவுச் சிறப்பும்மையால், வேள்யாவன், மண் யாது என பொது விதி பெறு மென்பார் பலருளரெனக் கொள்க.

207. ஞணநம லவளன வொற்றிறு தொழிற்பெயர்
ஏவல் வினைநனி யவ்வல் மெய்வரி
னுவ்வுறு மேவ லுறாசில சில்வழி.

**இது முதனிலைத் தொழிற்கும் ஏவற்கும் பொதுவாகிய சிலநிலைமொழிகளுக்கு எய்தாததெய்துவிக்கின்றது.**

(இ-ள்.) ஞணநம லவளன—ஞணநமலவளன என்கிற, ஒற்று—எட்டு மெய்களும், இறு—இறுதியாகிய, தொழிற்பெயர்—முதனிலைத் தொழிற் பெயர்களும், ஏவல் வினை—ஏவல் வினைகளும், யவ்வல் மெய்—யகர மொழிந்த மெய்கள், வரின்—வருமாயின், நனி—பெரும்பாலும், உ—உகரச் சாரி

யையை, உறும்—இறுதிக்கட்பொருந்தும், சில ஏவல்—சில ஏவல் வினைகள், சில் வழி—சில விடங்களிலே.

அவ் வுகரச் சாரியையைப் பொருந்தாவாம்.

**உதாரணம்:** உரினுக் கடிது
உண்ணுக் கடிது
பொருநுக் கடிது
திருமுக் கடிது
தின்னுக் கடிது,நீண்டது, வலிது எ-ம்,

கடுமை, நீட்சி, வன்மை, எ-ம், தொழிற் பெயரிருவழியும் உகரம் பெற்றன. மற்றவையு மிப்படியே.

உரினு கொற்றா
உண்ணு கொற்றா
பொருநு கொற்றா
திருமு கொற்றா
தின்னு கொற்றா, நாகா, வஎவா, என

ஏவல்வினை உகரம் பெற்றன. மற்றவையு மிப்படியே.

சில ஏவலுறு சில்வழி யென்றதனால் உண்ணு கொற்றா, உண் கொற்றா, என வுகரம் பெற்றும் பெறாதும் வருவனவும், உரினுகொற்றா என உகரம் பெற்றே வருவனவுள வென்றறிக.

208. நவ்விறு தொழிற்பெயர்க் கவ்வுமாம் வேற்றுமை.

**இது நகரவீற்றுத் தொழிற்பெயர்க்கு எய்தியதன்மேற்சிறப்பு விதி யுணர்த்துகின்றது.**

(இ-ள்.) நவ்விறு—நகரம் இறுதியாகிய, தொழிற் பெயர்க்கு—முதனிலைத் தொழிற் பெயர்க்கு, அவ்வுமாம்—உகரச் சாரியை யல்லாமலும் அகரச்சாரியையுமாகும், வேற்றுமை—வேற்றுமைக் கண்.

**உதாரணம்.** பொருநக் கடுமை என வரும்.

[ணகர னகர வீறு.]

209. ணனவல் லினம்வரட் டறவும் பிறவரி
னியல்பு மாகும் வேற்றுமைக் கல்வழிக்
கனைத்துமெய் வரினு மியல்பா கும்மே.

**இது மேலைச் சூத்திரம் வரைக்கும் மெய்யீற்றுப் பொதுப் புணர்ச்சி கூறி அவற்றிற்கேயுரிய ஞகர நகரங்களை யொழித்து மற்றவைகளுக்கு**

**முறையே சிறப்பு விதி சொல்லத் தொடங்கி ணகர னகரவீறு புணருமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) ணன—ணகார னகாரங்கள், வேற்றுமைக்கு—வேற்றுமைக்கண், வல்லினம்—வன்கணம், வர—வந்தால், டறவும்—முறையே டகாரமும் றகாரமும், பிற—மெல்லினமும் இடையினமும், வரின்—வந்தால், இயல்பும்—இயல்பும், ஆகும்—ஆம், அல்வழிக்கு—அல்வழிக்கண், அனைத்துமெய்—மூவின மெய்களும், வரினும்—வந்தால், இயல்பாகும்—இயல்பேயாகும். எ-று.

**உதாரணம்.** சிறு கண் + களிறு = சிறுகட்களிறு
பொன் + தகடு = பொற்றகடு
என வேற்றுமையிலே வல்லினம் வர ணனக்கள் திரிந்தன.

மண் ஞாற்சி, பொன் ஞாற்சி, நீட்சி, மாட்சி, யாப்பு, வன்மை, என வேற்றுமையிலே மெல்லினமும் இடையினமும் வர ணனக்கள் இயல்பாயின.

மண்கடிது, பொன்கடிது, சிறிது, தீது, பெரிது, ஞான்றது நீண்டது, மாண்டது, யாது, வலிது, என அல்வழியிலே மூவினமும் வர ணனக்கள் இயல்பாயின. மற்றவைகளுமிப்படியே.

ஒப்பின் முடித்தலால் னகரமும் உடன் கூறினர். பின்னே காட்டிச் சொல்லப்படு மெழுத்துக்களுக்கும் இவ் வுத்தியே கொள்க.

210. குறிலணை வில்லா ணனக்கள் வந்த
நகரந் திரிந்துழி நண்ணுங் கேடே.

**இது ணகர னகர வீறுகளுள் ஒரு சாரனவற்றிற்கு எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.**

(இ-ள்) குறில் — தனிக்குறிலொன்றனையும், அணை வில்லா—சாராமல், ஒரு மொழி தொடர் மொழிகளைச் சார்ந்த ணனக்கள்—ணகார னகார மெய்களானவை, வந்த—வரு மொழிகளுக்கு முதலாக வந்த, நகரம்—நகரமானது, திரிந்துழி—மயக்கவிதி யில்லாமையினாலே திரிந்த விடத்து, கேடு—கெடுதலை, நண்ணும்—பொருந்தும். (எ-று.)

**உதாரணம்.** தூண் + நன்று தூணன்று
பசுமண் + நன்று = பசுமணன்று (எ-ம்)
நன்மை, எ-ம், ணகரம் இருவழியுங் கெட்டது.
அரசன் + நல்லன் = அரசனல்லன்
செம்பொன் + நன்று = செம்பொனன்று. எ-ம்,
நன்மை எ-ம், னகரம் இருவழியுங் கெட்டது.

211. சாதி குழூஉப்பரண் கவண்பெய ரிறுதி
இயல்பாம் வேற்றுமைக் குணவெண் சாண்பிற
டவ்வா கலுமா மல்வழி யும்மே.

**இது ணகர வீற்றுட் சிலவற்றிற்கு வேற்றுமைக்கணெய்தியது விலக்கலுஞ், சிலவற்றிற்கு அல்வழிக்கண் எய்தியதன்மேற் சிறப்பு விதியும் உணர்த்துகின்றது.**

(இ-ள்) சாதிப் பெயர்—சாதி பற்றிவரும் பெயர்களுக்கும், குழூஉப் பெயர்—திரள் பற்றிவரும் பெயர்களுக்கும், பரண்கவண் பெயர்—பரண்கவணென்னும் பெயர்களுக்கும், இறுதி—ஈற்று ணகரமானது, வேற்றுமைக்கும்—வேற்றுமைக்கண்ணும், இயல்பாம்—வல்லினம் வந்தால் இயல்பாகும், உணவெண் பெயர்—உணவிற்குரிய வெள்ளின்றி சொல்லாகிய வெண்ணென்னும் பெயருக்கும், சாண் பெயர்—சாணென்னும் நீட்டலளவைப் பெயருக்கும், இறுதி—ஈற்று ணகரமானது, அல்வழியும்—அல்வழிக் கண்ணும், டவ்வாகலுமாம்—வல்லினம் வந்தால் திரிந்து டகரமாதலும் பொருந்தும். எ-று

**உதாரணம்:** பாண்குடி எ-ம், அமண்குடி எ-ம், பரண்கால் எ-ம், கவண்கால் எ-ம், வேற்றுமையிலும் இயல்பாயிற்று.

எண் + கடிது = எட்கடிது
சாண் + கோல் = சாட்கோல்

என அல்வழியிலுந் திரிந்தது.

டவ்வாகலுமாம் என்ற உம்மையால் எண் கடிது, சாண் கோல் என இயல்பாதலே சிறப்பாம். பிறவென்ற மிகையால் வேற்றுமையில் பாணக்குடியென அகரச்சாரியை பெறுதலும் அட்டுண்டுழனி என்னும் இயல்பும், மட்குடம், மண்குடம், என்னு முறழ்வும், இருவழியிலும் இன்னும் ணகர வீற்றுள் அடங்காதவை யுண்டேல் அவையுங் கொள்க.

212. னஃகான் கிளைப்பெய ரியல்பு மஃகான்
அடைவு மாகும் வேற்றுமைப் பொருட்கே.

**இது னகரவீற்றுச் சாதிப்பெயர்க்கு வேற்றுமைக்கண் எய்தியது விலக்கலும் பிறிது விதிவகுத்தலுஞ் சொல்லுகின்றது.**

(இ-ள்) னஃகான்—னகரத்தை யிறுதியிலுடைய, கிளைப் பெயர்—சாதிப் பெயர், இயல்பும்—வல்லினம் வரவீறுதிரியாதியல்பாதலும், அஃகானடைவும் — அகரச் சாரியைப்பெறு

தலும், வேற்றுமைப் பொருட்கு—வேற்றுமைப் பொருட் புணர்ச்சிக்குள், ஆகும்—ஆகும். எ-று.

**உதாரணம்:** எயின் + குடி = எயினக்குடி, சேரி, தோட்டம், பாடி, எனவரும்.

பொருட்கே என்ற மிகையால் எயின மரபு, எயின வாழ்வு, எயினவணி என மற்றைக் கணம் வரினும் அகரச்சாரியை பெறுதலும், எயினக்கன்னி என அல்வழியில் அகரச் சாரியை பெறுதலும் கொள்க.

213. மீன்றவ் வொடுபொரூஉம் வேற்றுமை வழியே.

**இது மீனென்னும் சொல்லுக்கு வேற்றுமைக்கண் எய்தியதொரு வாற்றல் விலக்குகின்றது.**

(இ-ள்) மீன்—மீனென்னும் மொழியிறுதினகரம், வேற்றுமை வழி—வேற்றுமைக்கண் வல்லெழுத்துவரின், றவ்வொடு—றகரத்தோடு, பொரூஉம்—உறழ்ந்துவரும்—எ-று.

**உதாரணம்.** மீன் + கண் = மீற்கண். செவி, தலை, புறம் என வரும்.

214. தேன்மொழி மெய்வரி னியல்பு மென்மை
மேவி னிறுதி யழிவும் வலிவரி
னீறுபோய் வலிமெலி மிகலுமா மிருவழி.

**இது தேனென்னுஞ் சொல்லுக்கு "ணன வல்லினம் வர டறவும்," என எய்தியது விலக்கலும் 'பிறவரி னியல்புமாகும் வேற்றுமைக் கல்வழிக் கனைத்து மெய்வரினு யல்பாகும்' என எய்தியதிகந்தி படாமற் காத்தலும், இச்சூத்திரத்தில் இயல்பும் என எய்தியதன் மேற்சிறப்பு விதியும், வருகிற வல்லினத்திற்கு இயல்பினு மென்பதனுல் எய்தியதன்மேற் சிறப்புவிதியும் உணர்த்துகின்றது.**

(இ-ள்) தேன்மொழி — தேனென்னுஞ் சொல், மெய் வரின்—மூவின மெய்களும் வரின், இயல்பும் — இறுதி னகர மெய் இயல்பாதலும், மென்மை மேவின்—மெல்லினம் வரின் இறுதி—அம்மெய், அழிவும்—இயல்பாதலே யன்றிக் கெடுதலும், வலிவரின்—வல்லினம் வரின், ஈறு—அம்மெய், போய்—இயல்பாதலே யன்றிக்கெட, வலிமெலிமிகலும்—வந்தவல்லினமாவது அதற்கினமாவது மிகுதலும், ஆம்—ஆகும், இருவழி—இருவழிக் கண்ணும். எ-று.

**உதாரணம்.** தேன்கடிது, தேன்ஞான்றது, தேன்யாது எ-ம். தேன் + மொழி = தேமொழி எ-ம், தேன் + குழம்பு = தேக்குழம்பு, தேங்குழம்பு எ-ம் அல்வழியில் வந்தன.

தேன்கடுமை, தேன்மலிவு, தேன்யாப்பு எ-ம், தேன் + மலர் = தேமலர் எ-ம், தேன் + குடம் = தேக்குடம், தேங்குடம் எ-ம் வேற்றுமையில் வந்தன. மற்றவைகளுமிப் படியே.

215. மரமல் லெகின்மொழி யியல்பும் அகரம்
மருவ வலிமெலி மிகலு மாகும்.

**இது, எகினென்னுஞ் சொல்லுக்கு வேற்றுமைக்கண் 'ஊனவல்லினம் வரட்டறவும்' என எய்தியது விலக்கலும், அகரம் மருவ வென்றதனல் அச்சூத்திரத்தில் இருவழிக்கண்ணும் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தலும், வருகிற வல்லினத்திற்கு இயல்பினுமென்பதனல் எய்தியதன் மேற் சிறப்புவிதியும் உணர்த்துகின்றது.**

(இ-ள்) மரமல் — மரமல்லாத, எகின்மொழி — அன்னத்தையுணர்த்தும் எகினென்னுஞ் சொல், இயல்பும்—வேற்றுமையிலும் வல்லினம் இறுதியியல்பாதலும், அகரம் மருவ— இருவழியிலும் அகரச் சாரியை பொருந்த, வலிமெலி மிகலும் —வல்லெழுத்தாவது அதற்கினமாவது மிகுதலும், ஆகும்— ஆகும். (எ-று.)

**உதாரணம்.** எகின் கால், சிறை, தலை, புறம், என வேற்றுமையிலும் இயல்பாயிற்று.

எகினப்புள், எகினம்புள் எ-ம், எகினக்கால், எகினங்கால் எ-ம், இருவழியிலும் அகரம் வர வலி மெலி மிகுந்தன.

அகரம் வருதற்கு வருமெழுத்தைச் சொல்லாமையால் நாற்கணமுங் கொள்க. எகினமாட்சி, எகின வாழ்க்கை, எகின வழகு என வரும். மற்றவைகளுமிப்படியே.

216. குயினூன் வேற்றுமைக் கண்ணு மியல்பே.

**இது, குயின் ஊன் என்னுஞ் சொற்களுக்கு 'ஊன வல்லினம் வரட்டறவும்' என எய்தியது விலக்குகின்றது.**

(இ-ள்) குயின் — குயினென்னும் பெயரும், ஊன் — ஊனென்னும் பெயரும், வேற்றுமைக் கண்ணும்—வேற்றுமையினிடத்தும், இயல்பு—இயல்பாகும். (எ-று.)

**உதாரணம்.** குயின்கடுமை, ஊன்கடுமை, சிறுமை, தீமை, பெருமை என வரும். (குயின்—மேகம்).

217. மின்பின் பன்கன் றொழிற்பெய ரனைய
கன்னவ் வேற்று மென்மையோ டுறழும்.

**இது, மின் பின் பன் கன் என்கிற நான்கு சொற்களுக்கும், 'ணன வல்லினம் வரட்டறவும்' என்பதனால் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்தலும், அகரச் சாரியை முன் வருகிற வல்லினத்திற்கு 'இயல்பினும்' என்பதனால் எய்தியதன் மேற் சிறப்பு விதியும் உணர்த்துகின்றது.**

(இ-ள்) மின்பின் பன்கன்—மின் முதலிய நான்கு சொற்களும், தொழிற் பெயரனைய—தொழிற் பெயர்போல யகர மல்லாத மெய்கள் வரின் உகரச் சாரியை பொருந்தும், கன்—இவற்றுட் கன் என்னுஞ் சொல், அவ்வேற்று—அகரச் சாரியையும் பெற்று, மென்மையோடுறழும்—வருகிற வல்லெழுத்தாவது, அதற்கினமாவது மிகப் பெறும். (எ-று.)

**உதாரணம்.** மின்னுக்கடிது
பின்னுக்கடிது
பன்னுக்கடிது
கன்னுக்கடிது, நன்று, வலிது எ-ம், கடுமை, நன்மை, வன்மை எ-ம், கன்னத்தட்டு, கன்னந்தட்டு, எ-ம், கன்னத்தூக்கு, கன்னந்தூக்கு எ-ம், அல்வழி வேற்றுமைகளில் முறையே வந்தன. மற்றவைகளுமிப்படியே. (கன்—சிறு தராசுத் தட்டு).

218. தன்னென் னென்பவற் றீற்றுனவ் வன்மையோடு
உறழும் நின்னீ றியல்பா முறவே.

**இது, தன் என் என்கிற விகாரமொழிகளுக்கு 'ணனவல்லினம் வரட்டறவும்' என எய்தியதொடுவாற்றால் விலக்கலும், நின் என்பதற்கு எய்தியது விலக்கலுஞ் சொல்லுகின்றது.**

(இ-ள்.) தன்னென்னென்பவற்று—தன் என் என்பவைகளினுடைய, ஈற்று—இறுதியிலுள்ள, ன—னகரமெய்யானது, வன்மையோடுறழும் — வல்லினம்வரிற் பொதுவிதியால் றகரமாகத் திரிதலும், அவ்விதியேலாது இயல்பாதலுமாம், நின்—நின்னென்பதானது, ஈறு—இறுதியிலுள்ள னகர மெய்யானது, இயல்பாம்-வல்லினம்வரிற் றிரியாதியல்பேயாகும். (எ-று.)

**உதாரணம்.** தன்+பகை=தற்பகை
என்+பகை=எற்பகை எ-ம்,நின்பகை எ-ம் வரும்.

உறவே யென்ற மிகையால் மின் பின் முதலியவை மின்கடிது, மின்கடுமை எனவிருவழியுஞ் சாரியை பெறுதலும், திரிதலுமில்லாமல் வருதலும், மான் குளம்பு, அழன்கை என, வேற்றுமையிலே சிறப்பு விதி சொல்லாதவைகள் இயல்

பாதலும், வரிற்கொள்ளும் எனச் செயினென்னும் வாய்பாட்டு வினையெச்சம்பொதுச்சூத்திரத்தால் இயல்பாகாது திரிதலும், இன்னும் னகரமெய்யீற்றுள் அடங்காதவையிருந்தால் அவையுங் கொள்க.

### மகர வீறு

219. மவ்வீ றொற்றழிந் துயிரீ றொப்பவும்
வன்மைக் கினமாத் திரிபவு மாகும்.

**இது, மகரமெய்யீறு புணருமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) மவ்வீறு-மகர வீற்றுச் சொற்கள், ஒற்று-இறுதியிலுள்ள மகரமெய், அழிந்து—கெட, உயிரீறொப்பவும்—விதியுயிரீறாய் நின்று இயல்பு உயிரீறுபோலப் புணர்வனவும், வன்மைக்கினமாத்திரிபவும்—வல்லினம் வரிற் கெடாது அவற்றிற் கினமாகத் திரிவனவும், ஆகும்—ஆகும். (எ-று.)

உயிரீ றொத்தலாவது, உயிர்வரின் உடம்படுமெய் பெறவும், வல்லினம் வரின் மிகவும், மெல்லினமும் இடையினமும் வரினியல்பாகவும் புணர்தல்.

**உதாரணம்.** வட்டம் + ஆழி = வட்டவாழி
வட்டம் + கடல் = வட்டக்கடல்
வட்டம் + நேமி = வட்டநேமி
வட்டம் + வாரி = வட்டவாரி எ-ம்,

மரம் + அடி = மரவடி, மரக்கால், மரநார், மரவேர், எ-ம்,
நாம் + கடியம் = நாங்கடியம் எ-ம், நம் + கை = நங்கை எ-ம்
வரும். மற்றவைகளுமிப்படியே.

இனமாத்திரியு மென்றமையின் அருத்தாபத்தியால் நாம் பெரியம் எனப் பகரம்வருவழித் திரியாதெனக் கொள்க.

220. வேற்றுமை மப்போய் வலிமெலி யுறழ்வும்
அல்வழி யுயிரிடை வரினியல் பும்முள.

**இது, சில மகர வீற்றிற்கு மேலைச்சூத்திரத்தால் எய்தியதிகந்துபடாமற் காத்தலும் விலக்கலும், வருகிற வல்லினத்திற்கு 'இயல்பினும்' என்பதனுல் எய்தியதன்மேற் சிறப்பு விதியும் உணர்த்துகின்றது.**

(இ-ள்.) வேற்றுமை—வேற்றுமைக்கண், ம—மகரவிறுதி, போய்—கெட, வலிமெலியுறழ்வும்—வல்லினமாவது அவற்றிற்கினமாவது மிகுதலும், அல்வழி—அல்வழிக்கண், உயிர்—உயிரும், இடை—இடையினமும், வரின்—வந்தால், இயல்பும்—கெடாது இயல்பாதலும், உள—உளவாம். (எ-று.)

**உதாரணம்.** குளம்+கரை = குளக்கரை, குளங்கரை
குளம்+அழகிது = குளமழகிது
குளம்+யாது = குளம்யாது என வரும். மற்றவை யுமிப்படியே.

221. நும்தம்,
எம்நம் மீறு மவ்வரு ஞநவே.

**இது, சில பொதுப்பெயர்களுக்கு 'மவ்வீ றொற்றழிந்து' என எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.**

(இ-ள்) நும்தம் எம்நம்—நும் முதலிய நான்கு விகார மொழிகளுக்கும், ஈறும்— இறுதியாகிய, ம—மகர மெய்யானது, வருஞந—வருகின்ற ஞகர நகரங்களாகத் திரியும். (எ—று.)

**உதாரணம்.** நும்+ஞாண் = நுஞ்ஞாண்
நும்+நூல் = நுந்நூல், எனவரும்.
தம் முதலியவற்றோடும் இப்படியே கூட்டுக.

ஞநவரின் அவையாகத் திரியுமெனவே ஒழிந்த மகரம் வரின் நும்மணியென வியல்பாமென்பது பெற்றாம்.

222. அகமுனர்ச் செவிகைவரி னிடையன கெடும்.

**இது, அகமென்னுஞ் சொல்லுக்கு 'வன்மைக் கினமாகத் திரியும்' என எய்தியதன்மேற் சிறப்புவிதியுமுணர்த்துகின்றது.**

(இ-ள்) அகமுனர் — அகமென்னுமிடப்பெயர்முன், செவிகை—செவி கை என்கிற சினைப்பெயர்கள், வரின்—வந்தால், இடையன—நிலைமொழி நடுநின்ற ககர மெய்யும் அதன் மேலேறிய அகரவுயிரும், கெடும்—அழியும். (எ-று.)

**உதாரணம்.** அகம்+செவி = அஞ்செவி
அகம்+கை = அங்கை எனவரும்.

கெட்டேவரு மென்னுமையால் அகஞ்செவி, அகங்கை என வருவனவுங் கொள்க.

223. ஈமுங்,
கம்மு முருமுந் தொழிற்பெயர் மானும்
முதலன வேற்றுமைக் கவ்வும் பெறுமே.

**இது, ஈம் என்பது முதலிய மூன்று சொற்களுக்கும், "மவ்வீறொற் றழிந்து" என்பதனால் எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுக்கின்றது.**

(இ-ள்) ஈமுங் கம்மு முருமும்—ஈம் கம் உரும் என்கின்ற மூன்றும், தொழிற்பெயர் மானும்—இருவழியினும் 'தொழிற்

பெயர் போல யகரமல்லாத மெய்கள் வந்தால் உகரச்சாரியை பெற்றுமுடியும், முதலன—இவற்றுள்ளே முதற்கண்ணி னது ஈமுங்கம்மும், வேற்றுமைக்கு—வேற்றுமைக்கண், அவ் வும் பெறும்—உகரச்சாரியை யல்லாமலும் அகரச்சாரியையும் பெறும். (எ-று.)

**உதாரணம்.** ஈமுக்கடிது, கம்முக்கடிது, உருமுக்கடிது, நீண் டது, வலிது எ-ம், கடுமை, நீட்சி, வலிமை எ-ம், ஈமக்குடம், கம்மக்குடம், எ-ம் வரும். மற்றவை களுமிப்படியே. (ஈம்—சுடுகாடு, கம்—கம்மியரது தொழில், உரும்—இடி).

### யரழ வீறு

224. யரழ முன்னர்க் கசதப அல்வழி
இயல்பு மிகலு மாகும் வேற்றுமை
மிகலு மினத்தோ டுறழ்தலும் விதிமேல்.

**இது, யரழ மெய்யீற்றுமுன் கசதபக்கள் புணருமாறு உணர்த்து கின்றது.**

(இ-ள்) யரழ முன்னர் — யகர ரகர ழகர மெய்களின் முன், கசதப—ககர சகர தகர பகரங்கள், வரின்—வந்தால், அல்வழி—அல்வழியில், இயல்பும்—இயல்பாதலும், மிகலும்— மிகுதலும், இனத்தோடு உறழ்தலும்—வல்லினமாவது மெல் லினமாவது மிகுதலும், விதி ஆகும்—விதியாகும். (எ-று.)

**உதாரணம்.** வேய் கடிது, வேர் கடிது
வீழ் கடிது எ-ம்,

மெய்க்கீர்த்தி, கார்ப்பருவம், மூழ்ப்பறவை. எ-ம் அல்வழியில் இயல்பு மிகலுமாயின.

நாய்க்கால் — வேய்க்குழல்
தேர்க்கால் — வேய்ங்குழல்
மூழ்க்கால் எ-ம், ஆர்க்கோடு, ஆர்ங்கோடு எ-ம்

வேற்றுமையில் மிகுந்தும் உறழ்ந்தும் வந்தன. மற்றவை களுமிப்படியே.

மேலென்ற மிகையால் "வாய் புகுவதனினும்" என வேற் றுமையிலியல்பாதலும், பாழ்க்கிணறு, பாழ்ங்கிணறு, எனப் பண்புத்தொகையில் உறழ்தலும், இன்னும் அடங்காதவைகளி ருந்தால் அவைகளுங் கொள்க.

225. தமிழவ் வுறவும் பெறும்வேற் றுமைக்கே
தாழுங் கோல்வந் துறுமே லற்றே.

**இது, தமிழ் தாழ் என்கின்ற இரு சொற்களுக்கும் எய்தாததெய்து விக்கின்றது.**

(இ-ள்) *தமிழ்—தமிழென்கின்ற சொல், வேற்றுமைக்கு—வேற்றுமைக்கண்ணே நாற்கணமும் வந்தால், அவ்வுறவும்—அகரச் சாரியை பொருந்தவும், பெறும்—பெறும், தாழும்—தாழென்னுஞ் சொல்லும், கோல்—கோலென்னுஞ் சொல்லானது, வந்து—வந்து, உறுமேல்—பொருந்துமாயின், அற்று—அவ்வகரச் சாரியைப் பெறும்.* (எ-று.)

**உதாரணம்.** *தமிழப் பல்லவரையர், தமிழ நாகன், தமிழ வளவன், தமிழ வரசன் எ-ம், தாழக்கோல் என்றும் வரும்.*

*அவ்வுறவும் என்ற எதிரதுதழீஇய வெச்சவும்மையால் தமிழின்சுவை யென இன் சாரியை பெறுதலுங் கொள்க.*

226. *கீழின்முன் வன்மை விகற்பமு மாகும்.*

**இது, கீழென்பதன் முன் வருகிற வல்லினத்திற்கு 'யரழ முன்னர்' என்பதனுல் எய்தியது பெரும்பாலும் விலக்குகின்றது.**

(இ-ள்) *கீழின்முன்—கீழென்கிற சொல்லின்முன் வருகிற, வன்மை—வல்லினம், விகற்பமுமாகும்—ஒருகால் இயல்பாகியும் ஒருகால் மிக்கும் வருகிற விகற்பத்தையும் பொருந்தும்.* (எ-று.)

**உதாரணம்.** *கீழ்+குலம்=கீழ்க்குலம், கீழ்+சாதி=கீழ்ச்சாதி என வரும். மற்றவைகளுமிப்படியே.*

*விகற்பமுமென்னும் இழிவுசிறப்பும்மையால் இவற்றுள் இயல்பே சிறப்புடைத்தென்றறிக.*

**லகர ளகர வீறு**

227. *லளவேற் றுமையிற் றடவு மல்வழி*
*யவற்றோ டுறழ்வும் வலிவரி னாமெலி*
*மேவி னணவு மிடைவரி னியல்பும்*
*ஆகு மிருவழி யானு மென்ப.*

**இது, லள மெய்யீறுகள் புணருமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) *லள—லகர ளகரமாகிய இரண்டு மெய்யீறுகளும், வலிவரின்—வல்லினம் வந்தால், வேற்றுமையில் — வேற்றுமைக்கண், றடவும்—முறையே றகார டகார மெய்களும், அல்வழி—அல்வழிக்கண், அவற்றோடுறழ்வும்—றகார டகாரங்க*

ளுடனே யுறழ்வனவும், ஆம்—ஆகும், இருவழியானும்—இரு வழிக்கண்ணும், மெலி மேவின்—மெல்லினம் வந்தால், னண வும்—முறையே னகார ணகாரமெய்களும், இடைவரின்—இடையினம் வந்தால், இயல்பும்—இயல்பும், ஆகும்—ஆகும், என்ப—என்று சொல்லுவர் புலவர். (எ–று.)

**உதாரணம்.** கற்குறை, முட்குறை எ-ம், கல்குறிது, கற்குறிது, முள்குறிது எ-ம், கன்ஞெரிந்தது, முண்ஞெரிந் தது, கன்ஞெரி, முண்ஞெரி எ-ம், கல்யாது, முள் யாது, கல் யாப்பு, முள்யாப்பு எ-ம் முறையே வந்தன. மற்றவைகளுமிப்படியே.

அல்வழி யவற்றோ டுறழ்வு மென்றாலும் இவற்றோடு மயங் காத தகரம்வரின் ஏற்புழிக்கோடலால், கற்றீது, முட்டீது எனத் திரிபொன்றுமே கொள்க.

228. குறில்வழி லளத்தவ் வணையி னய்தம்
ஆகவும் பெறூஉ மல்வழி யானே.

**இது, இவ்விரண்டிற்றிற்கும் மேலைச் சூத்திரத்தா லெய்தியதன்மேற் சிறப்புவிதி யுணர்த்துகின்றது.**

(இ-ள்) குறில்வழி—தனிக் குறிலின் பின்னின்ற, லள—லகர ளகர மெய்களானவை, அல்வழியான்—அல்வழிக்கண், த—தகரமானது, அணையின்—வருமாயின், ஆய்தமாகவும்—றகர டகரங்களாகத் திரிதலல்லாமலும் ஆய்தமாகத் திரிதலை யும், பெறூஉம்—பொருந்தும். (எ–று.)

**உதாரணம்.** கல் + தீது = கஃறீது, முள் + தீது = முஃடீது **எனவரும்.**

229. குறில்செறி யாலள அல்வழி வந்த
தகரந் திரிந்தபிற் கேடுமீ ரிடத்தும்
வருநத் திரிந்தபின் மாய்வும் வலிவரி
னியல்புந் திரிபு மாவன வுளபிற.

**இது, 'லள வேற்றுமையிற் றடவும்' என்பதனால் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வகுக்கின்றது.**

(இ-ள்) குறில்செறியா—தனிக்குறிலொன்றனையுஞ் சாராத, லள—லகார ளகார மெய்களானவை, அல்வழி—அல் வழிக்கண், வந்த—வருமொழிக்கு முதலாய் வந்த, ந—நகர மானது, திரிந்தபின்—திரியுமிடத்து, மாய்வும்—கெடுதலும், வலி—வல்லெழுத்து முதன்மொழி, வரின்—வந்தால், இயல்புந்

திரியும்—அல்வழிக்கண் உறழ்ந்து இயல்பாதலும் திரிதலும், வேற்றுமைக்கண்ணே திரியாது இயல்பாதலும், ஆவனவுள—பொருந்துவனவுள. (எ-று.)

**உதாரணம்.** (1). தோன்றல்+தீயன்= தோன்றறீயன்
வேள்+தீயன்=வேடீயன் எ-ம்,

அல்வழியிலே தகரந் திரியுமிடத்துக் கெட்டன.

(2). தோன்றல்+நல்லன்=தோன்றனல்லன்
வேள்+நல்லன்=வேணல்லன் எ-ம்,
தோன்றல்+நன்மை=தோன்றனன்மை
வேள்+நன்மை=வேணன்மை எ-ம்

இரு வழியிலும் நகரந் திரியுமிடத்துக் கெட்டன.

(3). கால்கடிது, மரங்கள் கடிய எ-ம், வேற்படைக்குமரன், வாட்படைக்கையன் எ-ம், அல்வழியில் வல்லினம் வர உறழ்ந்து இயல்புந் திரிபுமாயின.

(4). "கால்குதித் தோடிக் கடல்புக மண்டி"
"வாள்போழ்ந் தட்ட நீள்கழன் மறவர்"

என வேற்றுமையிலே வலிவரத் திரியாதியல்பாயின. பிறவென்ற மிகையால் தோன்றறீமை, வேடீமை என வேற்றுமையிலுந் தகரந் திரியுமிடத்துக் கெடுதலும், காற்றூணை, தாட்டூணை எனக் கெடாமையும், விற்படை என உறழாது திரிதலும்; கொல்களிறு, கொள்பொருள் என வினைத்தொகை இயல்பாதலும், இன்னும் இவ்விரண்டற்றுள் அமையாதன பிறவுங் கொள்க.

உயர்திணையிற் காட்டிய உதாரணங்கள் மயக்கவிதியில்லாவிடத்து வருதலால் 'சில விகாரமாமுயர்திணை' என்றவற்றுளடங்காவாம்.

230. ளஃகிறு தொழிற்பெய ரீரிடத்து முவ்வுரு
வலிவரி னல்வழி யியல்புமா வனவுள.

**இது, லகர ளகர மெய்யீற்றுத் தொழிற்பெயர்களுக்கு வருவதோர் ஐயமறுத்தலும் ஒருவாறு அல்வழியவற்றோ டுறழ்வுமெனவெய்தியது விலக்கலும் உணர்த்துகின்றது.**

(இ-ள்) ளவிறு தொழிற்பெயர்—லகாரத்தை இறுதியாகவுடைய விகுதிபெற்ற தொழிற்பெயரும், ளகாரத்தை இறுதியாகவுடைய முதனிலைத்தொழிற்பெயரும், ஈரிடத்தும்—இரு வழியிலும், உவ்வுறு—யகரமல்லாத மெய்கள் வந்தாலுமுகரம் பெறுவாம், வலி—வல்லினம், வரின்—வந்தால், அல்வழி—அல்வழிக்கண், இயல்புமாவன—உறழ்ந்தியல்பாவனவும், உள—சிலவுள. (எ-று.)

**உதாரணம்:** ஆடல்+சிறந்தது = ஆடற்சிறந்தது. ஆடனன்று, ஆடல்வலிது எம், ஆடற்சிறப்பு, ஆடனன்மை, ஆடல் வன்மை எ-ம், கோள்+கடிது=கோட் கடிது, கோணன்று, கோள்வலிது எ-ம், இருவழியும் உகரம் பெறுது பொது விதியான் முடிந்தன.

நடத்தல் கடிது, நீட்பித்தல் கடிது, (நீட்டல் கடிது) எனச் சில உறழாது அல்வழியிலியல்பாயின.

இயல்புமென்ற உம்மையால் பின்னல்+கடிது=பின்னற் கடிது, உன்னம்+கடிது=உன்னற் கடிது, எனப் பொதுவிதியால் உறழ்தலே பெரும்பாலன என்க.

231. வல்லே தொழிற்பெய ரற்றிரு வழியும்
பலகைநாய் வரினும் வேற்றுமைக் கவ்வுமாம்.

**இது "ளள வேற்றுமையிற்றடவு" மென்பதனல் எய்தியது விலக்கிப் பிறிதுவிதி வருக்கின்றது.**

(இ-ள்) வல்—வல்லென்கிற சூதாடு கருவிப்பெயர், இருவழியும்—இரு வழிக்கண்ணும், தொழிற் பெயரற்று—யகரச் சாரியை பெறும், பலகை நாய் வரினும்—பலகை நாயென்கிற இருபெயர் வரினும் பிறபெயர்கள் வரினும், வேற்றுமைக்கு — வேற்றுமைக்கண், அவ்வுமாம்—உகரச் சாரியையல்லாமலும் அகரச் சாரியையும் பெறும். (எ-று.)

**உதாரணம்:** வல்லுக்கடிது, நன்று, வலிது எ-ம், வல்லுக் கடுமை, நன்மை, வன்மை, என இருவழியும் தொழிற்பெயர் போல உகரச்சாரியைபெற்று வல்லப் பலகை, நாய், புலி, குதிரை எ-ம், வல்லுப் பலகை, நாய், புலி, குதிரை எ-ம், வேற்றுமையில் அகர, உகர சாரியைகள் பெற்று வரும்.

வல்லப்பலகை, வல்லினது அறை, வரைந்த பலகை, வல்ல நாய், வல்லினுணாய் என விரியும்.

232. நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லு
மல்வழி யானும் றகர மாகும்.

**இதுவுமது :—**

(இ-ள்) நெல்லுஞ் செல்லுங் கொல்லுஞ் சொல்லும்—நெல் முதலிய நான்கு சொற்களினீற்று லகர மெய்யானது, அல்வழியானும்—அல்வழிக் கண்ணும், றகரமாகும்—பொது விதியாலுறழாது வேற்றுமைபோல றகர மெய்யாகத் திரியும். (எ-று.)

**உதாரணம் :** நெற்கடிது, செற்கடிது, கொற்கடிது, சொற் கடிது, சிறிது, தீது, பெரிது, எனவரும். (செல்—மேகம், கொல்—கொல்லன்.)

233. இல்லெ னின்மைச் சொற்கு ஐயடைய
வன்மை விகற்பமு மாகா ரத்தொடு
வன்மை யாகலு மியல்பு மாகும்.

**இது, இல்லென்னும் பண்புச் சொற்கு 'லள வேற்றுமையிற் றடவு மல்வழி யவற்றோடுறழ்வு' மென எய்தியது விலக்கிப் பிறிது விதி வகுத்த லும், அவற்றின் முன்வருகிற வல்லினத்திற்கு அல்வழி 'இஐ' யென்பத னுலும், 'இயல்பினும்' என்பதனுலும் எய்தியது இகந்துபடாமற் காத் தலுஞ் சொல்லுகின்றது.**

(இ-ள்) இன்மை—இல்லாமைக்குணத்தை யுணர்த்து கின்ற, இல்லென்சொற்கு—இல் என்கிற சொல்லுக்கு, ஐ—ஐகாரச்சாரியையானது, அடைய—பொருந்த, வன்மை—அவ் விடத்து வருகிறவல்லினம், விகற்பமும் — விகற்பித்தலும், ஆகாரத்தொடு — ஆகாரச்சாரியை பொருந்த, வன்மையாக லும்—அவ்விடத்து வருகிற வல்லினமிகுதலும், இயல்பும்—இவ்விருவிதியும் பெருது இயல்பாதலும், ஆகும்—பொருந் தும். (எ-று.)

சாரியை பெறுதற்கு வருமெழுத்தைச் சொல்லாமையால் நாற்கணமுங் கொள்க.

**உதாரணம் :** இல்லை + பொருள் = இல்லைப்பொருள், இல்லாப் பொருள், இல்பொருள், ஞானம், வன்மை, அணி எனவரும்.

234. புள்ளும் வள்ளுந் தொழிற்பெயர் மானும்.

**இது 'லளவேற்றுமையிற்றடவும்' என்பதனுல் எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துகின்றது.**

(இ—ள்) புள்ளும் வள்ளும் — இவ்விருசொற்களும், தொழிற்பெயர்மானும் — யகரமல்லாத மெய்கள் வந்தால் பொது விதியான் முடிதலல்லாமலும் தொழிற்பெயர்போல உகரச்சாரியையும் பெற்றுப்புணரும். (எ—று.)

**உதாரணம் :** புள்ளுக்கடிது, வள்ளுக்கடிது, நன்று, வலிது எ-ம், புள்ளுக்கடுமை, வள்ளுக்கடுமை, நன்மை, வலிமை எ—ம், வரும்.

**[வகரவீறு]**

235. சுட்டு வகரமூ வினமுற முறையே
ஆய்தமு மென்மையு மியல்பு மாகும்.

**இது, வகரவீற்றுச் சுட்டுப் பெயர்கள் மூவினத்தோடும் புணருமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) சுட்டுவகரம்—அவ், இவ், உவ் என்கிற அஃறிணைப்பன்மைச் சுட்டுப் பெயர்களீற்று வகரமெய், மூவினம்—வல்லினமும் மெல்லினமும் இடையினமும், உற—வர, முறையே—முறையாக, ஆய்தமும்—தனிநிலையும், மென்மையும்–மெல்லினமும், இயல்பும்—இயல்பும், ஆகும்—ஆகும். (எ-று.)

**உதாரணம் :** அவ் + கடிய = அஃகடிய,
அவ்+ ஞானம்= அஞ்ஞானம்,
அவ்+ யானை = அவ்யானை எனவரும்.

இவ், உவ் என்பவைகளுடனேயும் இப்படியே கூட்டுக.

236. தெவ்வென் மொழியே தொழிற்பெய ரற்றே
மவ்வரின் வஃகான் மவ்வு மாகும்.

**இது, தெவ்வென்கிற சொல் யகரமல்லாத மெய்களோடு புணருமாறு உணர்த்துகின்றது.**

(இ—ள்) தெவ்வென்மொழி — தெவ்வென்கிற பகையை யுணர்த்தும் பெயரானது, தொழிற்பெயரற்று—யகரமல்லாத மெய்களோடு புணருமிடத்துத் தொழிற்பெயர்போல உகரச்சாரியை பெற்றுமுடியும், ம — மகரமெய்யானது, வரின்— வந்தால், வஃகான்—வகரமெய்யானது, மவ்வுமாகும்— உகரச்சாரியை பெறுதலல்லாமலும் ஒரோ விடத்து மகரமெய்யாகவுந் திரியும். (எ—று.)

**உதாரணம்:** தெவ்வுக்கடிது, தெவ்வு மாண்டது, தெவ்வு வலிது எ-ம், தெவ்வுக் கடுமை, தெவ்வுமாட்சி, தெவ்வு வலிமை, தெவ்வு மன்னர், தெம் மன்னர் எ—ம், தெவ்வு முனை, தெம்முனை எ-ம், வரும்.

[வருமொழித் தகர நகரத் திரிபு]

237. னலமுன் றனவும் ணளமுன் டணவு
மாகுந் தநக்க ளாயுங் காலே.

**இது, முன்னே புணர்த்திய வருமொழிகளுக்கு முதலாகிய மெய் களுக்குள்ளே திரிதற்பாலன விவையென விதந்து உணர்த்துகின்றது.**

(இ-ள்) னலமுன்—னகர லகர மெய்களின் முன், த—வருகிற தகரம், றவ்வும்—றகரமும், ந—வருகிற நகரம், னவ் வும்—னகரமும், ணளமுன் — ணகரளகர மெய்களின் முன், த—வருகிற தகரம், டவ்வும்—டகரமும், ந—வருகிற நகரமும், ணவ்வும் — ணகரமும், ஆகும்—ஆகும், ஆயுங்கால், ஆராயு மிடத்து. (எ-று.)

**உதாரணம்:** பொன் + தீது = பொன்றீது
கல் + தீது = கற்றீது,
மண் + தீது = மண்டீது
முள் + தீது = முட்டீது
பொன் + தீமை = பொற்றீமை
கல் + நன்று = கன்னன்று
மண் + நன்று = மண்ணன்று
முள் + நன்று = முண்ணன்று எனவரும்.

ஆயுங்காலென்றதனல், மயக்கவிதியில்லாமையால் இப் படிப் புணரும் முதலீறிரண்டனுள் ஒன்ருவது இரண்டுமாவது விகாரப்பட்டு மயங்குதற்கு உரியனவாகிப் புணருமென்ப தும், மயக்கவிதியுள்ளனவற்றிற்கு வருகிற விகாரம் அல்வழி வேற்றுமைப் பொருளுணர்ச்சியால் வருமென்பதும் பெற்ரும்.

[வேற்றுமைப் பொருட்புணர்ச்சியை, உருபு புணர்ச்சியோடுமாட்டெறிதல்]

238 உருபின் முடிபவை யொக்குமப் பொருளினும்.

**இது, உயிரீற்றுப் புணரியற் கண்ணும், இவ்வியற்கண்ணும் முடிந்த வேற்றுமைப்பொருட்புணர்ச்சிக்கு எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த் துகின்றது.**

(இ-ள்) உருபின் முடிபவை—மேலுருபு புணர்ச்சிக்கண் முடியு முடிபுகள், அப்பொருளினும்—அப்பொருட்புணர்ச்சிக் கண்ணும், ஒக்கும்—ஒத்து முடியும். (எ-று.)

**உதாரணம்:** எல்லாவற்றதும், எல்லாவற்றுக் கோடும் என உயர்திணைக்கண் நம்மும், உருபின்மேல் உம்

மும் பெற்றாற் போலப் பொருட்புணர்ச்சிக் கண்ணும் பெற்றன.

எல்லார்தமதும், எல்லார்தங்கையும், எல்லீர் நுமதும், எல்லீர் நுங்கையும்,

தனது, தன்கை; தமது, தங்கை, நமது, நங்கை, எனது, எங்கை; எமது, எங்கை; நினது, நின்கை; நுமது, நுன்கை; என உருபு புணர்ச்சி போற் பொருட்புணர்ச்சியு முடிந்தவாறு காண்க. மற்றவைகளு மிப்படியே.

[புணரியல்களுக்குப் புறனடை]

239. இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவு
போலியு மரூஉவும் பொருந்திய வாற்றிற்
கியையப் புணர்த்தல் யாவர்க்கு நெறியே.

**இது, புணரியல்கட்கு ஆவதோர் புறனடை யுணர்த்துகின்றது.**

(இ-ள்) இடைச் சொல்லின்—இடைச் சொற்களுள்ளும், உரிச் சொல்லின்—உரிச் சொற்களுள்ளும், வடசொலின்—வட சொற்களுள்ளும், இயம்பிய — உயிரீறு மொற்றீறு மான புணரியலிலே தோன்றல், திரிதல், கெடுதல், இயல் பாதல் எனச்சொல்லிய புணர்ச்சியிலக்கணங்களுள், கொளா தவும்—பொருந்தாது வேறுபட்டு வருவனவும், போலியும்—இலக்கணப்போலி மொழிகளும், மரூஉவும்—மரூஉ மொழி களும், பொருந்திய—இருவகை வழக்கினும் நடக்கின்ற, ஆற் றிற்கு — முறைமைக்கு, இயைய—பொருந்துமாறு, புணர்த் தல்—புணர்க்கை, யாவருக்கும்—அறிவுடையோரெல்லோருக் கும், நெறி—முறை. (எ-று.)

**உதாரணம்:** ஆன் கன்று, வண்டின்கால், என வேற்று மைப்புணர்ச்சிக்கட் சாரியை இடைச்சொற் கள் திரியாதியல்பாயின.

மழகளிறு, தடந்தோள், என அகரவீற்று உரிச்சொற்களின் முன் வல்லெழுத்து மிகாதி யல்பாகியும், மெல்லெழுத்து மிகுந்தும் வந்தன.

அளிகுலம், தனதடம், ஆதிபகவன், என நிலைமொழியிரண்டும் வடமொழியாகிய காலத்து உயிரீற்றின் முன் வல்லெழுத்து மிகாது இயல்பாயின.

இன்னும் நிலைமொழி வருமொழிகளுள் வடநூலுட் புணர்க்கப்பட்டபடியே சிறுபான்மை தமிழில் வந்து வழங்குகின்ற தீர்க்கசந்தி, குணசந்தி, விருத்திசந்தி முதலாயினவுங் கொள்க.

அவற்றுட் சில வருமாறு :—

அ ஆக்களி லொன்றின்முன் அவ்விரண்டிலொன்று வந்தால் ஆவும், இஈக்களிலொன்றன்முன் அவ்விரண்டிலொன்று வந்தால் ஈயும், உ ஊக்களிலொன்றன்முன் அவ்விரண்டிலொன்று வந்தால் ஊவும், முறையே அந்நிலைமொழியீறும் வருமொழிமுதலும் கெடத் தோன்றுதல் தீர்க்கசந்தியாம்.

**உதாரணம்:**

பத + அம்புயம் = பதாம்புயம்
பரம + ஆநந்தம் = பரமானந்தம்
கங்கா + அமிர்தம் = கங்காமிர்தம்
சுதா + ஆனந்தம் = சுதானந்தம் எ-ம்,

சசி + இந்திரம் = சசீந்திரம்
கிரி + ஈசன் = கிரீசன்
மகீ + இந்திரன் = மகீந்திரன்
மகீ + ஈசன் = மகீசன் எ-ம்,

குரு + உதயம் = குரூதயம்
தரு + ஊனம் = தரூனம்
சுயம்பூ + உபதேசம் = சுயம்பூபதேசம்
சுயம்பூ = ஊர்ச்சிதம் = சுயம்பூர்ச்சிதம்
எ-ம் வரும்.

அ ஆக்களிலொன்றன்முன் இஈக்களிலொன்று வந்தால் ஏயும், அவ்விரண்டிலொன்றன்முன் உ ஊக்களிலொன்று வந்தால் ஓவும், முறையே அந்நிலைமொழியீறும் வருமொழி முதலுங்கெடத் தோன்றுதல் குணசந்தியாம்.

**உதாரணம்:**

நர + இந்திரன் = நரேந்திரன்
சுர + ஈசன் = சுரேசன்
தரா + இந்திரன் = தரேந்திரன்
உமா + ஈசன் = உமேசன் எ-ம்,
பாத + உதகம் = பாதோதகம்
ஞான + ஊர்ச்சிதன் = ஞானோர்ச்சிதன்
தயா + உற்பத்தி = தயோற்பத்தி
தயா + ஊர்ச்சிதன் = தயோர்ச்சிதன் எ-ம் வரும்.

அ ஆக்களிலொன்றன்முன் ஏ ஐக்களிலொன்று வந்தால் ஐயும், அவ்விரண்டிலொன்றன்முன் ஓ ஔக்களிலொன்று

வந்தால் ஔவும், முறையே அந்நிலைமொழியீறும், வருமொழி முதலுங்கெடத் தோன்றுதல் விருத்தி சந்தியாம்.

**உதாரணம்:** சிவ + ஏகம் = சிவைகம்
சிவ + ஐக்கியம் = சிவைக்கியம்
தரா + ஏகவீரன் = தரைகவீரன்
மகா + ஐசுவரியம் = மகைசுவரியம் எ-ம்,
கோமள + ஓடதி = கோமளௌடதி
திவிய + ஔடதம் = திவ்வியௌடதம்
மகா + ஓடதி = மகௌடதி
மகா + ஔடதம் = மகௌடதம் எ-ம், வரும்.

ஒரு மொழியுள்ளே மொழிக்கு முன்னே நின்ற இ ஈ ஏக்கள் ஐயாகவும், உ ஊ ஓக்கள் ஔவாகவும், அகரம் ஆகாரமாகவும், ஏழாமுயிர் ஆர் ஆகவுந் திரிந்து வருதல் ஆதி விருத்தி சந்தியாம்.

**உதாரணம்:** சிவனைத் தொழுவோன்—சைவன்
வீரத்தின் றன்மை—வைரம்
கேவலத்தன்மை—கைவல்லியம் எ-ம்,
புத்தனைத் தொழுவோன்—பௌத்தன்
சூரன் றன்மை—சௌரியம்
கோசலன்புத்திரி—கௌசலை எ-ம்,
தசரதன்புத்திரன்—தாசரதி எ-ம்,
கிருத்திகையின்புத்திரன் — கார்த்திகேயன் எ-ம், வரும்.

மற்றவைகளுமிப்படியே வருதல் காண்க.

இல் + முன் = முன்றில்
பொது + இல் = பொதியில்

எனவருகிற இலக்கணப் போலிகளும்,

அருமருந்தன்னபிள்ளை—அருமருந்தபிள்ளை
குணக்குள்ளது—குணது
தெற்குள்ளது—தெனது
வடக்குள்ளது—வடாது
சோழநாடு—சோணடு
பாண்டியநாடு—பாண்டிநாடு
மலையமாநாடு—மலாடு
தஞ்சாவூர்—தஞ்சை
ஆற்றூர்—ஆறை
ஆதன்றந்தை—ஆந்தை
பூதன்றந்தை—பூந்தை
வடுகன்றந்தை—வடுகந்தை

எனவருகிற மரூஉமொழிகளும் நிலைமொழி வருமொழிகளுள் ஏற்குஞ் செய்கையறிந்து முடித்துக்கொள்க.

மற்றவைகளுமிப்படியே.

மெய்யீற்றுப் புணரியல் முற்றும்.

---

## 5. உருபுபுணரியல்

[எட்டுருபுகளும் சாருமிடவகையால் இத்தனையா மென்பது]

240. ஒருவ னொருத்தி பலரொன்று பலவென
வருபெய ரைந்தொடு பெயர்முத லிருநான்கு
உருபு முறழ்தர நாற்பதா முருபே.

இது, வேற்றுமையுருபுகள் நிலைமொழியோடும் வருமொழியோடும் புணருமாறு இவ்வியலாற் சொல்லத்தொடங்கி அவ்வெட்டுருபுகளும் சாருமிடவகையால் இத்தனையாமென்பது உணர்த்துகின்றது.

(இ-ள்) ஒருவன் — ஒருவனும், ஒருத்தி — ஒருத்தியும், பலர்—பலரும், ஒன்று—ஒன்றும், பல—பலவும், என—என்று கருத, வரு—வருகின்ற, பெயரைந்தோடு — ஐந்துபெயரோடும், பெயர்முதல் — எழுவாய் வேற்றுமையான பெயர் முதல் விளியீருக்கின்ற, இருநான்குருபும் — எட்டுருபுகளையும், உறழ்தர—பெருக்க, உருபு—வேற்றுமையுருபுகள் [ஆனவை], நாற்பதாம்—நாற்பதாகும். (எ—று.)

**உதாரணம்:** நம்பி, சாத்தி, மக்கள், மரம், மரங்கள், என்கிற இவற்றுள்—நம்பி, நம்பியை, நம்பியால், நம்பிக்கு, நம்பியின், நம்பியது, நம்பிகண், நம்பீ என, ஒருவனென்னும் வாய்பாட்டுயர்திணை யாண்பாற் பெயரோடு எட்டுருபுகளும் வந்தன. மற்றைய நான்கு பெயர்களோடும் இப்படியே கூட்டுக.

[வேற்றுமை யுருபுகள் வருவதற்குக் காரணமும் வருமிடமும்]

241. பெயர்வழித் தம்பொருள் தரவரு முருபே.

இது, வேற்றுமையுருபுகள் வருதற்குக் காரணமும் வருமிடமும் உணர்த்துகின்றது.

(இ-ள்) உருபு — வேற்றுமையுருபுகளானவை, தம்பொருள்—தம்பொருளை, தர—கொடுக்க, பெயர்வழி—பெயர்க்குப்பின், வரும்—வரும். (எ—று.)

**உதாரணம் :** நம்பிபெற்றான்
நம்பியைப் பெற்றான்—எனவரும்.

மற்றவைகளுமிப்படியே.

**ஐ முதலியன நிலைமொழி வருமொழியோடு புணருமாறு.**

242. ஒற்றுயிர் முதலீற் றுருபுகள் புணர்ச்சியி
னொக்குமன் னப்பெயர் வேற்றுமைப் புணர்ப்பே.

**இது, ஐ முதலிய ஆறு உருபுகளும் நிலைமொழி வருமொழியோடு புணருமாறு உணர்த்துகின்றது.**

(இ-ள்) ஒற்றுயிர் முதலீற்று — நிலைமொழியோடும் வருமொழியோடும் புணருகிற மெய்யுயிர்களை முதலுமீறுமாக வுடைய, உருபுகள்—ஐ முதலிய ஆறுஉருபுகளும் இடைச் சொல்லாயினும், புணர்ச்சியின்—இயல்பொடு விகாரத்தினை யும் புணர்ச்சிவகையால், மன்—பெரும்பாலும், ஒக்கும்—ஒக் கும், வேற்றுமைப் புணர்ப்பு — போன விரண்டியலுள்ளும் வேற்றுமைப் புணர்ச்சிகள், அப்பெயர்—இயல்பொடு விகாரத் தியைந்த மெய்யுயிர் முதலீற்றுப் பெயர்களை. (எ—று.)

மன் என்றமையால் சிறுபான்மை ஒவ்வாதென்பதாம்.

**உதாரணம் :** நம்பிகண்வாழ்வு; இங்கே, "ஆவியரமுன் வன்மை மிகா" என்றும், 'ணனவல்லினம் வரட்டறவும் பிறவரினியல்புமாகும் வேற்றுமைக்கு' என்றும் சொல்லியபடியே கண்ணுருபின் முதலுமீறும் இயல்பாயின.

உரிக்கட்டயிர்; இங்கே, "இயல்பினும் விதியினு நின்ற வுயிர்முன் கசதபமிகும்" என்றும், "ணனவல்லினம் வரட்டற வும்" என்றும், சொல்லியபடியே கண்ணுருபின் முதலுமீறும் விகாரமாயின.

பழிக்கஞ்சி; இங்கே, "இயல்பினு விதியினும் நின்ற உயிர்முன் கசதபமிகும்" என்றும், "முற்றுமற்றொரோவழி" என்றும் சொல்லியபடியே குவ்வுருபின் முதலுமீறும் விகார மாயின.

நம்பிக்குப் பிள்ளை; இங்கே, "ஆவியரமுன் வன்மைமிகா" என்ற விதியொவ்வாமற் குவ்வுருபின் முதல் வல்லொற்று மிக் கது. மற்றவையுமிப்படியே வருதலை ஆராய்ந்தறிக.

### சாரியை

243. பதமுன் விகுதியும் பதமு முருபும்
புணர்வழி யொன்றும் பலவுஞ் சாரியை
வருதலுந் தவிர்தலும் விகற்பமு மாகும்.

**இது, உருபு புணர்ச்சிக்கு எய்தியதன்மேற் சிறப்பு விதியாகச் சாரியை மேல் விதிக்கும்படியாகத் தொடங்கி அவை வருமாறு இவ்வாறெனை அறிவிக்குமிடத்து ஒப்பின் முடித்தலால் விகுதிப்புணர்ச்சிக்கும் பதப்புணர்ச்சிக்கும் உடனுணர்த்துகின்றது.**

(இ-ள்) பதமுன் — பதத்தின்முன், விகுதியும் — இறுதி நிலையாவது, பதமும் — பதமாவது, உருபும் — உருபாவது, புணர்வழி—புணருமிடத்து, சாரியையொன்றும்—ஒரு சாரியையாயினும், சாரியைபலவும்—பலசாரியையாயினும், வருதலும்—வருதலும், தவிர்தலும்—வராதொழிதலும், விகற்பமும்—இவ்விரண்டுமாகிய விகற்பமும், ஆகும்—ஆகும். (எ-று.)

**உதாரணம்:** நடந்தனன் எ-ம், நடந்தான் எ-ம், நடந்தன, நடந்த எ-ம், விகுதிப்புணர்ச்சியும் சாரியை வேண்டியும், வேண்டாமலும் விகற்பித்தும் வந்தன.

புளியங்காய் எ-ம், புளிக்கறி எ-ம், நெல்லின் குப்பை, நெற்குப்பை எ-ம், பதப்புணர்ச்சியுட்சாரியை அவ்வாறுயின.

அவற்றை எ-ம், தன்னை எ-ம், ஆனை, ஆவை எ-ம், உருபு புணர்ச்சியுட்சாரியை அவ்வாறுயின.

ஆவினுக்கு, மரத்தினுக்கு, இவைகளிலே சாரியை பல வந்தன.

### சாரியைகள் இவை யென்பது.

244. அன்ஆன் இன்அல் அற்றுஇற்று அத்தம்
தம்நம் நும்ஏ அஉ ஐகுன
இன்ன பிறவும் பொதுச்சா ரியையே.

**இது முன்சாரியை யென்றார், அவை யிவை யென்பது உணர்த்துகின்றது.**

(இ-ள்) அன்....ன—அன்முதல் னகரமெய்யீராகச் சொல்லப்பட்ட பதினேழும், இன்ன பிறவும்—இவை போல்வன

பிறவும், பொதுச் சாரியை—விகுதி பதமுருபென்கிற மூன்று புணர்ச்சிகளிலும் தனிமொழிகளிலும் வருதலினாலே பொதுச் சாரியை யாகும். (எ—று.)

(உ-ம்) ஒன்றன்கூட்டம்—அன்
ஒருபாற்கு—ஆன்
வண்டின் கால்—இன்
தொடையல்—அல்
பலவற்றை—அற்று
பதிற்றுப்பத்து—இற்று
மரத்திலே—அத்து
மன்றம்—அம்
எல்லார் தம்மையும்—தம்
எல்லார் நம்மையும்—நம்
எல்லீர் நும்மையும்—நும்
கலனே தூணி—ஏ
நடந்தது—அ
சாத்தனுக்கு—உ
ஏற்றை—ஐ
உய்குவை—கு
(கோன்—ன்)
அன்—ன்

என முறையே காண்க.

இன்ன பிறவுமென்றதனால் அவன்றனை—தன், அவன்றான்—தான், அவர்தாம்—தாம், புற்றஞ்சோறு—ஆம், இல்லாப்பொருள்—ஆ, என வருகின்றவையும் மற்றுமிப்படி வருமவைகளையுங் கொள்க.

**உருபு புணர்ச்சிக்குச் சிறப்புவிதி.**

245. எல்லா மென்ப திழிதிணை யாயி
னற்றோ டுருபின் மேலு முறுமே
அன்றேல் நம்மிடை யடைந்தற் றாகும்.

**இது ஒருசார் நிலைமொழிகளோடு உருபு புணர்தற்கு 'ஒற்றுயிர் முதலீற்றுருபுகள்' என்பதனால் எய்தியதன்மேற் சிறப்புவிதி உணர்த்துகின்றது.**

(இ-ள்) எல்லாமென்பது—எல்லாம் என்னும் பொதுப் பெயர். இழிதிணையாயின் — அஃறிணையில்வரும்போது அதனோடு ஆறுருபுகளும் புணரின், இடை—இடையிலே, அற்று—அற்றுச்சாரியையும், உருபின்மேல்-உருபின்மேல், உம்-முற்றும்மையும், உறும்—பெறும், அன்றேல்—உயர்திணையில்

வரும்போது, இடை — இடையிலே, நம் — நம்முச்சாரியை, அடைந்து—அடைந்து, அற்றும் — உருபின்மேல் முற்றும்மைபெறும். (எ–று.)

**உதாரணம்:** எல்லாவற்றையும், எல்லா நன்மையும் என வரும். மற்றவைகளோடு மிப்படியே கூட்டுக.

எல்லா நம்மையும்—உயர்திணைத்தன்மைப்பன்மை—இரட்டுற மொழிதலால் இழிதிணையாய் இன் அற்ரோடு என்று கொண்டு எல்லாவற்றினையும் என வருமெனினுமாம்.

246. எல்லாரு மெல்லீரு மென்பவற் றும்மை
தள்ளி நிரலே தம்நும் சாரப்
புல்லு முருபின் பின்ன ரும்மே.

**இதுவுமது:**

(இ-ள்) எல்லாரு மெல்லீரு மென்பவற்று—ஆறுருபும் புணருமிடத்து எல்லாரும் எல்லீரும் என்கிற இருபெயர்களினுடைய விறுதியிலுள்ள, உம்—முற்றும்மைகளை, தள்ளி—தள்ளி, நிரல்—முறையாக, தம்—தம்முச்சாரியையும், நும்—நும்முச்சாரியையும், சார—அவையிருந்தவிடங்களிலே பொருந்த, உம்—அவற்றினலே தள்ளுண்ட முற்றும்மைகள், உருபின் பின்னர்—உருபுகளின் பின்னே, புல்லும்—வந்து புணரும். (எ–று.)

**உதாரணம்:** எல்லார் தம்மையும், எல்லாரையும்
எல்லீர் நும்மையும், எல்லீரையும்
என விகற்பித்து வந்தன.

நந்தம்மை, நுந்தம்மை எனப் படர்க்கைக்குரிய தம்முச்சாரியை தன்மை முன்னிலைகளில் வருதல் 'ஓரிடம் பிறவிடந் தழுவலுமுளவே' என்னும் வழுவமைதி.

247. தான்தாம் நாம்முதல் குறுகும் யான்யாம்
நீநீர் என்எம் நின்னு மாம்பிற
குவ்வி னவ்வரு நான்கா றிரட்டல.

**இதுவுமது:**

(இ-ள்) தான்தாம்நாம் — தான்முதலிய மூன்று பெயர்களும், முதல்குறுகும்—உருபுகள் புணருமிடத்து நெடுமுதல் குறுகி முறையே தன்னை, தம்மை, நம்மை எனவரும், யான் யாம் நீநீர்—யான் முதலிய நான்கு பெயர்களும், என்எம்நின் நும்ஆம்—உருபுகள் புணருமிடத்து முறையே என்னை எம்மை, நின்னை, நும்மை எனவரும், குவ்வின் — இவ்வேழு

